# மறைமலையடிகள் வரலாறு

வித்துவான்

மறை. திருநாவுக்கரசு

பானு பதிப்பகம்

ஏ3/96, கைலாசபுரம்,

திருச்சிராப்பள்ளி - 620 014.

தொலைபேசி : 98422 36935

# மறைமலையடிகள் வரலாறு

வித்துவான் மறை. திருநாவுக்கரசு

வெளியீடு:

**பானு பதிப்பகம்**

ஏ3/96, கைலாசபுரம்,
திருச்சிராப்பள்ளி - 620 014
தொலைபேசி 98422 36935

**Marimalaiyadigal Varalaru**
Viththuvan. Marai. Thirunavukkarasu

| | |
|---|---|
| First Edition | : 2007 |
| No. of Pages | : 112 |
| Size of Book | : 1/8 Demy |
| Paper used for text | : 18.6 Maplitho |
| Printing Type | : 11 Points |
| Published by | : **Banu Pathippakam**<br>No. A3/96, Kailasa Puram<br>Trichirappalli - 620 014.<br>Phone: 98422 36935 |
| Typeset at | : *Thaiyal Graphic Solutions*, Chennai - 14. |
| Printed at | : Udhayam Offset,Chennai - 600 002. |
| Price | : **Rs.70/-** |

# முகவுரை

இவ்விருபதாம் நூற்றாண்டிலே நந்தமிழகத்தின் இணையிலாப் புலவரெனத் தலைமைப் புலவர்கள் யாவராலும் ஒருங்கொத்துப் போற்றிப் புகழப்பட்ட மாபெரும் புலவர் மறைமலையடிகள் ஒருவரேயாவர். இப்புலவர் கோமான்றன் தனிச் சிறப்பிற்குக் காரணங்கள் பல. அவற்றுள் தலையாயது, பிறமொழிச் சொற்களின் கலப்பாலுந்தன் தூய்மை, பொலிவு, உரிமை, ஆட்சியாவும் இழந்து குற்றுயிரும் குறையுடம்புமாகக் கிடந்து அழிவு நிலையிலிருந்து நம் செந்தமிழ் மொழியை அத்தளைகளின்றும் விடுவித்துத் தனிப் பெருமையுற்றுத் தலைநிமிர்ந்து திகழத் 'தனித்தமிழ்' இயக்கங் கண்டமையே யாகும்.

இயக்கங்கண்டது மட்டுல்ல ''பிறமொழிகளின்துணையின்றித் தமிழ்மொழி தனித்தியங்கும் பேராற்றலுடையது'' என்பதனை நிலைநாட்டும் வகையில் நாற்பதுக்கும் மேற்பட்ட செந்தமிழ்ப் பெருநூல்களை யாத்து வாகை சூடியதுமாகும்.

ஆங்கிலத்தும், ஆரியத்தும் இவர்தம் அளப்பரிய புலமை அறிஞர்களால் பெரிதும் போற்றப்பட்டது. ஆங்கிலத்தில் இவர் யாத்த அரிய நூல்கள் மூன்றும், வடமொழியின் சாகுந்தலத்தைத் தூய தனிச் செந்தமிழ் நடையில் மொழி பெயர்த்துதவிய நூலொன்றும் இவர்க்கு அம்மொழிகளிலிருந்து பெரும்புலமையை நன்கு விளக்குவனவாம்.

இன்று, நந்தமிழ் நாட்டில் உயர்ந்தோங்கி வளர்ந்து வரும் பலவகைப்பட்ட நற்கொள்கைகளுக்கெல்லாம் இவராற்றிய அருஞ்சொற்பொழிவுகளும், யாத்த நூல்களும் பெரிதும் காரணமாகும். தமிழ் மக்கள் இத்தண்டமிழ்ப் புலவரைப் போற்றும் புகழ் மொழிகள் எழுத்திலடங்குவனல்ல. தமிழகப் புலவர்க் குழு இப்பெருமகனார்க்குச் செய்னைக் கடற்கரையில், சிலை எழுப்ப முடிவு செய்திருப்பதும், நம் பாரத அரசு இவர்தம் உருவ அஞ்சல்

வெளியிட இருப்பதும் இவ்வுண்மையை நன்கு விளக்கும். இன்று தமிழ்ப்புலவர் ஒவ்வொருவரும், தமிழார்வமுடையவர் ஒவ்வொ வரும் இப்புலவர் கோமானைத் தம் தமிழார்வத்தின் திருவுரு எனத் தனியார்வத்துடன் போற்றி வருவது நாடறிந்த ஒன்றாகும்.

இத்தகு பேரறிஞரான எந்தையாரின் வரலாற்றைத் தமிழ் மக்களின் ஆர்வம் நிறைவாம் வண்ணம் யான், ''மறைமலையடிகள் வரலாறு'' என்ற பெருநூலாக ஏறத்தாழ ஆயிரம் பக்கங்களில் 1959-ல் வெளியிட்டேன். அதனைப் பாராட்டிப் புலவர்களும், செய்தித் தாள்களும், இலக்கியத் திங்கள் வெளியீடுகளும், பேரறிஞர்களும், எழுத்துருவில் பெரிதும் பாராட்டியுள்ளனர்.

நம் தமிழ்நாடு அரசு, அந்நூலின் வெளியீட்டுக்காக ஆசிரியருக்கு இரண்டாயிரம் ரூபாய் உதவியது. உதவிய அரசுக்கு உளமார்ந்த நன்றியுடையேன்.

அப்பெருநூலைக் கற்றார் பலரும், மாணவர்களும், மற்றையோரும் குறுகிய காலத்தில் படித்துப் பயனடையும் வண்ணம் அந்நூலின் சுருக்கம் ஒன்றை வெளியிடல் வேண்டு மென்று என்னைப் பல்காலும் வற்புறுத்தி வந்ததன் பயனே இந்நூல். இச்சுருக்க நூல், பல்கலைக்கழகப் புகுமுக மாண வர்களின் துணைப் பாடமாக இருத்தற்கான வகையில் தேவைப்பட்ட செய்திகளை எல்லாம் தன்னகத்தே தாங்கி நிற்கும் வகையில் எழுதப்பட்டதாகும்.

இச்சுருக்க நூல், கற்பார் பெருக்க நூலையும் கற்றுப் பயனடைவார் என்னும் நம்பிக்கையாலும் இந்நூல் தோன்றியது. இன்று மாணவர்கள் நாளை நாட்டு மன்னர்கள். ஆதலான், இந்நூலை மாணவர்கள் கற்பதனால் தமிழினத்தின் நாட்டின் உயிரென ஒளிரும் செந்தமிழ் மொழியை வாழ்வித்துத் தாமும் வாழ்வர். அடிகளின் குறிக்கோளும் வெற்றி பெறும்.

இங்ஙனம்,

மறை. திருநாவுக்கரசு.

தூத்துக்குடி,

26—4—1962.

# அடிகளின் மாட்சி

மறைமலையடிகள் தமிழ்நாடு செய்த பெருந்தவத்தின் தவ உருவினராவர். உயரிய உரைநடை எழுதுவதிலும், சொன்மாரி பொழிவதிலும் இவர்க்கு ஒப்பாவார் எவருமிலர்.

(கா..சு.பிள்ளை)

மறைமலை ஒரு பெரும் அறிவுச்சுடர், தமிழ் நிலவு, சைவவான், அவர்தம் தமிழ்ப் புலமையும், வடமொழிப் புலமையும், ஆங்கிலப் புலமையும், ஆராய்ச்சியும், பேச்சும், எழுத்தும், தொண்டும் தென்னாட்டை விழிக்கச் செய்தன. தென்னாடு, அடிகளால் விழிப்புற்றது. அடிகளே தென்னாடு. தென்னாடே அடிகள்.

(திரு.வி.க.)

இனி எக்காலும் தமிழ் இறவாதிருக்கவேண்டுமானால் மறைமலையடிகள் திருவடிகளைத் தமிழர் மறவாதிருக்க வேண்டும்.

(டாக்டர். ரா.பி.சே.)

மறைமலை அடிகளைப் போன்ற பேராசிரியர்கள் இனித் தமிழ்நாட்டில் தோன்றுவது மிக மிக அரிது என்றே சொல்லலாம்.

(எஸ்.வையாபுரிப் பிள்ளை)

தமிழ்த் தலைவர் மறைமலையடிகள்...... தமிழ் மெல்ல மெல்ல மணிப் பிரவாள மொழியாக மாற இருந்த தறுவாயில், தன் செம்மையும், சிறப்பும் சிதைவுற நேர்ந்த நெருக்கடியான நிலையில் அதற்குதுணையாய் முன்னின்று தனித் தமிழ் இயக்கம் தோற்றுவித்து வளர்த்த பெருந்தொண்டு அவர் ஆற்றியதாகும். இனித் தமிழ் மொழி தலைநிமிர்ந்து வாழும் என்று நம்பக்கூடிய நிலையில் தமிழை வாழவைத்த பெருமை அவரைச் சார்ந்ததாகும்.

(டாக்டர். மு.வ.)

தனித் தமிழ் நடையின் தந்தை.

(டாக்டர்.அ.சி.)

ஆழ்ந்து பரந்த படிப்பு, கூரிய அறிவு, ஆராய்ச்சித் திறமை...... கடவுளன்பு, அஞ்சா நெஞ்சம்...... இவற்றை உடையவர் அடிகள்.

(கலைமகள் ஆசிரியர். ,கி.வா.ஜா)

அடிகளின் சொல்வன்மையும், குரலினிமையும், பொருளாழமும், மற்றவர்களின் உரைகளில் காணக் கூடுவதில்லை.

(பேராசிரியர்,கல்கி கிருஷ்ணமூர்த்தி)

இந்நாளில், தமிழ் நூலாராய்ச்சி முறைக்கும், திருந்திய செந்தமிழ் உரைநடைக்கும் அடிகள் சிறந்த வழிகாட்டியாய் விளக்குகிறார்.

(ச.சச்சிதானந்தம் பிள்ளை)

தமிழுக்காகவே பிறந்து, தமிழுக்காகவே வாழ்ந்து, தமிழுக் காகவே உயிர் நீத்தவர் அடிகள் ஒருவரேயாவர்.

(முத்தமிழ்க் காவலர்,கி.ஆ.பெ.வி.)

## "மறைமலையடிகள் வரலாறு" (பெருக்கம்)

*நூல் 868+94 ஆகப் பக்கங்கள் 964. விலை ரூ. 15.*

*நூல், டெம்மி அளவில் அழகிய சட்டையுடன் அமைந்துள்ளது. நூலில் முப்பது படங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. கிடைக்குமிடங்கள்.*

1. *சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், 98, கீழைத்தேர்த் தெரு, திருநெல்வேலி-6.*
2. *சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், 1/140, பிராட்வே சென்னை-1.*
3. *சைவ சித்தாந்த புத்தக நிலையம்; 61, திண்டுக்கல் ரோடு மதுரை.*

★★★

# பொருளடக்கம்

# மறைமலை அடிகள் வரலாறு

## [சுருக்கம்]

**பெற்றோர்.**

நம் செந்தமிழ்ச் சோழநாட்டிலே[1] கற்றார் பயிலும் நாகப்பட்டினத்தில் அலைபாடும் கடற்கரையின் வெண்மணற் பரப்பிலே சோலை சூழ விளங்கும் சிற்றூர் காடம்பாடி. அங்குச் சோழியச் சைவ வேளாளர் குடித் தலைவராய் விளங்கிய சொக்கநாத பிள்ளை என்பவர், செல்வச் செழிப்புடன் வாழ்ந்து வந்தார். நாகப்பட்டினத்தில் அறுவை (சர்ஜன்) மருத்துவராக இவர் அரிய தொழில் புரிந்து வந்தார். அந்நகரில் அவருக்கு இரண்டு வீடுகள் உண்டு. இவர் மனைவியார் பெயர் சின்னம்மையார். இவர் பொன்னொளி பொழியும் நிறமும்,சிறந்த தோற்றமும், நிறைந்த பேரழகுமுடையவர். சொக்கநாதர் கருமை நிறமும், எடுப்பான தோற்றமும், உருவத்திருத்தமும் உடையவர்.

சொக்கநாதருக்கு அகவை அறுபதுக்கும் மேலாகி விட்டது. சின்னம்மைக்கு நாற்பத்தைந்துக்கும் மேலாகிவிட்டது. ''இவர் கட்க்கு புதல்வர்ப்பேறு அரிதென'' யாவரும் எண்ணினர். சின்னம்மை மட்டும் நம்பிக்கையுடனிருந்தார். செங்கற்பட்டு நகருக்கு ஒன்பதுகல் தொலைவிலுள்ள எழில் நகர் திருக்கழுக் குன்றம். ஆங்கு மலைமீது அமர்ந்துள்ள சிவபெருமானை வழிபட்டுத் தவங்கிடந்தால் மகப்பேறு வாய்க்குமென அறிந்தார்; சின்னம்மையார். உடனே புறப்பட்டார் குறிஞ்சி அழகும் குளவழகும் சூழ, அழகு நிறைவாய் விளங்கும் திருக்கழுக் குன்றத்தை அடைந்தார் 'சங்குதீர்த்தம்' என்னுந் தண்ணிய பொய்கையில் நீராடினார். மலையை வலம் வந்தார். அதன் மீதேறினார். ஆங்கு அமர்ந்துள்ள முழுமுதற் பொருளாம் சிவபெருமானை -வேதாசலரை வழிபட்டார். தமக்கோர் அரும் புதல்வர் வேண்டுமென இறைஞ்சி நின்றார். நாற்பது நாட்கள் இவ்வாறு நோன்பு செய்து நாகை திரும்பினார்.

---

(1) திருநாவுக்கரசர் தேவாரத் தொடர்.

(2) யாதவர் தெருவில் 19-ம் எண்ணுள்ள இல்லம். இப்போது கடையாக உள்ளது. அடிகள் தோன்றியது இவ்வில்லமே.

**தவத்தோன்றல்:**

அடுத்த ஆண்டு, தனித்தமிழ் ஓங்கவும். சைவநெறி தழைக்கவும் நம் மறைமலை அடிகள் தோன்றினார். (15 -7-1876) திருக்கழுக்குன்றத்துச் சிவபெருமானருளாலே தோன்றிய இக்குழந்தைக்கு, அத்தலக் கடவுள் அமர்ந்துள்ள மலையின் பெயராகிய 'வேதாசலம்' என்னும் பெயரையே பெற்றோர் இட்டனர். வேதம் - மறை. அசலம் - மலை. ஆகவடமொழிப் பெயராய வேதாசலம் என்ற தமது பெயரைத் தனித் தமிழியக்கம் கண்ட காலத்தில் 'மறைமலை' என மாற்றி அமைத்துக் கொண்டார். பெயரை இவ்வாறு மாற்றி அமைத்துக் கொண்ட காலத்தில்[1] அடிகள் துறவியாயிருந்தமையால் அவர்தம் முழுப் பெயர் ''மறைமலை அடிகள்'' என்று வழங்கலாயிற்று.

## மாணவப் பருவமும் தமிழ்க்காதலும்

தன் இளமைக் காலத்தே, அடிகள் நாகப்பட்டினத்தில் நடைபெற்றுவந்த ''வெஸ்லியின் மிஷன் காலேஜில்''[2] பயின்று வந்தனர். தம் கல்வியறிவின் திறத்தாலும், உயர் பண்புகளாலும் அடிகள் கல்லூரித் தேர்வுகளில் சிறந்து தேர்ந்து பரிசுகள் பலவற்றைப் பெற்றார்; அன்றியுந் தம் ஆசிரியர்களாலும், பாராட்டப் பெற்றார்.

அச்சிறு பருவத்தே அடிகள் தமிழ் மொழியிலும், தனி இலக்கியங்களிலும் பெரிதும் ஆர்வம்கொண்டார். அவ்வார்வம் அடிகளுள்ளத்தே ஆராக்காதலாய் வளர்வதாயிற்று. அத்துடன் ஆங்கில இலக்கியங்களிலும் தம்முணர்வைப் பறிகொடுத்தார். கல்லூரியில் கற்பிக்கப்படும், தமிழ்-ஆங்கிலப் பயிற்சிகள் அடிகள் தம் பேரார்வத்துக்கும், பேரறிவிற்கும், மிகவும் குறைவாயிருந்தன.

ஆகவே அடிகள் தம் பள்ளிப் படிப்பை நான்காம் படிவத் துடன் (IV பாரம்) நிறுத்த வேண்டியவரானார். அப்போது அவர் வயது-14,

**நாராயணசாமிப் பிள்ளை**

அந்நிலையில், அடிகள் நாகப்பட்டினத்தில் புத்தகக் கடை நடத்தி வந்தவரான கள்ளர்குலத் தோன்றலார் வெ. நாராயணசாமிப்

(1) இனி, மறைமலையடிகளின் பெயரைச் சுருக்கமாக அடிகள் என்றே நூலுள் குறிப்பிடப்படும்.

(2) உயர்நிலைப் பள்ளிக்குத்தான் அப்போது 'காலேஜ்' என்ற பெயர் வழங்கியது.

பிள்ளை என்பாரிடம் தமிழிலக்கண இலக்கியங்களைக் கற்று வரலானார். திரிசிரபுரம் மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களின் மாணவர்தான் நாராயணசாமிப் பிள்ளை என்பது நினைவுகொள்ளத் தக்கதாம். பல ஆண்டுகள் வரை கற்றுத் தேர்ச்சி பெறவேண்டிய அரிய நூல்களையெல்லாம் அடிகள் ஓரிரு ஆண்டுகளில் இப்புலவர் பிரானிடம் விரைந்து கற்றுத் தேர்ந்தார். அடிகளின் அறிவாற்றலை கண்டு பெரு மகிழ்வும், வியப்புங் கொண்ட ஆசிரியர், அவற்றிற்கேற்பத் தாம் கற்பிக்க வேண்டிய அரிய நூல்களை எல்லாம் மிக விரைவாக அவர்க்குக் கற்பித்து விட்டார். அடிகளின் தமிழ்ப்புலமை அவர் தம் பதினாறாம் ஆண்டிற்குள் நிறைவுற்றது.

அன்றியும் அடிகள் தம்மொடு கற்ற மாணவர்க்குத் தமிழறிவும், சமய உணர்வும் ஊட்ட விரும்பி "இந்துமத அபிமான சங்கம்" என்ற ஒரு சங்கத்தைத் தோற்றுவித்து அதனைப் பேருக்கத் துடன் நடத்தி வந்தார். அரிய பல சொற்பொழிவுளாற்றி அவர்கட்கு அறிவூட்டினார்.

### காதல் மணம்

அடிகள் தம் பன்னிரண்டாம் அகவையில் தந்தையாரை இழந்தார். குடும்பத்திற்கு ஒரே பிள்ளையாதலால் சின்னம்மையாரால் கட்டு திட்டங்களுடன் வளர்க்கப்பட்டார். பதினாறு ஆண்டு நிறைவுற்ற அடிகள் 5அடி உயரமும், அதற்கேற்ற வளமான பொன்னுடலும், திரண்ட தாளுந் தோளும் - அகன்ற மார்பும் - வெண்மை கலந்த செந்தாமரை மேனியும் - பெண்மை பிறங்குந் திருமுகப் பொலிவும், பீடுநடையும் கொண்டு "முருக வேளோ - உருவுகொண்ட காமவேளோ" என்று கண்டாரால் வியந்து போற்றப்பெறும் பேரழகராய் விளங்கினார்.

ஆர்ந்த அழகு - இணையற்ற தோற்றம், நிரம்பிய புலமை , சிறந்த பேரறிவு கொண்டு இணையற்ற இளைஞராய்த் திகழந்த அடிகள், எதிர்காலத்தில் தமிழகத்தின் தனித் தலைவர் எனப் போற்றப்படுவர் என்பதற்கு எடுத்துக்காட்டாக விளங்கினர். புலமையின் உருவாகத் திகழ்ந்த அடிகள் இளமையிலேயே அதற்கான நலங்களால் நிறைந்து விளங்கியமை இயல்புதானே !

இச் சங்கம் இன்றும் நடைபெற்று வருகின்றது.

இத்தகைய தமிழ்ப் பெருமானுக்கு இளமையிலேயே இயற்கையாகப் பண்டைத் தமிழ் மகளின் காதல் உணர்ச்சி அமைந்திருந்ததில் வியப்பேதுமில்லை.

**சவுந்தரவல்லியம்மையார்**

அடிகளின் ஒன்றுவிட்ட மாமன் மகள் சவுந்தரவல்லி. அவர் நிறம் கருப்பு, பண்போ கரும்பு. பொருந்திய உருவம். அடிகளுக்கு மூன்று ஆண்டுகள் இளையவர். சிறு பருவ முதல் அடிகளும், சவுந்தரமும் அன்பு நிறைந்தவர்களாய் ஆடிப்பாடி வளர்ந்தனர். ஆண்டு வளர வளர அவர்களை அறியாமலே அவர்களுக்குள் காதல் வளர்ந்து வந்தது. சவுந்தரத்துக்கு அகவை 13. அடிகளுக்கு ஆண்டு 16.

சின்னம்மையார் தம் தனி மகனுர்க்குக் கடி மணம் செய்ய நினைத்தார். பெற்ருேர் சிலர் தம் சிவந்த – அழகான – நங்கைமாரை அடிகளுக்கு மண முடிக்க முன் வந்தனர். அவர்களில் ஒருத்தியைத் தம் மகளுக்கு மணமுடிக்க அன்னையார் முயன்ருர். அடிகள் காதலில் முனைந்து நின்று தம் அன்னையின் இசைவைப் பெற்ருர். அவ்வளவில் மறைமலை – சவுந்தரம் காதல் வென்றது. திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

**கல்விக் காதல்**

திருமணத்திற்குச் சின்னாள் முன்னர் அடிகள் தம் அன்னையாரிடம் முந்நூறு ரூபாய் பெறுமான ஆங்கில நூல்களின் பட்டியலைத் தந்து அவற்றை வாங்கி வழங்கினாலன்றித் திருமணங்கொள்ளேன் . (நூலுள் இவர் பெயரைச் சுருக்கிச் சவுந்தரம், சாந்தம்மா என்றும் குறிக்கப்படும்.) என்று வற்புறுத்தி நின்றார். அன்னையும் அவ்வாறே அந்நூல்களை வாங்கி அவர்க்களித்தார் . இதனால் அடிகளின் நூல் பயில் விருப்பம் நன்கு விளங்குமன்றோ? அடிகளின் நூல் வாங்கும் இவ்வார்வம் அவர் தம் இறுதிநாள் வரையில் அவர்களை விட்டு நீங்கவில்லை.

**தந்தையாதல்**

அடிகள் தம் பதினெட்டாம் அகவையில் ''சிந்தாமணி'' என்னும் மகளுக்குத் தந்தையானார். 'சீவக சிந்தாமணி' என்பது செந்தமிழின் பெருங்காப்பியங்களில் ஒன்று. சமண நூல். அந்நூலில்

அடிகளார்க்கிருந்த ஆழ்ந்த சுவை உயர்ச்சியின் வெளியுருவந்தான் 'சிந்தாமணி' என்ற பெண்ணின் பெயராக அமைந்தது. இதனால் அடிகளின் இலக்கியப் பித்து நெஞ்சம் விளங்குதல் காணலாம். இந்நிலையில் அடிகள் குடும்பப் பொறுப்பை ஏற்க வேண்டியவராய் விட்டார். தாயாரும் தளர்ந்த பருவத்தினரானார். தந்தையார் தேடிவைத்த பொருள்களும் செலவாய்விட்டன. வளமான வாழ்வுந் தளரலாயிற்று. அது நீக்கி நல்வாழ்வு வாழ அடிகள் வேலை தேட எண்ணினார்.

## புலமை நிறைவு

திங்கள், பதினாறு கலைகளும் நிரம்பப் பெற்றுத்தன் இனிய கதிர்களால் அமுதம் பொழிந்து மண்ணுயிர்களை மகிழ்விக்கின்றது; தான் ஆட்சி செய்யும் உலகை இன்பக் கனவுலக மாக்கி விடுகின்றது. அவ்வாறே, அடிகளும் தம் பதினெட்டாம் ஆண்டில், 'இனித் தமிழில் கற்கவேண்டியதில்லை' என்ற அளவுக்குச் சங்க இலக்கியத் தேர்ச்சி, தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்கள் அனைத்திலும் நுணுகிய பயிற்சி, சங்கப்பிற்கால நூல்களில் பெரும் புலமை, உரையாசிரியர்களின் திறத்தில் முற்றறிவு, சமய நூல்களில் ஆழ்ந்த அறிவு, திருமுறைகளில் ஆய்வு என்றிவ்வாறெல்லாம் கலைப் பயிற்சியால் நிறைவெய்தினார்.

## கட்டுரை தொண்டு

ஆகலான், அரும்பெருங் கட்டுரைகளை எழுதலானார். அவற்றைப் படித்து அறிஞருலகம் ஆரா மகிழ்வடைந்தது. அடிகள் தாம் எழுதத் தொடங்கி பொருள்களால் அப்பொருள்களுக்கே சிறப்பளித்து விட்டார்; தம் அகக் கண்ணால்-அறிவுக் கண்ணால் அடிகள், புலமைத் தமிழுகை இன்ப நிறைவாக்கினார். அவ்வகையில் அடிகளார் அக்காலத்தில் காரைக்காலில் நடந்து வந்த ''திராவிட மந்திரி'' என்னுங் கிழமைத் (வாரம்) தாளுக்கு முதன் முதலாகக் கட்டுரைகள் எழுதி வந்தார். அதன்பின் நாகப்பட்டினத்தில் நடைபெற்று வந்த ''நாகை நீலலோசினி'' என்னும் கிழமைத் தாளுக்குக் கட்டுரைகள் பல எழுதி வந்தார். ஜி.சதாசிவம் பிள்ளை என்னும் சிறந்த தமிழ்ப் புலவர் அதன் ஆசிரியராவார். பிள்ளையவர்கள் அடிகளின் அறிவாற்றலை அவர் தம் இளமைக் காலத்திலேயே கண்டறிந்து அவரை வியந்தார்.

பதினெட்டாண்டில், தமிழ்ப் புலமைக் கடலை எளிதில் நீந்திய இவ்வேந்தலை அக்காலப் புலவர் பலரும் திகைத்துப் போற்றியதில் வியப்பொன்று மில்லையன்றே!

## 'மனோன்மணியம்' சுந்தரம் பிள்ளை தொடர்பு

'மனோன்மணியம்' என்னும் அருந்தமிழ் நாடகத்தை இயற்றிப் பெரும் புகழ் கொண்டவர் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை ஆவர். இவர் திருவனந்தபுரம் அரசர் கல்லூரியில் அறிவு நூற் பேராசிரியராய் அலுவல் பார்த்தவர். அந்நகரில் வாழ்ந்தவர். இவர் தம் மனோன்மணிய நூலை ஊன்றிப் பயின்று அதிலாழ்ந்து சுவை கண்டு பெருங்களி கொண்டார்; நம்மடிகள். இவர், தம் இயற்றமிழ் ஆசிரியர் நாராயணசாமிப் பிள்ளையவர்களிடம் இளம் பருவத்தில் தமிழ் கற்றவர் என்றறிந்த அடிகள் அவர்கட்கு அவர் தம் நூலின் அருமை பெருமைகளை எல்லாம் நன்கு பாராட்டிப் பிறகு தம்மைப் பற்றியும், தம்மாசிரியரைப் பற்றியும் 'அகவற்பா' வில் ஒரு கடிதம் எழுதி விடுத்தார்.

அப்பாட்டின் சிறப்பினை உணர்ந்து பெருமகிழ்வு கொண்ட பிள்ளையவர்கள் அடிகளையும், தம் ஆசிரியரையும் காண விரும்பி அவர்களைத் திருவனந்தபுரம் வருமாறு எழுதியிருந்தார். மகிழ்வுற்ற இருவரும் அந்நகரடைந்து 1895-ம் ஆண்டு நவம்பர்த் திங்கள் கடைசி கிழமையில் ஒருநாள் பேராசிரியரைக் கண்டார்கள். இது பற்றி அடிகள் எழுதியுள்ளவை இவை:- ''அகவற்பாவில் எழுதிய கடிதத்தைக் கண்டு இவரை ஆண்டில் முதியவராகக் கருதியிருந்த சுந்தரம்பிள்ளை அவர்கள், இவர் மிக இளைஞராயிருந்தலை நேரில் கண்ட அளவானை பெரிதும் வியப்புற்றுத் தாம் முன் எண்ணியதனை மொழிந்தார். ஒரு கிழமை வரையில் இவர் பிள்ளையவர்களோடு அளவளாவி இருக்கையில் இவர் 'தொல்காப்பியம்' 'பத்துப்பாட்டு', 'கலித்தொகை' முதலான பழைய சங்கத்தமிழ் இலக்கண இலக்கியங்களிலும் 'சிலப்பதிகாரம்', 'சீவக சிந்தாமணி' முதலிய காப்பியங்களிலும் வல்லுநராயிருந்தலை ஆராய்ந்து பார்த்து, 'இத்துணைச் சிறுபொழுதிலேயே இத்துணை உயர்ந்த நூல்களை இவர் இவ்வாறு பயின்று தெளிந்தமை அரிதரிது'! எனப் புகன்று, அங்ஙனம் தாம் பாராட்டியதற்கு அடையாளமாக, ஒரு நற்சான்று இதழும் எழுதித் தந்தனர் என்பனவாம். அப்போது அடிகளுக்கு அகவை பதினெட்டு.

## மீண்டுந் திருவனந்தவுரம்

சுந்தரம் பிள்ளையவர்கள் திரும்பவும் கடிதமெழுதி அடிகளை 1896-ல் திருவனந்தபுரம் வரவழைத்தார். அப்போது அந்நகரில் மார்த்தாண்டன் தம்பி என்பவரால் வைத்து நடத்தப்பட்ட ஒர் ஆங்கிலப் பள்ளியில் அடிகளைத் தமிழாசிரியராக அமரச் செய்தார். அடிகள் தம் பணியை அங்குத் திறம்பட ஆற்றி வருங்கால் அந்நகரத்துச் சைவர்கள் நடத்தி வந்த சைவசித்தாந்த சபைகள் இரண்டில் சைவ சித்தாந்த சிறப்பியல்புகளைப் பற்றி இடையிடையே சொற்பொழிவுகளாற்றி வந்தனர். அவற்றின் அருமை பெருமைகளை அறிந்த அந்நகரப் பெருமக்கள் அடிகளைப் பலவாறு பாராட்டிச் சிறப்பிக்கலாயினர்.

மேலும், சுந்தரம் பிள்ளையவர்கள் திருவனந்தபுரம் அரசர் கல்லுரியில், 'நாடகத் தமிழை'ப் பற்றிச் சொற்பொழிவாற்ற அடிகளை அழைத்தார். அதற்கிசைந்து அடிகள் 12-9-1896-ல் 'நாடகத் தமிழ்' என்பதைப் பொருளாகக் கொண்டு மிகவும் ஆராய்ந்து கண்டதோர் அரிய விரிவுரையினை நிகழ்த்தினர். அந்நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கிய சுந்தரம் பிள்ளையவர்கள் தம் முடிவுரையில் அடிகளின் ஆராய்ச்சித் திறனையும், சொல்வன்மையினையும் பெரிதும் பாராட்டிப் பேசி மகிழ்ந்தனர். அவையோர் மகிழ்ச்சி எல்லை கடந்தது. இங்ஙனம் திருவனந்தபுரத்தில் இரண்டரைத் திங்கள் வரையில் பெருமை பெற்ற அடிகள் அந்நகர் வாழ்வு தம்முடல் நலத்திற்று ஏற்காமை அறிந்து தம் நகராம் நாகைக்குத் திரும்பினர். அப்போது அடிகட்கு ஆண்டு இருபதே.

### சோமசுந்தர நாயகர்

இவர், சென்னையில் சூளை என்ற பகுதியில் வாழ்ந்தவர். வன்னியர் மரபினர். இந்து சமயப் பிரிவுகள் அனைத்தையும் கற்றுத் தேர்ந்தவர். வேத, ஆகம, உபநிடத புராணங்களின் கரை கண்டவர். தமிழ்ச்சிவ நூல்களின் எல்லையறிந்தவர். வைணவராய்ப் பிறந்த இவர், சமயங்களின் கொள்கைகளை எல்லாம் நன்காராய்ந்து அவற்றுள் சிறந்ததுசைவ சமயமே எனக் சைவரானார்.

அரங்கசாமி என்ற தம் பெயரையும் சோமசுந்தரம் என மாற்றிக் கொண்டார். நாவலர்க்குத் தலைவர். பெரும் பேச்சாளர். பொன்னொளிர் மேனியர். ஆன்ற தோற்றத்தார். வடமொழியில்-

அதிலும் வேதம் முதலிய சமய நூல்களில் இவர்க்கிருந்த ஆழ்ந்த புலமை, ஆன்றோர்களால் பெரிதும் போற்றப்பட்டது. சமய தத்துவம் தொடர்பாக அரிய நூல்கள் 128 எழுதிய நூலாசிரியர். அக்காலத்தின் சைவ மாமன்னர் இவரே. இப்பெரியாரின் மாட்சிகளை அடிகள் எழுதியுள்ள, ''சோமசுந்தரக் காஞ்சியாக்கம்'', ''சோமசுந்தர நாயகர் வரலாறு'' ஆகிய நூல்களிற் காணலாம். புலமை உலகின்-சைவ உலகின் இணையற்ற தலைவராம் அடிகளின் உள்ளக் கோயிலில் அமர்ந்த அருட்குரு இவரெனில் இவர் தம் பெருமைக்கு வேறு எடுத்துக்காட்டுகள் மிகையாகு மன்றோ!

அந்நாட்களில் நாயகர் பிரான் நாகைக்குப் பன்முறை போந்து அரும்பெறல் ஆற்றுவதுண்டு. அடிகள் அவற்றைக் கேட்டுக் கேட்டு நாயகரின் அறிவுக் கடலில் திளைத் தாடி அவரைத் தம் மனக் கோயிலில் இருத்தி வழிபட்டு வந்தார். எனினும் இருவரும் ஒருவரையொருவர் நேரில் அறிந்து அளவளாவவில்லை. நாயகர் இவரை அறியார். இவர் அவரை அறியார். புத்திளைஞராகிய இவர் அவரை அணுகத் துணிவரா! இருவரும் ஒன்றுகூட அரிய வாய்ப்பு ஒன்று நிகழ்ந்தது.

அது;-1897-ம் ஆண்டில் நாகையில் நடைபெற்று வந்த 'ஸஜ்ஜன பத்திரிகா' என்னும் கிழமைத் தாள் ஒன்றில், மாயாவதி ஒருவர், நாயகரின் சைவ சித்தாந்தக் கருத்துக்களை மறுத்தெழுதி வந்தார். அதனைக் கண்ட அடிகள், நாயகர் கருத்துக்களே பொருத்த முடையன என்பதனையும், அம்மாயாவாதியின் கருத்துக்கள் பொருத்தமற்றவை என்பதனையும் எடுத்துக்காட்டி நாகை 'நீலலோசினி'' இதழில் 'முருகவேள்' என்ற புனை பெயரில் தொடர்ச்சியாகப் பல கட்டுரைகள் எழுதி வந்தார்.

அக்கட்டுரைகள், அடிகளின் ஆராய்ச்சித் திறத்தையும், அறிவின் நுட்பத்தையும், உரைநடையின் அழகையும் விளக்கி நின்றமை அறிந்து அறிஞரெல்லோரும் கழிபேருவகை கொண்ட மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. அவர்கள் நாகை வெளிப்பாளையம் சைவ சித்தாந்த சபையாருக்கு இம் முருகவேள் யார்?என எழுதித் தெரிந்து கொண்டார்கள்.

அடுத்துச் சில தினங்களில் நாயகர் சொற்பொழிவாற்ற நாகை வந்தார். அவர் விரும்பியாங்கு, இடை நின்றார், அடிகளை

அழைத்துச் சென்று நாயகர்க்கு அறிமுகப்படுத்தினர். உயர்ந்த குருவும், அரிய மாணவரும் ஒன்று கூடினர். அறிவின்பத்தில் திளைத்து ஆரா மகிழ்வுற்றனர்.

அடிகளின் திறங்கண்ட நாயகர், அவர்பால் அளவிலா ஆர்வங்கொண்டு அவரைத் தம் புதல்வர் போறகருதிப் பேரன்பு பாராட்டி அவரை நோக்கி, உன்னை விரைவில் சென்னைக்கு வருவிப்போம், நீ, அப்பக்கங்களில் இருந்தாற்றான் நலம் உண்டாகும்'' என்று கூறிச் சென்னை சென்றார். அடிகளும் தம் ஆசிரியரைத் தந்தைபோற் பாராட்டிப் பேரன்பு கொண்டார். இருவருக்கும் கடிதப் போக்குவரவுகள் நிகழ்ந்தன.

**நாயகர் கட்டளையும் உதவியும்**

அடிகளின் சைவ சித்தாந்த நுட்ப அறிவினைத் தமிழுலகத்திற்கு வழங்க, ஆர்வம் கொண்டார் நாயகர். அதனால், சீர்காழிச் சிற்றம்பல நாடிகள் அருளிச் செய்த 'துகளறு போதம்' என்னும் சைவ சித்தாந்த நூலை அடிகட்கனுப்பி, அதற்கோர் உரை வரையுமாறு கட்டளையிட்டனர். அதற்கிசைந்து அடிகள் அந்நூலின் நூறு செய்யுட்களுக்குச் சிறந்ததோர் உரை எழுதி அதனைத் தம் ஆசிரியர்க்கு அனுப்பினர். அவ்வுரையின் நுட்பத்தையும், சித்தாந்தத் தெளிவையும் சொற்சுவைகளையும், ஆழ்ந்துண்டு மகிழ்ந்த நாயகர் இவ்வுரை, 'சிவஞான முனிவர் உரையோடு ஒப்பது' என்று மகிழ்ந்து பாராட்டியதோடு அதனைத் தம் செலவிலேயே அச்சிட்டு வெளிப்படுத்தினார்,

இன்னும், அக்காலத்தே சென்னையிலிருந்த மாயாவாதி ஒருவர், தெய்வத் திருவள்ளுவர் அருளிச் செய்த திருக்குறளின் முதற் குறளுக்குத் தம் மாயாவாதக் கொள்கையின்படி விளக்க உரைவரைந்து 'முதற் குறள் வாதம்' என்றதோர் நூலை வெளியிட்டனர். அது கண்ட அடிகள், அந்நூலுக்கு மறுப்பாக 'முதற் குறள் வாத நிராகரணம்' எனப் பெயரமைந்த ஒரு நூலை வெளியிட்டனர். இவ்வளவும் அடிகள் நாகையிலிருந்துபோது செய்தனவாகும் அப்போது அடிகள் அகவை-21.

**'சித்தாந்ததீபிகை' ஆசிரியராதல்.**

நாயகர் அடிகளைச் சென்னைக்கு வருவிக்கும் வாய்ப்பைக் கருத்துடன் எதிர்பார்த்திருந்தார். அக்காலை நாயக்கர் பால்

சித்தாந்தங்கேட்டுணர்ந்த ஜெ.எம். நல்லசாமி பிள்ளை என்பார் 'சிவஞானபோதம்' என்னும் ஒப்பற்ற விழுமிய சைவ சித்தாந்தத் தமிழ் முதல் நூலை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளிப் படுத்தினார். அன்றியும், பிள்ளையவர்கள் சைவ சித்தாந்த உண்மைகளை நன்கு பரவச் செய்யும் விருப்பம் மிக உடையவராய் 'சித்தாந்ததீபிகை' அல்லது 'உண்மை விளக்கம்' என்னும் ஒரு திங்கள் இதழைத் தமிழிலும், ஆங்கிலத்திலும் வெளியிடக் கருதினார். அத்துறையில் தம்முடனிருந்து அறிவுப்பணி புரியும் ஆற்றலுடையார் யாரென்று ஆராய்ந்திருக்கை கையில் நாயக்கர், 'இவரே இது செய்தற்குத்தக்கார்' என்று அடிகளைப் பற்றித் தக்கபடி எடுத்துரைத்தார். மற்றும், நாயக்கர், அப்போது சீர்மையின் நடுவராகச் (ஜில்லா-முன்சீப்)

சிற்றூர்*(சித்தூர்) நகரிலிருந்த நல்லசாமி பிள்ளையவர் களையும், அடிகளையும், சென்னைக்கு வருவித்து இருவரையும் ஒன்று கூட்டினர். அடிகளின் திறமனைத்தும் அறிந்து மகிழ்ந்த நல்லசாமி பிள்ளையவர்கள், அடிகளைத் தம்முடன் சிற்றூர்க்கு அழைத்துச் சென்றார். அடிகளின் உதவிகொண்டு 'சித்தாந்த தீபிகை' எனப்பெயரிய திங்களிதழ், தமிழ்ப் பதிப்பின் முதல் இலக்கம் 1897-ம் ஆண்டு சூன் திங்கள்21-ம் நாள் வெளிப்படுத்தப்பட்டது. அதன் முதல் ஐந்து இலக்கங்களுக்கே, அடிகள் ஆசிரியராய் இருந்து எழுதிவந்தார்.

குறித்த சித்தாந்த தீபிகை ஐந்து இலக்கங்களிலும் 'திருமந்திர'த் திலுள்ள 'அன்புடைமை', இரந்தார்க்கீதல்', 'அறஞ்செயான் திறம்', என்னும் மூன்றியல் முப்பது பாட்டுகளுக்கும், சிவஞான சித்தியார்' அளவையில் காப்புச் செய்யுளோடு பதினான்கு செய்யுட்களுக்கும், தாயுமான சுவாமிகள் பாடல், 'பரிபூரணானந்த போதம்', பத்துச் செய்யுட்களுக்கும் 'பொருள் விளக்கம்' எட்டுச் செய்யுட்களுக்கும் எழுதிய விளக்க உரைகளும், 'குறிஞ்சிப் பாட்டைப்பற்றி எழுதிய கட்டுரைகளும் 'அன்பு', 'அருள்' என்பன மொழிபெயர்த்து வரைந்த நான்கு செய்யுட்களுக்கும் ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்த்து வரைந்த நான்கு செய்யுட்களும், 'மூன்று கனவு' என்பது முதலான குறிப்புகளும் அடிகளால் எழுதப்பட்டு அத்தீபிகையின் முதன்

* இப்போது இச்சிற்றூர் (சித்தூர்) நகர் ஆந்திர நாட்டிலுள்ளது.

மூன்றிலக்கங்களில் வெளிப்படுத்தப்பட்டனவாகும். இவற்றால், அடிகள் தம் புத்திளமைக் காலத்தில் பெற்றிருந்த பெரும் புலமையினையும், ஆழ்ந்த அறிவினையும் ஒருவாறு அறியலாகும். சிற்றூர்ப் பணி அவ்வளவில் நின்றது.

## சென்னை வாழ்க்கை

அக்காலத்தில் சென்னையில் பெரும்புகழ்பெற்று விளங்கியது கிறித்தவக் கல்லூரி. இப்போதும் அது சென்னையை அடுத்துள்ள தாம்பரத்தில் சிறப்புடன் திகழ்கின்றது. அந்நாளில் அக்கல்லூரியின் முதல்வராய் விளங்கியவர் டாக்டர். மில்லர். ஆட்சிபுரிந்த வெள்ளை இனத்தைச் சார்ந்தவர். இப்பெருமகனார் தம் கல்வி, கேள்வி அறிவாற்றல்கள், அறிஞருலகில் அளவின்றிப் பாராட்டப் பட்டார்.

அக்கல்லூரிக்குத் தமிழாசிரியர் ஒருவர் தேவைப்பட்டார். மில்லர் ஏற்பாட்டின்படி தமிழாசிரியரைத் தேர்ந்தெடுக்க அவர்கட்குத் தேர்வு ஒன்று நடத்தப்பட்டது. அத் தேர்வினை அக்காலப் பெரும் புலவர்களில் 60 பேர் வரையில் எழுதினர். நாயகர் ஆணைப்படி அடிகள் நாகையிலிருந்து சென்னை போந்து தேர்வெழுதினார். அறுபது பேரில் அகவையிற் குறைந்தவர் அடிகளேயாவர். வெற்றி, அடிகட்கே கிடைத்தது.

தேர்வு நடத்தியவர், கிறித்துவக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், வி. கோ. சூரியநாராயண சாஸ்த்திரியவர். தேர்வில் முதல்வராய்த் தேர்ந்த அடிகளைச் சாஸ்த்திரியார் தனியே அழைத்துத் தொல்காப்பிய இலக்கணத்திலிருந்து எளிதில் விடையளிக்க வொண்ணாக் கேள்விகள் மூன்றினைக் கேட்டார். அடிகள் எளிதாக விடையளித்தார். சாஸ்த்திரியார் அடிகளின் இத்திறமைகண்டு அவரை அளவின்றிப் பாராட்டினார்.

இளமை மிடுக்கும், புலமைத் துடுக்கும் உடைய அடிகள், 'இவரென்ன நம்மை ஆராய்வது?' என்று ஆணவம் கொண்டவராய் அவரை நோக்கி "யாம் கேட்கும் மூன்று வினாக்களுக்குத் தாங்கள் விடை யிறுக்க வேண்டுமென்றார். அவ்வாறே கேட்டார். சாஸ்த்திரியார் நீடு நினைந்து இறுதியில், அடிகளை நோக்கி, "நீரே இம் மூன்றிற்கும் செய்தார். அவைகளும் தொல்காப்பியம் பற்றிய

நுணுக்கமான ஆய்வுக் கேள்விகளாகும். அடிகளின் ஆழ்ந்த புலமை கண்டு சாஸ்த்திரியார், வியந்தார், பலவாறு பாராட்டினார்.

### சாஸ்த்திரியார் பெருந்தகைமை

தம்மைக் கேள்வி கேட்டவரென்று கருதாது சாஸ்த்திரியார் அடிகள்பால் பேரன்பு கொண்டார். மில்லரிடம் அடிகளை அழைத்துச் சென்று அவர் தம் ஆழ்ந்த அரும்புலமை, கூரறிவு முதலியவற்றை எடுத்துக்கூறி அவரையே தமிழாசிரியராக்குமாறு கேட்டுக்கொண்டார். 'புலன் அழுக்கற்ற அந்தணாள' ராய சாஸ்த்திரியின் பெருந்தகை நினைதோறும் நினைதோறும் இனிமை யாகின்றது. அடிகள் ரூ. 25 சம்பளத்தில் மில்லரால் 9-3-1898-ல் தமிழாசிரியராக்கப்பட்டார். அப்போது அடிகளின் வயது 21. பெரும் புலவர் பலர் ரூ.15-க்கே அப்பணியைப் புரிய முன்வந்தனர். கிறிஸ்தவக் கல்லூரி ஆசிரியப்பணி அவ்வளவு சிறப்புடையது. ஆசிரியப் பணிகளேற்ற அடிகள் தம் குடும்பத்துடன் சென்னையில் குடியேறி வாழலானார்.

### அருமை நண்பர்கள்

சாஸ்த்திரியார் அடிகள்பால் கொண்ட பேரன்பும் அவர்க்குச் செய்த உதவிகளும் அளவிலா அடிகளும் அவ்வாறே அவரிடத்துக் கொண்ட அன்பிற்களவில்லை. அடிகள் தனித்தமிழியக்கம் பற்றி நினையாத நாளிலேயே அளவிறந்த தமிழ்ப்பற்றின் காரணமாகச் 'சூரிய நாராயண சாஸ்த்திரியார்' தம் பெயரை 'பரிதிமாற்கலைஞன்' என்று மாற்றிக் கொண்டார். தூய உயர்ந்த- எடுப்பான நடையில் சில தமிழ் நாடகங்களையும், வேறு ஆராய்ச்சி நூல்களையும் எழுதினார்.

சாஸ்த்திரியாரின் இணையில்லாத தமிழார்வங்கண்டு அடிகள் அவர்பால் மிக்க அன்புடையவராய் - நண்புடையவராய் மகிழ்ந்தார். தனிப்பட்ட முறையிலும், தம் குடும்ப நலனிலும் சாஸ்த்திரியார் காட்டிய பேரன்பை அடிகள் தம் வாழ்நாள்காறுங் கூறிக்கூறி கண்ணீர் விடுவதுண்டு. ''பரிதிமாற்கலைஞர் பேரழகாம்.'' மிக இளமைப் பருவத்தே அவர் மறைந்துவிட்டமை அடிகளை மிகவும் வருத்தியது. அவர்கள் நட்புச் சில ஆண்டுகளே நிகழ்ந்தன. இடையில் நமன் புகுந்து சாஸ்த்திரியாரை அழைத்துச் சென்றான். இவர்கள் தம் நட்பின் இனிமையை எண்ணுங்கால்,

"நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்
தொறும் பண்புடையாளர் தொடர்பு."

என்னுங்குறள் நம் மறிவகத்தே தோன்றி நனியின்பம் நல்குகின்ற தன்றோ?

## ஆசிரியத்திறம்

பேரழகு, அதற்கேற்ற பேரறிவு, பெரும் புலமை கொண்டிலங்கிய அடிகள் இனிமைக்கு இனிமை தரும் இனிய குரலுடையவர், வெட்டெனப் பேசார். விரைந்துரையார், மாணவர்கட்கு உளங்கொளச்சொல்லும் நாவன்மையுடையவர். தாம் கற்பிக்கும் பாடல்களை இசையுடன் பாடிப்பொருள் விளக்குவார். இசை கேட்ட நாகம்போல் மாணவர்கள் அசைவற்று இருந்து அடிகள் உரைப்பனவற்றைக் கேட்டு மகிழ்வர். கற்பிக்குங்கால் அடிகள் இடையிடையே உலகநடை, நகைச்சுவை களைக் கையாள்வர். அதனால் மாணவர்கள் அயர்வொழிந்துக் கிளர்ச்சியுடனிருப்பர். அவர் தம் விளக்க உரைகளும், ஆராய்ச்சி உரைகளும் மேற்கோளுரைகளும், பாடல்களும், மேனாட்டு முறை பற்றிய திறனாய்வுகளும் மாணவர்களை மெய் மறக்கச்செய்யும். சுருங்கக் கூறுமிடத்து அடிகள் நல்லாசிரியவியலின் உருவென ஒளிர்ந்தார்.

## மாணவர் பாராட்டு

மாணவர்கள் அடிகள்பால் கொண்டிருந்த பெருமதிப்பும், பேரன்பும் பின்வரும் செய்தியால் விளங்கும். ஒருகால், அடிகள் பி.ஏ., வகுப்பிற்கு 'முல்லைப்பாட்டு' என்னும் சங்க நூலைப் பாடம் சொல்ல நேர்ந்தது. அப்போது அடிகள் 'பாட்டென்பது யாது?' என்பது பற்றித் தமிழிலும், ஆங்கிலத்திலும் தாம் ஆராய்ந்துகண்ட முடிவுகளை எடுத்து விளக்கினார். அன்றியும், முல்லைப் பாட்டுக்குப் பொருத்தமான உரை ஒன்றையும் வகுத்துக் கொடுத்தார்.

## முல்லைப்பாட்டு - ஆராய்ச்சி உரை

முல்லைப்பாட்டுக்கு நச்சினார்க்கினியர் உரை ஒன்றுண்டு. அவ்வுரை அந்நூலின் வரிகளுக்கு நேரே தொடர்பாகப் பொருள் கூறாமல், மெய்யுளின் வரிகளைச் - சொற்களை இங்குமங்குமாக

எடுத்துக்கொண்டு கூட்டு முறைப்படி பொருள் கூறிச் செல்கின்றது. இம்முறை படிப்பவர்க்கு நேரேதொடர்பாக பொருள் உணராவாறு இடர் செய்வதாகும். இக்குறையைப் போக்கவே, அடிகள் செய்யுள் வரிகளுக்குத் தொடர்ந்து நேரே பொருள் கூறி விளக்கம் செய்தனர். இதனால் மாணவர்கள் நூலின் பொருளை எளிதின் உணர்ந்து மிகிழ்ந்தனர். தம்போல் ஏனை மாணவர்களுக்கும் இந்நூற் பொருளை எளிதின் உணர்ந்தின்புற அடிகளின் தொடர்ந்துரை கூறும் முறையைப் பெரிதும் பாராட்டி 'முல்லைப்பாட்டுக்கு' அவ்வாறே நேர் உரை ஒன்று எழுதி வெளியிடுமாறு அடிகளை வேண்டினர். அவ்வெளியீட்டுக்கான பொருளைத் தமக்குள் தொகுத்து அடிகளிடம் அளித்தனர்.

## பட்டினப்பாலை ஆராய்ச்சி உரை

சில ஆண்டுகட்குப்பின் இவ்வாறே பாடப் பகுதியாக வந்த 'பட்டினப்பாலை'க்கும் நேர் உரையும், ஆய்வுரையும், வெளியிடுமாறு மாணவர்கள் தமக்குள் பொருள் திரட்டி அடிகளிடம் தந்தார்கள். இவ்வகையில்தான் அடிகள் 'முல்லைப் பாட்டு ஆராய்ச்சியுரை', 'பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை' என்ற நூல்களை 1903, 1906, 1910-ல் வெளியிட்டார்கள். பின்பு இருமுறை தம் செலவில் அவைகளை வெளியிட்டனர்.

இவ்விருநூல்களும் அடிகளின் உரைவரையும் ஆற்றலையும், ஆய்வுத்திறனையும் நன்கு விளக்குவனவாகும். இவ்வுரைகளை அன்றும் இன்றும் தமிழ்ப்புலமை உலகமும், மாணவருலமும் உச்சி மேற்கொண்டு போற்றி வருவதை யாவருமறிவர்.

## குரு பத்தி

அடிகள் ஆசிரியப் பணி ஏற்றுச் சென்னையில் குடிபுகுந்தது நாயகருக்கு அளவில்லா மகிழ்ச்சியையும், மன அமைதியையும் தந்தது. ஆசிரியரும் மாணவரும் பேரன்புடன் நெருங்கிப் பழகினார்கள். பெரும் பாலும் ஒவ்வொரு நாளும் ஒருவரை யொருவர் கண்டு அளவளாவினர். அப்போதெல்லாம் நூல்களைப் பயில்வர், நூலாராய்ச்சி செய்வர், நூல்கட்கு உரை காண்பர், நூலெழுதுவர், நாயகர் வீட்டில் அடிக்கடி அடிகட்கும் அவர் குடும்பத்தார்க்கும் உணவூட்டு நடைபெறும்.

ஒருநாள் நாயகரிடம் அடிகள் "தாங்கள் எனக்குச்* சிவஞான போதத்தைக் கற்பித்தருள வேண்டுமென இறைஞ்சினர். அதற்கு நாயகர், *"அப்பன்! நீயோ சிறந்த அறிஞன்; புலவன். சிவநெறியின் சாத்திர நூல்களை எல்லாம் முன்பே நன்கு கற்றுத் தெளிந்துள்ளாய். அவற்றின் அரும் பொருள்களைப் பற்றி எழுதுகின்றாய் - பேசுகிறாய்! உனக்குப் பாடம் சொல்ல என்ன இருக்கின்றது?" என்றார்.

அவர் உரைக்கு விடையாக அடிகள், "ஐயா! குருவினிடம் முறைப்படி ஞான நூல்களைப் பாடம் கேட்டல், மாணவன் கடமை அன்றே? தங்களிடம் பாடம் கேட்டேன், என்றபேறு எனக்கு வேண்டுமல்லவா? அன்றியும் நம் சைவ சித்தாந்த உண்மை களையும், விளக்கங்களையும் எடுத்துரைக்கும் ஆற்றல் அறிவிலும் முதிர்ந்துள்ள தங்கள் தெளிவுரைகள் என்போன்ற இளைஞர் கட்குண்டாமோ? ஆதலின், சிவஞானபோதத்தை அருள் கூர்ந்து எனக்குப் பாடம் சொல்லியருளல் வேண்டுமென வற்புறுத்தினார்.

மாணவரின் பணிவுரைகள் - உண்மை உரைகளை ஏற்று நாயகர் பாடம் சொன்னார். அடிகள், அதுகேட்டு மிகவும் மகிழ்ந்தார் நாயகரின் அறிவாற்றல்களை மேலும் மேலுந்தாமறிந்து வியந்தார்.

## நாயகர் பெரும் பிரிவு

அடிகளுக்கு, அன்பால் அம்மையப்பராய், அறிவால் குருவாய், அளவளாவலால் நண்பராய் இலங்கிய மாபெருங்குரவர் நாயக்கர். 22.2.1901-ல் மறைந்தார். அதனால் , அடிகள் பட்ட 'துயரையாரே அறிவார்? குருவின் பிரிவாற்றாது கையறுநிலையாகக் கண்ணீர் அருவி எனப்பொழிய "சோமசுந்தரக் காஞ்சி" என்னும் நூலை அடிகள் இயற்றினார். அந்நூல், சங்க இலக்கியம்போல் சிறந்த அமைதியுடைய தென்புலமை உலகம் அடிகளைப் பாராட்டுவதாயிற்று.

## அருட்பா மருட்பா போர்

அடிகள் கிறித்துவக் கல்லூரியில் பெரும் புகழுடன் பணியாற்றிக் கொண்டும், அரிய நூல்களை ஆய்ந்துகொண்டும்,

---

* சைவ சமயக் கொள்கைகளை வரையறுத்துக் கூறுஞ் செய்யுள் நூல்.

* நாயகர் அடிகளை "அப்பன்" என்றே அழைப்பர்.

எழுதிக்கொண்டும் சென்னையின் பல பகுதிகளில் சொற் பொழிவுகளாற்றிக் கொண்டும், இனிதே வாழும் நாட்களில்;

**நா. கதிரைவேற் பிள்ளை**

யாழ்ப்பாணம், கதிரைவேற் பிள்ளை என்னும் மாபெரும் சைவப் புலவர், சென்னையின் பல பகுதிகளிலும் பெரும் சொற்பொழிவுகளாற்றியும், திரு. வி. கலியாணசுந்தர முதலியார் முதலிய மாணவர்க்குத் தமிழிலக்கியங்களைப் பாடம் சொல்லியும் சென்னை வெஸ்லிக் கல்லூரித் தலைமைத் தமிழாசிரியராகப் பணியாற்றியும் வந்தார். பெரு நாவலராகிய இவர் வடமொழியும் நன்கறிந்தவர். நைடதத்திற்கு அகல உரை கண்டவர்.

**நாவலர் பிரான் (1823-1879)**

சிவநெறியும் செந்தமிழும் தம் முழு அறிவாற்றலுடன் வீற்றிருக்கும் திருநகர் யாழ்ப்பாணம். அந்நகரின் அறிவுயிராய்-சிவநேயச் செல்வத்தின் உருவாய் இலங்கியவர் ஆறுமுக நாவலர் ஆவர். அந்நாளில் இப்பிரான் ஈழத்திலன்றித் தமிழகத்திலும் தலைசிறந்த புலவராய்ச் சிவநெறித் தலைவராய்த் திகழ்ந்தார். எழுத்திலும் பேச்சிலும் இவருக்கு நிகரிவரே. " என்கடன் பணி செய்து கிடப்பதே." என்ற அருள்மொழிக்கு இலக்காய் இலங்கித் தவ ஒழுக்கத்திலும் மாபெரும் முனிவராய்த் துலங்கினார். சைவம்-தமிழ் இவற்றை வளர்த்தலே தம் வாழ்வின்பமாகக் கொண்டு அவற்றிற்காக அயராதுழைத்த அந்தணனார். இத்தொண்டிற் கிடையூறாம் என்று இனிய இல்லற வாழ்வை ஏற்காத வள்ளல். இவர் பெருமை விண்ணுலகையும் விஞ்சும், இவர் நம் அருள் வரலாற்றை தனியே படித்தறிய வேண்டும்.

இந்நாயனார், தமிழுலகத்திலிருந்த போது தம் காலத்தவரான வடலூர் வள்ளல் - ராமலிங்க அடிகளின் அருட்பாப் பாடல்கள் நாட்டில் எங்கும் தேன்மழை எனப் பொழிதலையும் அடியவர்கள் அது நுகர்ந்து ஆரா இன்பத்துடன் அப்பாடல்களைப் பாராட்டு தலையும் அறிந்தனர். இருவரும் ஒருவரையொருவர் கண்டளவளா வியதும் உண்டு.

நாவலர் பெருமான் நாயன்மார்களின் தேவாரத் திருமுறை களில் அளவில்லாப் பத்திமை உடையவர். அவற்றை வடமொழி வேதத்தினும் விழுமிதாகப் போற்றுபவர். நாயன்மார்களைக்

கடவுளுக்கு மேலாக மதித்து அன்பு செய்பவர். சிவபெருமான் தண்ணருள் கொண்டே நாயன்மார்கள் பாடினார்களாதலின் அவர்கள் தம் பாடல்களே ''அருட்பாக்கள்'' எனவும், புலமைமிக்க ஏனைய அடியவர்கள் பாடிய பாக்களை 'அருட்பாக்கள்' எனக் கூறுவது பொருந்தாதெனவும், அவ்வகையில் தாயுமானவர் பாடல், பட்டினத்தார் பாடல், என்னும் வழக்கினைப்போல ராமலிங்க சுவாமிகள் பாடல் என்றுதான் வழங்கல் வேண்டுமேயன்றி அவர் பாடல்களை 'அருட்பா' என வழங்குவது தவறாகும் எனவும் உரைத்தார்.

அந்நாட்களில், பொதுமக்களுக்கு எளிதாகப் பொருள் விளங்கி அவர்கட்கு மன உருக்கத்தைத் தரும் வள்ளல் பாடல்கள் எங்கும் பெருவழக்காய் வழங்கின. இதனால், 'தேவாரத் திருமுறைகள் மதிப்பிழந்து வழக்காறொழிந்துவிடுமோ என்றஞ்சியே' நாவலர், வள்ளலார் பாடல்களை 'ராமலிங்க சுவாமிகள் பாடல் என்று கூறலாம்' அருட்பா, எனக் கூறல் பொருந்ாதென்றாரேயன்றி வள்ளலாரையோ அல்லதவர் பாடல்களையோ பொறாமை காரணமாக இகழ்ச்சியாகக் கூறினார்.

அருட்சான்றோராய நாவலரின் இக்கருத்தறியாத அருட்பா அன்பர்கள் நாவலரை இகழ்ந்து அச்சிட்ட, துண்டு விளம்பரங்களை எங்கும் பரப்பிக் கலகம் விளைவித்தனர்.

வள்ளலாரும், நாவலரும் மறைந்த பிறகும் இப்பூசல் இரு திறத்தாரிடையும் வளர்ந்து வந்தது. கதிரைவேற்பிள்ளை காலத்தில் இக்கிளர்ச்சி மேலோங்கியது. நாயன்மார்களிடத்தில் அளவில்லாப் பக்திமை பூண்டவர். உறுதியான சிவநெறியாளர். விருப்பு வெறுப் புணர்ச்சி மிக்கவர். நாவலரைவிட ஒருபடி மேலே சென்றார். வள்ளலார் பாடல்களை 'மருட்பாக்கள்' என்றார். அதாவது அறியாமையால் பாடப்பட்டப்பாக்கள் என்றார். 'மருட்பா' என்ற நூலும் எழுதி வெளியிட்டார்.

சென்னை வாழ் சிவனடியார்களில் பொதுமக்களாயுள்ளார், இது பொறாது கொதித்தெழுந்தனர். 'ராமலிங்க வள்ளலும் நாயன்மார்களைப் போலவே பேரம்பலத்தாடும் பெருமானை வழிபடும் கடவுளாகக் கொண்டவர். பல்லாயிரக்கணக்கான தேனினும் இனிய செந்தமிழ்ப் பாக்களால் சிவபெருமானையே

பாடிப்பாடி உருகியவர். அருட் புலவர் மண்ணுயிர் பால் எல்லையற்ற அருளுடையவர். வழி வழி நாயன்மார் மரபில் வந்த தெய்வப் பெரியார். அம்புலவர் அருளாற்றான் தம் 'அருட்பாக்களை' இயற்றினார். அப்பாடல்கள் யாவும் தேவாரத் திருமுறைகள் போலவே சிவபெருமானையே முழுமுதல் பெரும் பொருளாகக் கொண்டும், சிவநெறியையே ஒரு பெருநெறி எனக் கொண்டும் போற்றுவது. ஆதலால் வள்ளலார் பாடல்கள் 'மருட்பா' என்பது அடாதெனக் கூறிக் கிளர்ச்சி செய்யலாயினர்,

அரசியல் கிளர்ச்சிகள் ஒன்றுமில்லா அக்காலத்தில் சென்னையில் அருட்பா- மருட்பாக் கிளர்ச்சி தெருத் தெருவாக- வீடு வீடாக நடைபெற்றது. இரு திறந்துத் தலைவர்களும் கலைவல்ல புலவர்களாயிருந்தமையால் கிளர்ச்சிகள், மறுப்பு விளம்பரங் களாகவும், கூட்டங்களாகவும், நடைபெறலாயின. மருட்பாக் கிளர்ச்சித் தலைவர் கதிரை வேலரே. புலவர்களிலும் பொது மக்களிலும் மிகப்பெரும்பாலார் அருட்பா பக்கத்தினர். 'மருட்பா' பக்கத்தவர் சிறிய கூட்டத்தவரே. கிளர்ச்சி முற்றியதால் கயமைச் செயல்களுக்கும் இடமேற்படுமோ என்று உயர்ந்தோர் அஞ்சினர்.

## அடிகள், அருட்பா கிளர்ச்சியின் தலைவராதல்

ராமலிங்க வள்ளலாரின் 'சமரச சன்மார்க்க'க் கோட்பாடுகளில் அடிகட்கு ஆழ்ந்த பற்றுண்டு. அப்பிரானுடைய பாடல்களின் அருமை பெருமைகளில் பெரிதும் ஈடுபட்டவர். அப்பாடல்கள் அருட்பாக்களே என்று பாராட்டுபவர். உயர்ந்த சிவநேசரான- மெய்யுணர்வின் மேலோரான வள்ளலாரைத் 'தெய்வப் பிறவி' எனப் போற்றுபவர். இதைறிந்த அருட்பா அன்பர்கள் அடிகளை அடைந்து அருட்பாக் கிளர்ச்சிக்குத் தலை ராகுமாறு வேண்டினர் . இழிவுதரும் கிளர்ச்சிகளில் இறங்க அடிகள் உள்ளம் ஒருப்பட்டிலாத யினும், உண்மை ஞானிகளையும், அவர்கள் கோட்பாடுகளையும் அருளிப்பாடுகளையும் இகழ்வதால் நாட்டுக் குண்டாங்கேடுகளைப் போக்க விரும்பினார். நாவலரிடம் அடிகட்கு அளவில்லாப் பத்திமையுண்டு, கதிரைவேற் பிள்ளையிடம் எவ்வகைப் பகையுமில்லை.

அருட்பாக் கூட்டத்தின் தலைவராய அடிகள் முதற்கண் 'மருட்பா'க் கருத்துக்களை மறுத்தும்' அருட்பாவின் சிறப்புக்களை

விரித்தும், வள்ளலார் பெருமைகளை விளக்கியும் சிறு வெளியீடு களை வெளியிட்டார். சொற்பொழிவுகளும் ஆற்றலானார். கதிரைவேலர் இவைகளை மறுத்து எழுதியும், பேசியும் வந்தார். கிளர்ச்சி நாளும் வளர்ந்தது. முடிவுவேண்டுமே! இறுதியில், இருதிறத் தலைவர்களான கதிரையாரும் அடிகளும் ஒரே மேடையில்- தக்கார் தலைமையில் அருட்பா- மருட்பா பற்றி வழக்குரையாடுவது என்று இடைநின்ற அன்பர்களால் ஏற்பாடு செய்யப்பட்டது.

## முதற் கூட்டம்

இதன் பயனாகச் சென்னைச் சிந்தாதிரிப்பேட்டையில் 20-9-1903-ல் ஒரு பொதுக்கூட்டம் அரசாங்க நீதிபதி ஒருவர்தலைமையிற் கூடியது. அடிகள் வள்ளலாரின் பாக்கள் 'அருட்பாக்களே' என்ற பொருள் கொண்டு தக்க சான்றுகள் காட்டி ஆர்வந்ததும்ப - உளங்குழையப் பேசினர். அருட்பாக்கள் சிலவற்றைக் குயிலினும் இனிய தம் குரலால் பாடிப் பாக்களின் இனிமைகளையும், உயர்வுகளையும் எடுத்துக்காட்டினர். அவையோர் அடிகள் பேச்சில் மெய் மறந்திருந்தனர்.

நிலைமை உணர்ந்த கதிரைவேலர், ''அருட்பா மருட்பாவே'' என்பதுபற்றி அடிகளை மறுத்து ஒன்றும் பேசாமல் - பொருத்த மில்லாமல் சிலவற்றைப் பேசி விரிவாக மற்றொரு சமயம் பேசுவதாக விளம்பித் தம் மாணவர் சிலருடன் சடுதியில் ஒரு குதிரை வண்டியிலேறிச் சென்றார். தலைவர் முடிவுரை யார் திறத்தில் சார்ந்திருக்குமென்று சொல்லவேண்டியதில்லை.

## இரண்டாம் கூட்டம்

விரைந்து சென்ற கதிரையார் மறுநாளே அடிகளுக்கும் தமக்கும் நடந்த வழக்குரையில் ( வாதம்) தாம் வென்றதாகக் கூறி அடிகளையும் இகழ்ந்துரைத்து விளம்பரங்கள் ஏராளமாக வெளியிட்டார். அதற்கு எதிர்த் தாக்குதலாக மறுப்பு விளம்பரங்கள் உடனே வெளியாயின. இடை நின்றார் ஏற்பாட்டின்படி மீண்டும் அடிகள்- கதிரையார் வழக்குரை முன் நடந்த அதேயிடத்தில் அதே நேரத்தில் 27-9-1903-ல் நடைபெறுமென்று எங்குமறிவிக்கப் பட்டது. அன்று மாலை மக்கள் திரள் எங்கும் நிறைந்து விம்மியது. கதிரைவேலர்க்காகக் கூட்டம் காத்திருந்தது. குறித்தநேரம் கடந்தும்

வேலர் வரவில்லை. பிறகும் வரவே இல்லை. பின்னர் அடிகளின் ஆர்வமும் அறிவும் கலந்த பேச்சினைக் கேட்டு அவையோர் அடைந்த ஆனந்தத்திற்கு அளவேது? அடிகளின் பேச்சுத் திறனுக்கு உயிராய் ஒளிர்ந்தது, அருட்பாவின் அருமைப் பாடல்கள் என்றால் அடிகளின் வெற்றி உறுதியன்றோ?

**மூன்றாம் கூட்டம்**

*18-10- 1903-ல்*, "வேணுகோபால் சென்ட்ரல்" ஹாலில் (செங்காங் கடைப்பக்கம்) இரு பெரும் புலவர்களும் வழக்குரை பகர்வது என்று ஏற்பாடாயது. மண்டபத்தில் இடமில்லை. தெருவெல்லாம் மக்கள் திரள். அடிகள் கூட்டத்தை ஊடுருவிக் கொண்டு மண்டபத்தை அடைந்தார். அன்றும் ஒப்புக்கொண்டபடி கதிரைவேலர் வரவில்லை. இறுதியில் அடிகளின் அழகான சொற்பொழிவு அவையோரை ஆட்கொண்டது. வென்றது 'அருட்பா' தோற்றது 'மருட்பா' என்று கூட்டம் முழங்கியது சென்னை நகரே வள்ளலார் புகழோங்கியது. 'அருட்பா' எங்கும் ஒலித்தது. கதிரை வேலரும் அவர் கூட்டத்தாரும் கொட்டம் அடங்கி ஒடுங்கி ஒழிந்தனர். "அருட்பெருஞ்சோதி தனிப்பெருங் கருணை" வாழ்க, வெல்க.

பிறகு கதிரைவேலர், காஞ்சி, திருச்சி நகரங்கள் சென்று அங்கும் மருட்பாக் கிளர்ச்சியை மும்முரமாக நடத்தினார். அதனால் வருந்திய அந்நகரங்களிலுள்ள வள்ளலின் அடியவர்கள், அடிகளை அடைந்து வேண்டினர், அடிகள் அந்நகர்கள் சென்று அரிய உரைகள் ஆற்றி 'அருட்பா'வின் வெற்றிக்கொடியை நாட்டினார்.

'சிவனடியார்களை இகழ்ந்தோர் ஆண்டொன்றின் மாய்வர்' என்று திருமூலர் கூறியுள்ளாராம். ஆதலால், கதிரையார்க்கு யாது நேருமோ என்று வருந்தியிருந்தார், அடிகள் அவர் எண்ணியபடியே நீலகிரியிலுள்ள குன்னூரில் 26-3-1907-ல் கதிரைவேற்பிள்ளை சிவனடி சேர்ந்தார் அடிகள் கண்ணீர் விட்டார்.

**இராமலிங்க வள்ளலும் அடிகளும் (1823 - 1874)**

வள்ளற்பிரான் வாழ்ந்த காலத்தில், தமிழ் நிலத்தில் சாதிப்பிணக்கும், சமயச் சண்டையும் கைகோத்துக்குலவின. உயிர்கள்பால் அருளுடைமை மறைந்துவிட்டது. உடன் பிறப்பு

(சகோதர) நேயம் சாய்ந்துவிட்டது? உண்மைச் சமயநெறி மங்கிப் போலிச் சமயச் சடங்குகளும், மூடப்பழக்கவழக்கங்களும் உயிர்ச் சமயங்களான சைவ வைணவங்களின் மாண்புகள் சீர்குலைந்து கிடந்தன. அயல்நெறிகள் மக்களுக்கு மயல் விளைத்தன. இக்குறைபாடுகளைப்போக்கி உண்மைச் சிவநெறியைப் பரப்ப முனைந்தவர் நம் வள்ளல் ராமலிங்க அடிகளாவர்.

சிவநெறியின் உண்மைகளை நன்குணர்ந்த அப்பெருமானார், காலத்தின் நிலையோர்ந்து 'சைவ சமயம்' என்றதனையே 'சமரச சுத்த சன்மார்க்கச் சங்கம்' என்ற பெயரால் புதிதாக அமைத்து நாட்டினார். இவர் கடவுள்: அம்பலவாணவர், குரு- திருஞானசம்பந்தர், வேதம் -திருவாசகம், அறம்- கொல்லாமை, கொள்கை: ஆன்மநேய ஒருமைப்பாடு, சமயம் 'பொதுமை, சிறப்புச் சமயம், சிவநெறி, ஒழுக்கம்; ஜீவகாருணியம்.

இக்கோட்பாடுகள் யாவும் அடிகளார்க்கு முன்பே இயல்பாக அமைந்திருந்தன. அதனால் அடிகள் தாம் பிற்காலத்தில் (1911-ல்) பல்லாவரத்தில் குடியேறி அமைந்த அமைப்புக்குப் பொது நிலைக்கழகம் (சமரச சன்மார்க்க சங்கம்) என்ற பெயரிட்டு வள்ளலாரின் மேற்கூறிய கருத்துக்களைப் பரப்பலானார்.

### சைவ சமயப்பற்று

செந்தமிழ்நாட்டுப் பண்டைப் பெரும் சமயங்கள் சிவநெறியும், திருமால் நெறியுமாகும். இவை இந்து மையத்தின் இரு பெருங்கண்களாகும். இரு கண்களும் ஒரு பொருளையே நோக்குதல் போல இரு சமயங்களின் கருத்துக்களும் ஒத்தக் கருத்துடையனவே. சிறுபான்மை வேற்றுமையுமுண்டு. ஆயினும், உண்மைகளும், வழிகளும், பெரும்பாலும் ஒன்றே. இவற்றின் உண்மைகளை 'பழந்தமிழ்க் கொள்கையே சைவ சமயம்' 'சைவ சித்தாந்த ஞானபோதம்' முதலிய நூல்களைப் படித்தல் வேண்டும்.

அடிப்படைக் கலைகளாய சமயக்கலை, இலக்கியக்கலை இரண்டையும் ஒருவன் கற்காவிடின் அவன் கற்கும் ஏனைய பல கலைகளால் அவன் பெரும்பயன் ஒன்றுமில்லையாம். இதனாலன்றோ, திருவள்ளுவர் பெருமானும்

'கற்றதனால் ஆயபயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழா அர் வினின்.'

என்றார். இக்கருத்திற்கேற்பவே அடிகள் பல கலைகளையும் கற்றறிந்த நிறை கலைப்புலவராயினும் அக்கலை கலைகளிற்றலை நின்ற சிவநெறிக் கலையிலும், செந்தமிழிலக்கியக் கலைகளிலும் ஆழ்ந்த பற்றுடையராய் அவற்றை வளர்த்தலே தம் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டது அமைவுடையதேயாம்.

செந்தமிழ்நாட்டு புலவர் மரபே, பண்டைக் காலந்தொட்டு வழி வழியாக இன்றளவும் சமயம், இலக்கியம் என்னும் இருபெரும் அறிவின்பத்தில் திளைத்து அவற்றை வெளியிடுவதும், விளக்குவதுந்தானே தன் கடமை எனக்கொண்டு பணியாற்றி வருகின்றது. அதிலும், நம் செந்தமிழிலக்கியங்கள் சமயக் கலையை உயிரெனக்கொண்டன்றோ ஒளிர்கின்றன. சமயம் (கடவுள்) போற்றாச் செந்தமிழிலக்கியம் ஒன்றுண்டோ? உண்டோ? சாற்றுமின்கள்! ஆதலால், அடிகளின் சொல்லும் செயலும், பேச்சும் மூச்சும், எழுத்தும் வழுத்தும், அறிவும் ஆற்றலும், உருவும் திருவும், உடையும் நடையும் சைவ சமய வழியில் இலங்கியமை இயல்பே யன்றோ? அவ்வழியிலன்றோ அடிகள் தம் இளமைக் காலம் முதல் - புலமைப் பணி தொடங்கிய நாள் முதல் - சிவநெறி வளர்த்தலில் சிறந்த ஆர்வமுடையவராய்த் திகழ்ந்தார்!

## சைவத் தொண்டு

ஆதலினால், அடிகள் சென்னையில் கிறிஸ்த்துவக் கல்லூரியில் தமிழாசிரியர் பணிபூண்ட காலம் (1898) முதல், கோடை விடுமுறை, ஆவணி விடுமுறை, மார்கழி விடுமுறைகளிலும், ஏனைய விடுமுறை நாட்களிலும், பேரூர்களிலும் சிற்றூர்களிலும் சென்று சிவ சித்தாந்தம் பற்றியும், செந்தமிழ்நலம் பற்றியும் இடையறாது சொற்பொழிவுகளாற்றி வந்தார். பேச்சோடன்றி நூலாராய்ச்சி செய்தும், நூல்கள் எழுதியும், பதிப்பிட்டும், வெளியிட்டும், விற்றும் வருவாராயினர்.

மேலும், அக்காலத்தில், ஏனைய சமயத்தவர்கள் தம் சமய உண்மைகளைப் பரப்பு பான்மையும், பணியும் அறிந்துவந்தனர். வட இந்தியாவில் ஆரியசமாஜம், பிரம்மசமாஜங்கள் தோன்றி இந்து சமயத்தை பாதுகாக்க முற்பட்டதும், விவேகானந்தர் போன்றார் வெளிநாடுகள் சென்று இந்து சமயமேன்மையை நிலைநாட்டி வருவதும் அடிகட்கு ஒரு பெரும் உணர்ச்சியை ஊட்டியது.

அதனால், தமிழ்நாட்டில் மட்டும் நின்று நிலவி ஒளிரும் சிவநெறியின் பயனைப் பாரதமும் உலகமும் உணர்ந்து உய்யவேண்டும் என்னும் பேரார்வம் நம் அடிகள் உள்ளத்தை ஆட்டி வைத்தது. தமிழகத்திலும் சைவ சமய உண்மைகளைத் தமிழ் மக்கள் நன்குணர்ந்து உய்தல் வேண்டுமென்னும் உணர்ச்சியும் உற்றார். அதற்கான வகையில், கிறிஸ்த்துவம், இஸ்லாம், முதலிய வெளி நாட்டுச் சமயங்களையும், இந்து சமயத்தின் உட்சமயங்களையும், அடிகள் தம் கூர்ந்த மதியாலும். மேலை நாட்டு ஆங்கில அறிஞர்களின் சமயவாயிலாயும், ஆய்வுரைகளாலும், ஆராய்ந்து கண்டவராலின், ஏனைய சமய உண்மைகளோடு தம் சைவ சித்தாந்த உண்மைகளையும் ஒப்பு நோக்கி யாராய்ந்தார். நடுவுநிலையுடன் இவ்வாராய்ச்சியின் முடிவாக அடிகள் (Saiva Sidhantha as a Philo Sophy of Practical Knowledge) 'சைவ சித்தாந்தமும் செயல் முறையறிவும்' என்ற ஆங்கில நூலை எழுதியுள்ளன என்றால், அடிகட்குச் சிவநெறியிலுள்ள ஆழ்ந்த ஆர்வத்தை விளக்கத் தேவையில்லை.

**'சைவ சிந்தாந்த மகாசமாஜம்' நிறுவுதல்**

சிவநெறியின் பெருமையை யாண்டும் பரப்ப வேண்டுமென்னும் பேரவா நாளுக்கு நாள் அடிகள் உள்ளத்தே வளர்ந்து வந்ததனை மேலேகண்ட செய்திகளால் அறிந்தோம். அடிகளின் அவ்வார்வத்தின் வெளியீடே 'சைவ சித்தாந்த மகாசமாசம்' என்னும் அமைப்பாக உருவாயிற்று. சங்கம், கழகம், மன்றம், அவை முதலிய சொற்களைவிடுத்து அடிகள் 'சமாஜம்' என்ற சொல்லை அமைத்த காரணம், வடநாட்டினர் இவ்வமைப்பினை அறிய வேண்டும் என்பதற்காகவேயாம். நாளடைவில இச் சமாசம், வடநாட்டிலும் ஆங்காங்குத் தோன்றிப் பணியாற்ற வேண்டுமென்பதும் அடிகளின் ஆர்வமாகும்.

இச் சமாசத்தை எவர் தலைமையில் நிறுவுவது என்று அடிகள் எண்ணி வருகையில் பெருமலையை எண்ணின் இமயம் முன்னிற்பது போது போல தவத்திரு ஞானியாரடிகளே நம் மடிகளின் மனத்திற்கு உகந்தவராயினார். அவரினும் தக்கார் யாருளர்?

**ஞானியார் அடிகள்**

திருக்கோவலூர் ஆதீனம், திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் மடாலையம். ஐந்தாம் பட்டம் ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய தேசிக சுவாமிகள் எனப் போற்றப் பெறும் ஞானியார் அடிகள் தென் தமிழும் வடமொழியும் ஆய கடல்களைக் கடந்தவர்; பண்புகளால் ஆன்ற சான்றோர். நாவலர்க்கு நாவலர், அகத்துறவும், புறத்துறவும் பூண்ட புனிதர்: காட்சிக் கினியவர், சிவவேடப் பொலிவிற்கோர் இலக்கியமாயமைந்த தோற்றத்தார்; அருட் பொலிவினர். தீயோரும் போற்றும் செந்தண்மை கொண்டவர், தேனையும் விரும்பும் அன்பினர். முருகன் சேவடியில் உருகி நிற்கும் உயர்ந்தோர். புகழ் மொழிகளுக்கு அடங்குவதன்று அவர் பெருமை.

அவர், நாள் முழுவதும் மாணவர்கட்குச் செந்தமிழ் கற்பிப்பதில் தணியா வேட்கை கொண்டு அரும் பணியாற்றிக் கைம்மாறு பெறாமாரியாவர். கோட்பாடு கொண்ட இம் முனிவர் கோமான், தன் திருமடத்தும், செல்லும் ஊர்களிலும் தவறாது மணிக்கணக்காக அருவி எனப் பேருரை நிகழ்த்துதலையே தம் வாழ்வின்பம் எனக்கொண்டு தொண்டாற்றிய தூயோராவர்.

இப்பெருமானுடைய சிறப்பியல்களில் ஈர்ப்புண்ட அடிகள், சமாசம் தொடங்குதற்கு முன், சில திங்களாக அவர்களோடு தொடர்ந்த கேண்மையுடையவராக இருந்தார். இடையிடையே திருப்பாதிரிப்புலியூர் சென்று அப்பிரான் தலைமையிலும், முன்னிலையிலும் பேசிப் பேசி அவர் தம் பேரன்பையும் பெரு மதிப்பையும் பெற்றுள்ளார். அடிகளின் 18-5- 1905 நாட்குறிப்பு ஞானியாரடிகளைப் பற்றி

''திருப்பாதிரிப்புலியூர் மடமடைந்தேன், ஞானியாரைப் பார்த்தேன்.அவர் என் பால் மிகவும் அன்பு கூர்ந்தார். அவர் நிறைந்த கல்வியாளர்; குற்றமில்லா ஒழுக்கத்தினர்; நிறைந்த அன்பினர்'' என்று கூறுகின்றது.

இத்தகு சான்றோரின் முன்னிலையில் -அவர் வாழ்த்துடன் -துணையுடன் சமாசத்தை அமைக்க முடிவுசெய்த அடிகள் அதனை சுவாமிகளுக்கறிவித்து 3-7-1907 இல் திருப்பாதிரிப்புலியூர் அடைந்தனர். 7-7-1907 இல் முற்சொல்லியவாறு ஞானியாரடிகள்

முன்னிலையில் அவர் தம் அருள் இசைவு பெற்று நம் அடிகள் ''சைவ சித்தாந்த மாசமாத்தை'' நிறுவினர்.

### சமாசப் பணி

சமாசத்தை நிறுவிய அடிகள் அதன் அமைச்சரும் ஆயினர். அஃதியல்பே. செயலாளரான போது அடிகட்கு மக்கள் அறுவர். கிறத்துவக் கல்லூரிப் பணி; அவற்றுடன் 'ஞான சாகரம்' Theori entaimystiemyna'' என்னுந் தமிழ், ஆங்கில வெளியீடுகளின் ஆசிரியப் பணி; மேல் ''சைவத் தொண்டு'' என்ற பகுதியில் கண்டாங்குப் பல பணிகள்: அடிகள் ஒருவரே மிக முனைந்து இவ்வளவும் செய்தனரெனின், அடிகளின் செயற்றிறனும், உழைப்பும் அறிவார்க்கெல்லாம் அவர்பால் மிகவும் பரிவினை விளக்குமன்றோ?

சமாசச் செயலாளராகிய அடிகள் தாம் பணியாற்றிய முதல் ஆறு ஆண்டுகளிலும் சமாச ஆண்டுவிழாக்களைச் சிதம்பரம், நாகை முதலிய இடங்களில் மிகச் சீரிய முறையில் மூன்று நாட்கள் வரை நடத்துவர். தலைவர்களும், பேச்சாளர்களும், வெளியூர்களிலிருந்து வரவழைக்கப்பட்டனர். விழா ஏற்பாடுகள் யாதொரு குறைவுமின்றி யாவராலும் பாராட்டப்படும் நிலையில் மிக ஒழுங்காகச் சிறப்பாக அமைக்கப்பட்டன. செய்வனத் திருந்தச் செய்வதில் ஏற்பாடுகளும் அவர் நேர்ப்பார்வையில் நடைபெறும். அடிகளால் சமாசம் சிறப்புற்றது; வளர்ந்தது. இப்போதும் அச்சமரசம் நந்தமிழகத்தில் பல பணிகளையும் செய்து வருகின்றது. ஆண்டுதோறும் சமாசத்தின் ஆண்டுவிழாக்கள் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

### அடிகளின் தமிழ்ச்சுவை

நாயகர், மறையுங்கால், அடிகளை நோக்கி ' அப்பன்! நமக்குப்பின் நாம் துவங்கிய சைவ சித்தாந்த விளக்கத்தை நீயே நம் திருஞான சம்பந்தப்பெருமான் துணைக்கொண்டு நன்றாக நடத்திச்செல்க' என்றுரைத்தனர். அப்போது அடிகள் அகவை 26-கிறித்துவக் கல்லூரிப் பேராசிரியராய் - புலத்துறைமுற்றிய நலத்தகு புலவராய் இலங்கினர் என்பது முன்னும் கூறப்பட்டது. இதனை, அடிகள் தம் 'திருவெற்றியூர் முருகன் மும்மணிக்கோவை' என்ற நூலின் முகவுரையில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளது.

அது:- 'எமக்கு ஆண்டு 21. மிக இளைஞராயிருந்த காலம் அப்போதுதான் யாம் கிறித்தவக் கல்லூரியில் தமிழ்ப்பேராசிரியாக அமர்ந்து மாணாக்கர்க்குத் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்பித்து வரலானதும், அந்நாளில் யாம் பழைய தமிழ் இலக்கண இலக்கிய நூற்பயிற்சியில் மட்டுப்படா விழைவுகொண்டு கருத்தூன்றியிருந்தோம். எம் பதினைந்தாம் ஆண்டில் முறைப்படி துவங்கிய தமிழ்ப் பயிற்சியானது எமது இருபத்தோராம் ஆண்டிற்குள் தொல்காப்பியம், திருக்குறள், திருச்சிற்றம்பலக் கோவையார் என்னும் மூன்று நூல்களையும் முழுதும் நெட்டுருச் செய்து முடித்தோம். கலித்தொகை, பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், நாலடியார், முதலிய நூல்களில் பெரும்பகுதிகள் அங்ஙனமே நெட்டுருச் செய்து முடிக்கப் பெற்றன. சிவஞானபோதம், சிவஞான சித்தியார் என்னும் நூல்களிரண்டும் முழுமையும் நெட்டுருச் செய்து முடிக்கப்பெற்றன.

இவையேயன்றி நன்னூல் விருத்தி, தொல்காப்பியச் சூத்திர விருத்தி, யாப்பருங்கலக் காரிகை, இறையனார் அகப்பொருளுரை, தண்டியலங்காரம் முதலான நூல்களும் முன்னரே முழுமையும் நெட்டுருச் செய்து முடிக்கப்பட்டவையாகும். கல்லாடம், சீவகசிந்தாமணி, பெரியபுராணம் என்னும் நூல்களின் சொற்சுவை, பொருட்சுவைகளில் பெரிதும் மூழ்கியிருந்தும் அவற்றிலிருந்து எடுத்துப் பாடம் செய்த செய்யுட்கள் மிகுதியாயில்லை. என்றாலும், அவற்றின் சொற்பொருள்கள் எமதுள்ளத்தில் வேரூன்றி நின்றன. இங்ஙனமாக விழுமிய தமிழ்ப் பழ நூல்களில் எமது கருத்து ஈர்ப்புண்டு நின்று, பயின்ற பயிற்சியினாலேயே செய்யுளும், உரையும் தனிச் செந்தமிழ் நடையில் எழுதுந்திறம் எமதிளமைப் பருவத்திலேயே எமக்கு வாய்ப்பதாயிற்று'' என்பதால். அப்புத் திளமைப் பருவத்தின் போதே அடிகள் ஆங்கில நூற்பயிற்சியிலும் சிறந்து ஆங்கிலப் பாக்களும் இயற்றினர். வட மொழிப் பயிற்சி பெற்று வந்தார். இங்ஙனம் தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மும்மொழிகளிலும் செம்மைசால் புலவராகிய அடிகளின் உள்ள மாங்கடல் அறிவினால் நிறைந்து மேலும் நிறைய இடமின்றி வழிந்து பேச்சும், எழுத்துமாகப் பரவலாயிற்று. நிறைந்து மிக்கது வழிந்து யாண்டும் பரவுவது எல்லாப் பொருள்களுக்கும் இயல்புதாமே! இவ்வாறு இயற்கைத் தூண்டலால் எழுந்தவைதான்

அடிகளின் பேச்சும், எழுத்தும். கொண்டன; எழுத்துக்கள் 'அறிவுக் கடல்' என்னுந்திங்கள் வெளியீடாகவும், நூல்களாகவும் உருவாயின. அடிகள், தனித்தமிழ் கொள்கையை விடாப்பிடியாக கையாளுதற்கு முன்பே, 'அறிவுக் கடல் ' தோன்றியதாதலால் அப்போது அதன் பெயர் ''ஞானசாகரம்'' என்னும் வடமொழிப் பெயராயமைந்தது.

அடிகள் யாத்த நூல்கள் பலவும் ''ஞானசாகரத்தில்'' திங்கள் தோறும் பகுதி பகுதியாக வந்தன. தம் வாழ்நாள் முழுவதும் அடிகள் இவ்வெளியீட்டை நடத்தியே வந்தனர். அதன் கையொப்பக் காரர்கள் (சந்தாதார்) சில நூற்றவரே. ஆனால் , அவர்கள் சிறந்த புலவர்களாகவும், அறிஞர்களாகவும்' தமிழ்ப் புரவலர்களாகவு மிருந்தனர்.

## ஆங்கில வெளியீடுகள்

'The oriental Mystiemyn'' *(கீழ் நாட்டு மக்கள் மனக்கவர்ச்சி)* என்னும் ஆங்கிலத் திங்கள் வெளியீடு அடிகளின் சைவ சித்தாந்தக் கருத்துக்களைத் தாங்கிப் பிரிட்டன், பிரான்ஸ், ஜெர்மனி, ஆஸ்த்திரியா, அமெரிக்கா முதலிய நாடுகளிலும் உலவியது. ஒரு தொகுதியோடு அவ்வெளியீடு நின்றது.

'The Ocean of Wisdom'' *(அறிவுக் கடல்)* என்னும் மற்றோர் ஆங்கில வெளியீடு ஒன்றை அடிகள் 1935 முதல் இரண்டு திங்கட் கொருகால் பருவ வெளியீடாக வெளியிட்டு வந்தனர். இது பற்றி அடிகள் தம் ''முற்கால பிற்காலத் தமிழ்ப் புலவோர்'' என்னும் நூலின் முக உரையில் பின் வருமாறு எழுதியுள்ளார். அது:-

''செந்தமிழ் மொழியிலும் சைவ சித்தாந்தத்திலும் பொதிந்து கிடக்கும் அரும்பெரும் பொருள்களை இவ்வுலக மெங்கணுமுள்ள அறிஞர்கள் தெரிந்து நலம் பெறல் வேண்டி அவைற்றையாம் ஆங்கில மொழியில் எழுதி இரண்டு திங்கட்கு ஒருகால் ஒரு வெளியீடாகச் சென்ற ஒன்றரையாண்டுகளாக வெளியிட்டு வருவதாலும்'' என்பதாம்.

இவ்வாங்கில் வெளியீடு சில ஆண்டுகள் தான் நடைபெற்றன. இதற்குக் கையொப்ப நேயர், ஐரோப்பிய, அமெரிக்கா நாட்டினர் 86 பேர், தமிழ்நாடு, வடஇந்தியா, இலங்கை, பர்மா,

தென்னாப்பிரிக்கா முதலிய நாடுகளிலுள்ள தமிழர்கள் 26 பேர் தான். இதனை அடிகள் பன்முறை கூறி நம் நாட்டினரின் அறிவார்வ மின்மைக்காகப் பெரிதும் வருந்தினர்.

### பாண்டித்துரைத் தேவர்

இவர் ராமநாதபுரம் அரசர் முத்துராமலிங்க சேதுபதியின் தமையனார் பொன்னுசாமித் தேவர் திருமகனாராவர். சிறந்தத் தமிழ்க் காதலர்; புலவர் புரவலர், உயர்ந்த நாவலர். செய்யுள் நூல்கள் சில செய்தவர். தமிழ்த் தொண்டே தமக்கின்பமெனக் கொண்டவர். அதனால், மதுரையில் நான்காம் தமிழ்ச் சங்கத்தை நிறுவி அதனைச் சிறப்புடன் நடத்தி வந்தார். அடிகள் சிறப்பறிந்த தேவரவர்கள் அடிகளை மதுரைத் தமிழ்ச் சங்க விழாவில் பேச அழைத்தார்.

### மதுரைத் தமிழ்ச் சங்க மூன்றாம் விழா

கடுங் கோடைக்காலம், வைகாசித் திங்கள் கல்லூரிகட்கு விடுமுறைப் பருவம். அடிகள் சென்னையினின்றும் மதுரையை அடைந்தார். 24-5- 1904-ம் நாள் விழாவில் அடிகள் விரிவுரையாற்றி அவையோர் அனைவரையும் மகிழ்வித்தார். தேவர் பாராட்டும், மகிழ்ச்சியும் எல்லை கடந்தன. அடிகளின் புலமை நிறைந்த பேச்சு மட்டுமல்ல; அவர்த் தோற்றமும் அவருள்ளத்தைக் கொள்ளை கொண்டன. அன்றைய அடிகளின் தோற்றம்;-

### நாகரிகப் புலவர்

பொன்னொளிர் மேனி - ஒளி வீசும் தாமரை அன்னதிருமுகம் - நேர்க்கோடு எடுத்துச் சீவி முடிக்கப்பட்டுப் பின்கொண்டை. சரிகைத் தலைப்பாகை. நெற்றியில் வெண்ணீறும் குங்குமத்தை இடையிற்கொண்ட சந்தனப் பொட்டும், உடம்பில் ஒளிரும் ''அல்பாகா கோட்,'' டை'யுடன் கூடிய கழுத்துப்பட்டை, பட்டையிடப்பட்ட சரிகை மேலாடை கால்உறையுடன் கூடிய 'பூட்ஸ்,' பீடு நடை, இளவரசர் தோற்றம். இவ்வழகிய - எடுப்பான- மிடுக்கான நாகரிக இளைஞரா தமிழ்ப் புலவர்! அதுவும் பெரும் புலவர்! அக்காலத் தமிழ்ப் புலவர்களின் உடை நடைகளுக்கு அடிகள் கோலம் முற்றிலும் மாறுபட்டது. ஆம் கொள்கைகளும், ஆராய்ச்சிகளும், பண்புகளுங்கூட அவர்களோடு அடிகட்கு மாறுபட்டவைதாமே!

**தேவர் அடிகள்பால் காட்டிய மதிப்பு**

பாண்டித்துரைத் தேவர் அரச மரபினர் என் பதறிந்தோம். மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் பணியாற்றிய பெரும் புலவர், பலர் அவருடைய அரசவைப் புலவர்கள்; அவர்பால் சம்பளம், நன்கொடைகள் கொண்டு வாழ்பவர். ஆதலால் , அப்புலவர்கள் பாண்டித்துரையின் முன்பு, தம் மேலாடையை இடையிற் சுற்றிக் கொண்டு மிகவும் அடக்க ஒடுக்கமாக நடப்பர், நின்று கைகட்டிப் பணிவாகப்பேசுவர். தேவரை 'மகாராஜா' என்றே விளிப்பர்.

அப்புலவர்களைப் போலப் புது நாகரிகப் புலவராம் அடிகளைத் தேவர் நடத்த முற்படுவரோ? அடிகள் தாம் அதனைப் பொறுப்பரா? பண்பறிந்த பாண்டித்துரை அடிகட்குந் தம்முடன் சமநாற்காலி கொடுத்து நண்பர் எனப் பாராட்டி அளவளாவுவர்; அடிகள் சொற்பொழிவுகளைப் புகழ்வார். தமிழ்ச் சங்க விழா முடிந்ததும் தேவர் விரும்பி அழைத்தபடி ராமனாதபுரம் சென்றார். மூன்று நாட்கள் வரை அடிகட்குத் தேவர் சிறந்த விருந்தளித்து மகிழ்ந்தார்.

**ரா. ராகவய்யங்கார் நண்பராதல்**

அந்நாட்களிற்றான் மாபெரும் புலவரான ரா. ராகவய்யங்கார் அவர்களுக்கும், அடிகட்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. இருபதாம் நூற்றாண்டின் தமிழகப் பெரும் புலவர்களின் முதல் வரிசையில் வைத்தெண்ணப்படும் இவ்வய்யங்காரவர்கள் சேது சமஸ்தானப் புலவர், உரைநடை நூல்கள் யாத்தவர். செய்யுள் நூல்கள் சில இயற்றினார். இன்னுரைப் பெருநாவலரான இவர்தம் பிற்காலத்தில் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழாராய்ச்சித் துறைத் தலைவராய்த் திகழ்ந்தார். மகாவித்வான், பாஷாகவி சேகரர், முதலிய பட்டங்கள் பெற்றவர். வடமொழியிலும் சிறந்த புலமையுடையவர். நம் அடிகளால் பெரிதும் மதிக்கப்பட்டவர்.

**வி. கனகசபைப் பிள்ளை**

இவர்தாம் ''ஆயிரத் தெண்ணூறு ஆண்டுகட்கு முன் தமிழர்.'' என்ற அரிய ஆய்வுகள் நிறைந்த ஆங்கில நூலின் ஆசிரியர். இவர் தந்தையார் யாழ்ப்பாணத்தவர். சென்னையில் குடியேறி

வாழ்ந்தவர். அதனால், சிறந்த ஆராய்ச்சியாளரும், பேரறிஞருமான இவர் சென்னை நகரில் தோன்றினார். சென்னை அஞ்சல் நிலையத்தில் உயர் நிலையில் பணிபுரிந்தார்.

## மதுரைத் தமிழச் சங்க நான்காம் விழாவும் தமிழர் நாகரீகக் கிளர்ச்சியும்

அடுத்த ஆண்டும் பாண்டித்துரையின் அழைப்பினால் அடிகள் மதுரை போந்தனர். மேற்சொன்ன பேரறிஞர். வி. கனகசபைப் பிள்ளையவர்கள் தலைமையில் தமிழ்ச் சங்க நான்காம் விழா 24-5-1905-ல் கூடியது.

தலைவர் தம் பேருரையில், *''தொல்காப்பியர், பிராம்மணராவர். ஆதலால் தமிழர் ஆரியர்க்குக் கடமைப் பட்டவர்.'' என்று குறிப்பிட்டார். இது கனகசபைப் பிள்ளையின் கருத்து மட்டு மன்று அக்காலத்து ஆராய்ச்சியாளர் அனைவருமே. (இரண்டொருவர் நீங்கலாக) இவ்வாறே கருதினர்: எழுதினர்: பேசினர்.

சென்ற சில நூற்றாண்டுகளாகத் தமிழகத்தில், சாதி வெறி காரணமாக, ''வடமொழியே சிறந்தது; உயர்ந்தது; தெய்வமொழி; தமிழ்- தாழ்ந்தது. அரிய நூல்கள் யாவும் ஆரிய அந்தணர் செய்தன: அவை வடமொழியிலிருந்தே வந்தன. ஆரிய நாகரிகமே சிறந்தது.'' என்ற கருத்துக்கள் எங்கும் நிலை நாட்டப்பட்டு விட்டன.

இவற்றிற்கேற்பச் (சங்கம்) பிற்காலத்துத் தோன்றிய நூல்களும், புராணங்களும்,'' அகத்தியர் தாம் தமிழிலக்கணம் செய்தார். அவர் பிராம்மணர், தொல்காப்பியரின் இயற்பெயர்- 'திருவள்ளுவர்கூட பகவன் என்னும் பிராம்மணன் மகன்தான் வேதங்கள் யாவும் வடமொழியிற்றான் இருக்க முடியும்: தமிழில் வேதங்களில்லை'' என்றெல்லாம் பொய்க் கதைகள் எழுதி வைத்தன.

இக்கதைகள் உண்மைதாமா என்பதனைச் சிறிதும் ஆராயாமல் பின் வந்த புலவர்கள் அவைகளை நம்பித் தாமியற்றிய பாக்களில் - உரைகளில் அக்கதைகளைப் போற்றி வந்தனர். அடிகள் காலத்துப் பெரும் புலவர்களும், மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் முதன்மையான

* இச் செய்தி. அடிகளின் நாட் குறிப்பிலுள்ளது.

செயற் புலவர்களுமானதிரு. நாரயணய்யங்கார். ரா. ராகவய்யங்கார், மு. ராகவய்யங்கார், டாக்டர். உ. வே. சாமிநாதய்யர் முதலியோர்களும் இக்கதைகளை ஒப்பிப் பாராட்டி வந்தனர்.

இதனால் கனகசபைப் பிள்ளை போன்றார் அவ்வாறு பேசியதில் வியப்பென்ன? பிராம்மணர்களாயினும் - அல்லாதவர் களாயினும் அக்காலப் புலவர்களின் போக்குகள் கருத்துக்கள் இவ்வாறே இருந்தன. இதனை இருநூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த இலக்கணக் கொத்து ஆசிரியர்* சுவாமி தேசிகர் என்பார், பாடியுள்ள

"அன்றி யுந் தமிழ் நூற் களவிலை அவற்றுள்
ஒன்றே யாயினும் தனித் தமிழுண்டோ
அன்றியும் ஐந்தெழுத்தால் ஓர் பாடை என்று
அறையவே நாணுவர் அறிவுடையோரே
ஆகையால் யானும் அதுவே அறிக:"

என்னும் பாட்டாலும் அறியலாம்.

வடமொழி எழுத்துக்களில் இல்லாத தமிழ் எழுத்துக்கள், "எ, ஒ, ழ, ற, ன" என ஐந்தேயாகும். அதனால் தமிழை ஐந்தெழுத்தாலான ஒரு மொழி என தேசிகர் ஏளனம் செய்கின்றார். அங்ஙனமானால், உலகிலுள்ள மொழிகளின் எழுத்துக்களில் வட மொழி எழுத்துக்கள் எல்லாமிருத்தலின் வட மொழியை "ஓர் எழுத்துமில்லா மொழி" என்றவர் இகழ்வாரா? இடைக்காலத்துப் புலவர்களில் மிகப் பலர் வடமொழியை நன்கு கற்றுத் தாய் மொழியை எள்ளி நகையாடியதற்கு இதனினும் வேறு சான்று வேண்டாமன்றோ?

ஆராய்ச்சியறிவும், உண்மை காணும் உள்ளமும், தமிழ் மானமும் , தமிழர் வீரமும் நிறைந்து தமிழ் நாகரிகத்தும், தமிழ்ச் சமயத்தும் ஆழ்ந்த ஆர்வங்கொண்ட அடிகளுக்கு இது பொறுக்குமா? கொதித்துக் கொண்டிருந்தார். கனகசபையார் பேச்சு அதில் நெய் வார்த்தது.

இந்நிலையில் அடிகளைப் பேசுமாறு அன்புடன் பாண்டித்துரை கேட்டுக் கொண்டார். அடிகள் எழுந்தார்.

* வேளாளர் மரபினர்.

உணர்ச்சியுடன் பேசலானார்.'' தமிழ் நாகரிகத்தின் பழமை, சிறப்புகளைச் சான்றுகளுடன் விளக்கினார். ஆரிய நாகரிகத்திற்கும் பிராமணர்களுக்கும் தமிழர்கள் கடமைப் பட்டிருக்கவில்லை'' என்று முழங்கினார். ''ஆரியர்களாலும், பிராம்மணர்களாலும் தமிழ் பாழ்பட்டது. தமிழர்கள் இழிக்கப்பட்டனர்'' என்றார்.

இவ்வீர உரைகளைக் கேட்ட பார்ப்பனரல்லாத புலவர்கள்-அறிஞர்கள் அடிகள் கூற்றுக்களை ஏற்று ஆரவாரம் செய்தனர், கிளர்ச்சியடைந்தனர். அடிகளைப் பலபடிப் பாராட்டிப் பேசினர். பாண்டித்துரை தமிழ் மறவரல்லவா? அடிகளின் உணர்ச்சி உரைகள் அவரைப் பெரிதும் கவர்ந்தன, எழுச்சியுடன் அடிகளைப் பலபடப் பாராட்டினர்.

மறுநாள் விழாவிலும் பாண்டித்துரையும் புலவர் பலரும் கேட்டுக் கொண்டபடி அடிகள் , *'' பண்டைக்காலத் தமிழரும் ஆரியரும்'' என்று சான்றுகள் நிறைந்த ஆராய்ச்சிமிக்கதோர்-நாவன்மை சிறந்ததோர் பேருரை நிகழ்த்தினர். அதில், ஆரிய நாகரிகத்தின் இழிவையும், தமிழ் நாகரிகத்தின் உயர்வையும் அடிகள் விளக்கி உரைத்தனர். அதுகேட்டு அவையோரடைந்த உள்ளக் கிளர்ச்சிகளை உரைக்க ஒண்ணுமோ?

**அரசன் சண்முகனார் பாராட்டு**

அடுத்த ஆண்டும் அடிகள் மதுரை நண்ணித் தமிழ் சங்க விழாவில் - 26-6- 1906-ல் டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் தலைமையில், ''பட்டினப்பாலை ஆராய்ச்சி'' பற்றி அரியதோர் சொற்பொழிவாற்றினர். தலைவர் தம் முடிவுரையில், ஸ்ரீமான். வேதாசலம் பிள்ளையவர்களின் உபந்நியாச இன்பத்தில் மூழ்கிவிட்டேன். அவர் இனிய பேச்சொலிகள் என் இரண்டு காதுகளிலும் இன்பமுழக்கம் செய்கின்றன. என்ன பேசுவதென்று தெரியவில்லை'' என்று கூறியமர்ந்தார். அந்நிலையில் மாபெரும் புலவரான அரசன் சண்முகனாரும் ஏனைய புலவர்களும் எழுந்து அப்போதே அடிகளின் விரிவுரைகள் மாட்சிபற்றித் தாமியற்றிய பாடல்களைப் பாடிப் பொருள் விளக்கம் செய்தனர். இவையெல்லாங் கண்டும் கேட்டும் அவையோர் ஆரா மகிழ்ச்சியடைந்தனர். பாண்டித்துரையின் மகிழ்ச்சி எல்லை கடந்தது.

* இத்தலைப்பு அடிகளால் பிறகு நூலாகவே வெளியிடப்பட்டது .

## ஆங்கிலப்பா அரங்கேற்றம்

25-5- 1908-ல் மதுரையில் தமிழ்ச் சங்க விழாவில் அடிகள் பாண்டித்துரையின் தலைமையில், 'குறிஞ்சிப் பாட்டாராய்ச்சி' பற்றிப் பேசினர். அதனருமையைப் புலவர் அனைவரும் ஒரு முகமாகப் பாராட்டினர். 26-கூட்டத்தில் ''இறையன்பு பற்றி அடிகள் ஆங்கிலத்தில் தாமியற்றிய பாடல்களைப் படித்துப் பொருள் விளக்கமும் செய்தனர்.

## தமிழ் வீரர்

சென்ற ஐந்தாண்டுகளில் மதுரைத் தமிழ்ச் சங்கத்து நான்கு விழாக்களில் அவையத்து முந்தியிருந்தனர். அவையோர் அனைவரும் இக்கட்டிளமைப் புலவரைப் போற்றிப் புகழ்வதில் முனைந்தனர். விழாவின் உயிராய் அடிகளிலங்கினர். அவர் பேச்சுக்காக அறிஞர்களும், புலவர்களும், அன்பர்களும் நிறைவுற்ற தண் மதியாய் அடிகள் அறிவொளி பரப்பி நின்றார், தண்ணியகதிராம் இனிய சொற்பொழிவுகளால் புலவர் உலகத்தை நிறைத்தார். உள்ளத்தை மகிழ்வித்தார்.

எனினும் தண்மதியால் மகிழாது தாமரை கூம்புவது போலப் பொறாமைப் புலவர் சிலர் மனம்கூம்பினர். அத்துடன் சாதி வெறியும் கூடிக் கொண்டது. பழமையில் நலம் காணாது பசையற்ற பொருளையே பற்றிக் கொண்ட வைதிகப் புலவர்களின் மனமும் சரியில்லை. அடிகளின் அரிய கருத்துரைகளால் பயன் பெறாது பொய்க் கதைகளை நம்பி அவற்றைப் போற்றாத அடிகளை இகழ்ந்து கலகம் விளைத்தனர். இவையெல்லாம் உணர்ந்த அடிகள், தனித்திருந்தே தம் ஆய்வுக் கருத்துக்களை வளர்ப்பதெனக் கருத்துக் கொண்டார். அதனால் , அடிகள் மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் தொடர்பை இவ்வாண்டுடன் முடித்துக் கொண்டார். ஆனால், பாண்டித்துரையுடன் நட்பு மேலும் வளர்ந்தது.

மதுரைத் தமிழ்ச் சங்க விழாக்களினால் அடிகள் புத்துணர்ச்சி கொண்டார். தமிழ் மொழியும், தமிழர் நாகரிகமும், தமிழர் சமயமும் பழிக்கப்படுவதை இகழப்படுவதை எதிர்க்கும் வீரரானார்; தமிழர் சிறப்பை நிலை நாட்டுவதெனக் கங்கணம் கட்டிக் கொண்டார். அடிகளின் இவ்வுறுதியால் எழுந்ததுதான் இன்றைய தமிழ் எழுச்சியும் வளர்ச்சியும். இது பற்றிப் பின்னர் விளக்கப்படும்.

## வ. உ. சிதம்பரம் பிள்ளையின் விருந்தினராதல்

மதுரைத் தமிழ்ச்சங்க விழாவிற்கு வந்த அன்பர் சிலர் அடிகளின் பேரறிவின் திறனில் மகிழ்ந்து அவரைத் தூத்துக்குடிக்கு அழைத்து வந்தனர். 29, 30, 31-5-1905-ம் நாட்களில் அடிகள் கப்பலோட்டிய மாபெருந் தமிழ் வீரர். வ. உ. சி.யின் வீட்டில் அவர் விருந்தினராக இருந்து மகிழ்ந்தனர். அந்நாட்களில் சைவ சித்தாந்த சபையிலும், சிவன் கோயிலிலும் ''ஞான சம்பந்தர்'', ''கடவுள் எங்கும் நிறைந்திருக்கின்றார்'' என்பன பற்றிப் பேசினார்.

அதுமுதல் அடிகள் மாட்சியுணர்ந்த சைவ சித்தாந்த சபையினர் அவர்ளைத் தம் ஆண்டு விழாக்களில் மும்முறைத் தலைமைத் தாங்கச் செய்தும் சொற்பொழிவுகளாற்றச் செய்தும் பெரிதும் மகிழ்வாராயினர். கடைசியாக 1946-லும் அச்சபை யார்தம் விழாவில் அடிகளைத் தலைவராக்கி மகிழ்ந்தனர். அப்போது அச்சபையாரும், நகராரும் அடிகட்குச் செய்த சிறப்புக்கள் அரசர்க்குச் செய்யும் சிறப்புக்கள் போல ஆரவாரமாக விளங்கின. ஆம்! அடிகள் புலமையின் அரசரல்லவா?

## வெளிப்பாளையம் சைவ சித்தாந்த சபை

நாகப்பட்டினத்தில் வெளிப்பாளையம் என்பதோர் பகுதியாகும். அங்கு அடிகள் தோன்றுவதற்கு முன்பே தோன்றிய சைவ சித்ததாந்தச் சபை ஒன்றுண்டு. அச்சபையை வளர்த்து வாழ்வித்தவர் களில் மதுரை நாயகம் பிள்ளை என்பார் முதன்மையானவர். அவர் அடிகளைத் தம் புதல்வர்போற் கருதிப் பேரன்பு செய்தவர். எல்லா வகையிலும் அடிகளைச் சிறப்புடையராக்கி மகிழ்தலே தம் வாழ்வின்பமெனக் கொண்டவர். அடிகள் சென்னையில் குடியேறிய பிறகும் அவர்களை ஆண்டிற்கு இருமுறை, மும்முறை வெளிப்பாளையத்திற்கு வருவிப்பார். சைவ சமயம், தமிழிலக் கியங்கள் பற்றிப் பல சொற்பொழிவுகளை அடிகளைக் கொண்டு நடத்துவார்.

தம் வாணாளில், அடிகள், இவ்வெளிப்பாளையம் சைவ சித்தாந்த சபையிற்றான் எண்ணிலடங்காச் சொற்பொழிவுகளை ஆற்றினர். இச்சபை அடிகளை அவர்தம் இறுதிக்காலத்தில் வருவித்தது. யானை மேல் அடிகளை அமர்த்திப் பெரும் சிறப்புடன் நகர்வலம் செய்வித்தது. அவர்களைத் தலைவராக்கிப் பெருவிழாக்

கொண்டாடியது. அச்சபை இன்றும் நற்பணியாற்றி விளங்கி வருகின்றது. பிறந்த நகரில் பெரும் சிறப்புப் பெறுதல் அடிகள் போன்ற பெரியார்கட்கன்றி வேறு யார்க்கு வாய்க்கும்?

## தமிழ்ப்பாடம் சொல்லுதல்

அடிகள், சென்னையில் கிறித்துவக் கல்லூரியில் பணியாற்றிய காலத்தே மேற்கண்டாங்குப் பல நகர்களிலும் சென்று சொற்பொழிவுகளை நிகழ்த்திக் கொண்டும், 'ஞான சாகரம்' வெளியிட்டுக் கொண்டும், நூலாராய்ச்சி நூலெழுதல் செய்து கொண்டும், பெரும் குடும்பத்தை நடத்திக் கொண்டும், பெரும் பணிகள் பலவற்றில் மூழ்கியிருந்தார்.

இவ்விடையறாப் பணிகளினூடே தம்மில்லத்தில் எவ்வகையான கைம்மாறும் பெறாது தனிப்பட்ட முறையில் , ஆர்வமுடையவர் சிலர் பலர்க்குத் தமிழிலக்கண இலக்கியங்களை முறையாகப் பாடம் சொல்லிவந்தனர். தமிழ் கற்பித்தலில் அடிகள் இன்பமே கொண்டனர். தமிழே இன்பம் தமிழ்ச்சுவை கண்டோர் விண்ணோர் அமுதமும் விரும்பார் அன்றோ?

ஆகவே, அடிகள், ராஜாராம் என்பார்க்கும் 'நால்வர் நான்மணி மாலை' 'நன்னூல்', 'பெரியபுராணம்', 'பிரபுலிங்க லீலை', 'திருமுருகாற்றுப் படை ' முதலிய நூல்களையும் , சிவப்பிரகாசய்யர் என்பவருக்கு நன்னூல் விருத்தியையும், வேங்கடை கண்ணன் என்பாருக்குக் கலித்தொகையையும், நாகரத்தினம் பிள்ளை என்பாருக்கு நைடதத்தையும், வேறு சிலர்க்கு வேறு சில நூல்களையும் பாடம் சொல்லி வந்தார்.

## எஸ். அனவிரத நாயகம் பிள்ளை, எம், ஏ., எல். டி., பாடங் கேட்டல்

இவ்வாறு பாடம் கேட்டவர்களில் தலைசிறந்தவர் அனவிரதநாயகம் பிள்ளையாவர். இவர் அடிகளின் கல்லூரி மாணவரும் அடிகளின் நெருங்கிய நண்பருமானவர். அடிகள் இவர்க்குச் சீவக சிந்தாமணி பாடம் சொன்னார். பல நூல்களை இவருடன் சேர்ந்து பயின்றார். அனவரதர் தமிழில் எம். ஏ. பட்டம் பெறுவதற்கு அடிகள் பெரிதும் உதவினர். தமிழாராய்ச்சி செய்தலிலும் அவரைப் பயிற்றுவித்தனர். இவர் திருநெல்வேலிச் சீமையினர். பிற்காலத்தில் சென்னைக் கிறித்துவக் கல்லூரியிலும்,

இலங்கைப் பல்கலைக்கழகத்திலும் தலைமைத் தமிழ்ப் பேராசிரியராகப் பணிபுரிந்தவர்.

**கல்வி நிலையங்களில் சொற்பொழிவுகள்**

இவ்வாறு இடையறாப் பணிபுரிந்து வந்த அடிகள் சென்னையிலுள்ள மாகாணக் கல்லூரி முதலிய கல்லூரிகளிலும், தொண்டை மண்டலம் துளுவ வேளாளர் உயர்நிலைப் பள்ளி முதலிய பள்ளிகளிலும் இடையிடையே சென்று சொற்பொழிவுகளாற்றினர். அத்துடன் சென்னையை அடுத்துள்ள சைதாப்பேட்டை, பரங்கிமலை முதலிய ஊர்களிலிருந்த சங்கங்களிலும் பன்முறை பேசியுள்ளனர். மற்றும் அடிகள் சென்னையிலும் பல சமய சபைகளிலும், தமிழ் மன்றங்களிலும் சொன்மாரி பொழிந்துள்ளனர்.

அவற்றில் குறிப்பிடத் தகுந்தவை பரங்கிமலை 'லைப்ரரி யூனியனி'ல் கீதையைப் பற்றியதும், சென்னைச் சிவனடியார் கூட்டத்து ஆண்டு விழாவில் தலைமை தாங்கிச் ''சித்தாந்தமும் இலக்கியமும்'' பற்றியதும், 'பெசன்ட் லாட்ஜில்', ''சாங்கிய பொழிவு பற்றியதும் ஆகும்.

மெய்கண்டார் திருநாள் சைவ கோட்பாடுகளையெல்லாம் சிறு பா( சூத்திரம்) வடிவில் அமைத்துச் சிவஞான போதம் என்னும் அரிய நூலை 700 ஆண்டுகட்கு முன் இயற்றியவர் ''மெய்கண்டார்'' ஆவர். அவர் திருநாளை சென்னை வாழ் சைவப் பெருமக்கள் ஆண்டுதோறும் கொண்டாடுவர். அக்கொண்டாட்டத்தின் பகுதியாகப் பேரவைகள் நடைபெறும். அவற்றிலெல்லாம் அக்காலத்தில் சென்னையிலிருந்த தலைசிறந்த சைவப் பெரியார் களான பூவை அஷ்டாவதானம் கலியாணசுந்தர (யதீங்தரர்) முதலியார், திரு வி. க. ஆகியவர்கள் விரிவுரைகள் நிகழ்த்துவர்.

அவ்விழாக் கூட்டங்கட்கு அடிகளே தலைமையாயிருந்து அரியதாம் பேருரைகளை நிகழ்த்தி வந்தார்.

**திருக்கோயில் திருவிழாக்களில் கவர்ச்சி**

அடிகள், சென்னை நகரைச் சார்ந்த திருவொற்றியூர், திரு மயிலாப்பூர், திருவான்மியூர் ஆகிய தேவாரப் பாடல்பெற்ற தலங்களுக்கு அடிக்கடி சென்று வழிபட்டு வந்தார். அத்

திருக்கோயில்களில் ஆண்டுதோறும் நடைபெறும் பெரு விழாக்களில் கலந்துகொண்டு மகிழ்ந்தார். அவ்வப்போது அக்கோயில்களிலும், சென்னையிலுள்ள பிற சிவபிரான் கோயில்களிலும் இடையிடையே சிவநெறி பற்றிய அரிய சொற்பொழிவுகளும் ஆற்றியுள்ளார். திருவொற்றியூர், திருவான்மியூர் இயற்கைக் காட்சிகள் அடிகளின் திரு உள்ளத்தைப் பெரிதும் மகிழ்விக்கும்.

## மெய்யுணர்வை நாடல்

இவ்வாறு அடிகள் கிறித்துவக் கல்லூரியில் பேராசிரியராய்ப் பணியாற்றியும் -அரிய சிவத்தொண்டு தமிழ்த்தொண்டுகள் புரிந்தும் சென்னைச் செல்வராய்- பேரழகராய் - பெரும் புகழராய் பெரும் புலவராய் இனிதாக 12 ஆண்டுகளாக வாழ்ந்து வருங்கால், தமிழகச் சான்றோர்கள்பால் வழிவழியாக வரும் மெய்யுணர்வு ஆர்வம் அடிகளையும் ஆட்கொண்டது. அதனால், மெய்யுணர்வளிக்குங் குருவை நாடிற்று அவருள்ளம். மெய்யுணர்வு பெற்றுக் கல்லூரிப் பணியை விடுத்துச் சிவத்தொண்டாற்றப் பெரிதும் அவாவுடையரானார்.

## ராசானந்த அடிகள்

இத்தவஞானி கும்பகோணத்தைச் சார்ந்த கொட்டையூரில் அமர்ந்திருந்தார். திருமூலர் வழி வந்த அருட்குரவராய-சிவராஜயோகராய இக்குருவைத் திருவருளால் அடிகள் 1907-ல் கண்டு நெடுவணக்கம் செய்தார். அடிகள் தகுதி கண்டு அவரை ராசானந்தர் ஆட்கொண்டு 'தீட்சை செய்து நிட்டையுங் கற்பித்தார். சிவராஜயோக மறையையும் அருள்புரிந்தார். அடிகள் உள்ளம் துறவை நாடிற்று.

## தமிழ் ஒழிப்பு

இந்நிலையில் அக்காலத்தில் சென்னைப் பல்கலைக்கழகம், கலைப் பட்டப் படிப்புக்குக் கட்டாயப் பாடமாக இருந்த தமிழை விருப்ப பாடமாக்கிவிட்டது.

இச்சட்டத்தால் கல்லூரிகளில் தமிழாசிரியர் பலர் வேலை இழக்கலாயினர். அவர்களில் நம்மடிகளும் ஒருவர். ஆயினும், முதல்வர் மில்லர், அடிகளின் அரும்புலமையை உணர்ந்தவராதலின்

அடிகட்குக் கல்லூரியிலேயே வேலை தர முனைந்தனர். வேலையை விடவேண்டாமென்று வற்புறுத்தினர். நண்பர்களும் அவ்வாறே வற்புறுத்தினர். ஆயின், அடிகள் உள்ளம் முன்னே தெரிவித்தபடி மெய்ப்பொருளை அறிய துறவு நிலைமை அவாவி நின்றபடியால் அவர்கள் விருப்பத்திற்கிணங்கவில்லை. எனவே, அடிகள் துறவுடன் தனித்திருந்து அமைதியாக அருட்பணியாற்ற முடிவு செய்துவிட்டார்.

## பல்லாவரம் குடிபுகல்

இவ்வமைதியான பணிக்கு "நகரம் கூடாது, நாட்டுப்புறமே வேண்டும்" என விரும்பிய அடிகள் அந்நாளில் சிற்றூராய் - அழகிய இயற்கைச்சூழல் மிக்கதாய் விளங்கிய பல்லாவரத்தில் அடிகள் 10-4-1911-ல் குடியேறினார். அதற்கு முன்னால் கல்லூரிப் பணியை விட்டார்.

பல்லாவரம், புகைவண்டி நிலையமுள்ள ஊர், சென்னைக்கு ஐந்துகல் அண்மையிலுள்ளது. அவ்வூரில், அடிகள் அமைத்த மாளிகை உள்ள சாவடித் தெருவில் ஒரு வீட்டில்தான் அன்று அவர்கள் குடிபுகுந்தனர். அவ்வீடு, அடிகளின் மாளிகைக்கு அடுத்துள்ள வீட்டின் அடுத்த வடக்கு வீடாகும்.

## பல்லாவர வாழ்க்கை - துறவியாதல்

பல்லாவரம் குடிபுகுந்த போது அடிகட்கு அகவை 35. அவர் தாயார் சின்னம்மைக்கு அகவை 73. மனைவியாருக்கு 32. மகள் சிந்தாமணி (17) நீலாம்பிகை (11) திருஞான சம்பந்தம் (8) மாணிக்கவாசகம் (6) திருநாவுக்கரசு (4) சுந்தர மூர்த்தி (2) திரிபுர சுந்தரி பிறந்து சில திங்கள் கழித்து அடிகள் 27-8-1911-ல் துறவியாயினர். தம்மை உட்படப் பத்துப் பேர்களைப் பாதுகாக்க வேண்டிய அடிகள் துறவியாகலாமா? துறவியாயின் இவர்கள் வாழ்வு எப்படி? குடும்பத்திலிருந்து கொண்டே துறவியாக இருத்தல் அறமா? இதுபற்றி அடிகள் கொண்ட கருத்தினை இங்குச் சிறிது விளக்கிக் கூறுவேன்:- அது,

## துறவு பற்றி அடிகள் கருத்து

"சான்றோர்கள், மக்கள் உள்ளத்தே அறிவையும், அன்பையும் பெருக்கும் பணியிலும், தெய்வ உணர்வை வளர்க்கும் வகையிலும்

முற்றிலும் ஈடுபட்டுப் பணியாற்றல் வேண்டும். தம் குறிக் கோளுக்கு மாறான வகையில் உயிர் வாழ்வதற்காக வேறு பணிகளை தம்மை வழங்கிவிட்ட பெரியோர்கள் அதற்கான வகையில் உடை நடைகளுக்கேற்பவே வாழ்க்கை நிலையமையும் என்பது யாவரும் அறிந்ததே. எல்லாச் சமயத்தவர்களும் இவ்வுண்மை உணர்ந்தே தம் சமய ஊழியர்களுக்குத் தனியான உடை நடைகளை வழங்கியுள்ளனர். அரசியலிலும், காவல், போர் முதலிய துறைகளுக்கும் உடை நடைகள் வேறு தாமே! கட்சிகளிலும் இவ்வாறு உண்டே!

எனவே, சிவ நெறிக்கும் செந்தமிழுக்குமே தம்மைத் தொண்டராக வழங்கிவிட்ட அடிகள் அவற்றிற்கான வகையில் காவி உடையும், துறவு நடையும் மேற்கொள்ளலாயினர். இல்லற நெறியினிற்பார், அந்நெறிலேயே ஈடுபட்டழியாது அதனினும் படிமுறையில் மேம்பட்ட தொண்டு நெறியாம் துறவு நெறியை மேற்கொள்ளல் நல்லதே! இதனாலன்றோ, தொல்காப்பியர்.

"கா மஞ்சான்ற கடைக் கோட்காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம் புரி சுற்ற மொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் கடனே,"

என்றார்.

இங்ஙனம் நிலைமாறு கண்டோர் மனைவி - மக்களை விட்டோடல் உண்மைத்துறவாகாது. தம்மைச் சேர்ந்தாரை வறுமையில் வாடவிட்டுத் தவம் செய்வது இறைவன் அருளுக்கு மாறானது. அதனாற்றான் தொண்டு நெறியில் நிற்கும் துறவியார் மனைவி மக்களுடனிருந்தே அவர்களுக்குதவி அவர்களையும் முன்னேற்றி மண்ணுயிர்களுக்குந் தொண்டாற்றல் வேண்டும். இவ்வுண்மை மேற்காட்டிப் தொல்காப்பிய நூண்பாவினால் நன்கினிது விளங்குவதாகும். இதுவே, பண்டைத் தமிழ்ச்சான்றோர் கடைப்பிடித்த நன்னெறியாம்" என்பதாம்.

இக்கருத்தினை ஏற்கும் வகையிற்றான் பண்டைக்கால விசுவாமித்திரர், வசிட்டர் முதலிய முனிவர்களின் வரலாறுகள் அமைந்துள்ளன என்பதனை நம் பண்டைப் புராணங்கள் வாயிலாக நன்கறியலாம். இது நிற்க.

துறவியாவதற்கு அடிப்படையாயுள்ள மறைமொழி அறிவுறத்தல் (மந்திர உபதேசம்) முன்பே, அடிகள் முன்பு குறிப்பிட்ட தம் அருட்குருவான - திருமூலர் வழி மரபின் வந்த சிவராஜயோக ராசானந்த அடிகளிடம் பெற்றிருந்தார். ஆதலினால் அவரருளையே கருத்துட்கொண்டு, தன்னுள்ளம் கோயில் கொண்ட திருஞானசம்பந்த சுவாமிகளின் திருப்பெயர் தாங்கியுள்ள சம்பந்தன் என்னும் ஏழாண்டுச் சிறுவனைத் தன் கைகளால் எடுத்துக் கொடுக்கச் செய்து காவியாடைகளை அணிந்து துறவியானார்.

அதனால், இதுவரை வழங்கிவந்த நாகை வேதாசலம் பிள்ளை என்ற பெயர் மாறிச் சுவாமி வேதாசலம் என்ற பெயர் அடிகட்கு வழங்கலாயிற்று. துறவு பூண்ட அடிகள் அதற்குரிய யோகம், வழிபாடுகளில ஈடுபட்டிருந்தனர்.

அடிகள் தாம் இன்புறுகின்ற அருங் கருத்துக்களை எல்லாம் தம் நூல்களில் மட்டுமன்றித் தம் அரிய சொற்பொழிவுகளாலும் அன்பர்கள் அறிந்து உணர்ந்து இன்புறல் - வேண்டும் - நலம்பெறல் வேண்டும் என்னும் பேரார்வம் கொண்டிருந்தார். ஆனால் கல்லூரியில் தாம் ஆசிரியராகப் பணியாற்றிய காலத்தில் வெளியூர் கட்கு அன்பர்கள் அழைக்கும்போதெல்லாம் சென்று சொற்பொழிவு களை ஆற்றக்கூடாதவராயிருந்தார். அக்குறை, அடிகள் கல்லூரியை விட்டுத் துறவியானதால் நீங்கியது.

எனவே, அடிகள் தமது நண்பர்கள், மாணவர்கள், அன்பர்கள் முதலியோர் வேண்டுகோட்கிணங்கித் தமிழத்திலுள்ள நகர்களிலும், பேரூர்களிலும், சிற்றூர்களிலும் சென்று ஆண்டுவிழாக்களில் தலைமைதாங்கியும், தனிச்சொற்பொழிவு களாற்றியும் தீந்தமிழும் சிவநெறியும் பரப்புவாராயினர்; தம்மிடத்துச் சமய மரபு மாணவராக விரும்பியார்க்கு மெய் மறையை அறிவுறுத்தினர். சில ஊர்களில் தமிழ் - சிவம் வளர்க்கும் சபைகளை நிறுவினர்.

ஆங்காங்கு, இந்நற்பணிகளுக்காக அடிகளை அழைப்போர் அவர்களைத் தெய்வமெனப் போற்றி மேளதாளங்களுடன் நகர்வலமாக வரவேற்றுப் பாராட்டுரைகள் படித்தளித்தும், சிறந்த விருந்துகள் செய்தும், வழிபட்டும், சொற்பொழிவுகட்குப் பொன் வழங்கியும் சிறப்பித்தனர். பலர், பால், பழம், மாலை, காணிக்கை முதலிய கையுறைகளுடன் சென்று அவர்கள் திருமுன் வைத்து

வணங்கியும், அவர்தம் உரையாடல்களைக் கேட்டு மகிழ்ந்தும் அடிகளைப் பலவாறு போற்றினர்.

**மாட்சியுறல்**

இவற்றால் அடிகளின் வாழ்க்கை நிலை, அவர் தம் கல்லூரியாசிரியர் நிலையினும் பல வகையில் மேம்பட்டு விளங்கியது. இதனை அடிகள் தம் 8-5- 1912 ம் நாட்குறிப்பில்* "இளவரசனைவிட வாழ்க்கையை இன்பமாக நடத்துகிறேன், எங்கும் எனக்கு மிகச்சிறந்த வரவேற்பும், ஒப்புரவும் செய்யப் படுகின்றன" என்று குறித்துள்ளனர்.

இவ்விரிவுரைப் பணிகளுக்கிடையே அடிகள், சிவபிரான், திருமால், முருகன் திருக்கோயில்களுக்குச் சென்று வழிபட்டும், இயற்கைச் சூழலின் எழில்மிகு இடங்களைக் கண்டின்புற்றும் மகிழ்ந்தனர். புலவர்கள், அன்பர்கள், செல்வர்கள், பெருஞ் செல்வர்கள், அரசியற்றலைவர்கள், குறுநில மன்னர்கள், அரசர்கள் என்றின்னவர்களின் அளவளாவலும் பெற்றுப் பெரிதும் மகிழ்ந்திருந்தனர்.

ஒரு முறை அடிகளின் தோற்றம், சொற்பெருக்குகளில் ஈடு பட்டோர் மீண்டும் மீண்டும் அவர்களைத் தம் ஊர்கட்கு வருவித்து அவர்கள் தம் சொற்பொழிவுகளைக் கேட்டும், அவர்களை வழிபட்டும் , அவர்களோடு அளவளாவியும் மகிழ்வாராயினர்.

இப்பயணங்களாலும், பேச்சுக்களாலும் அடிகளியற்றிய நூல்களின் விற்பனையும் மிகுதியாயிற்று. அடிகள், ஆசிரியராயமர்ந்து நடத்திவந்த 'அறிவுக்கடல்' என்னுந்திங்கள் வெளியீட்டினை வாங்குபவர்களின் ( சந்தாதார்) தொகையும் மிகுதியாயிற்று . அவர் தம் நூல் வெளியீடுகளுக்கும், திங்கள் வெளியீட்டுக்கும் நன்கொடைகளும் கிடைத்தன. முற்கூறியாங்குப் பேச்சுக்குரிய கட்டணங்களே யன்றித் திருவடிக் காணிக்கைகளும் கிடைத்தன. ஆதலின், அடிகள் குறைவிலா நிறை வாழ்வு கொண்ட கோமானாய் மகிழ்ந்தார், வாழ்ந்தார்.

அடிகளின் அருட்பொலிவு அழகுக்கு அழகு செய்வதாகும். கல்லாடைக் கோலத்தால் அது மேலுஞ்சிறந்திலங்கியது. அடிகளின்

* இக் குறிப்பு அடிகள் வெளியூர் யாத்திரையிலிருந்த போது எழுதப்பெற்றது.

சிறப்பை மிகுவித்ததில் துறவுக்கோலம் முதலிடம் பெற்றது என்னலாம். அவர் தம் அறிவும், ஆற்றலும், தோற்றமும் பொலிவும், எழுத்தும் பேச்சும், உடையும் நடையும், உருவுந்திருவும், உணர்வுந் துறவும் கண்டார் எல்லாரையுங் காந்தம் கண்ட இரும்பைப் போலீர்த்தன.

''இத்தகு பெருமகனைக் கண்டோமில்லை'' என்பாரும், ''காணமுடியாது'' என்பாரும், ''இனி இவர் போற் சிறந்தார் தோன்றார்'' என்பாரும் எங்கும் நிறைந்தனர், அடிகளின் சீரும் சிறப்பும் கண்டு பொறாமை கொண்ட பொறாரும் அவர் தம் புகழ் வெள்ளத்தில் சிக்கி அவரைப் பாராட்டும் நிலையடைந்தனர்.

இங்ஙனமாக அடிகள் 1911 முதல் 1920 வரையில் தமிழகத்தும் ஈழத்தும் ஏறக்குறைய தொடர்ந்து புரிந்த திருத்தொண்டுகள் எல்லாம் ஏராளமாகும். அவற்றில் சிறந்த சிலவற்றை இங்குக் காண்போம். அக்காட்சிக்கு வாய்ப்பாக அடிகள் ஆண்டு விழாக்களில் தலைமை தாங்கல், விரிவுரைகள் நிகழ்த்துதல், இவற்றினுக்காக யாத்திரை செய்தல் ஆகியவை பற்றிய விளக்கமான செய்திகளை இங்குத் தொகுத்துக் காண்போம்.

## விழா நடத்தும் முறை

அடிகள் தாம் தலைமை தாங்க ஒப்புக்கொள்ளும் விழாக்கள் செம்மையாகச் சிறப்பாகப் பயன்தரும் வகையில் நடைபெறல் வேண்டும் என்னும் கருத்து மிக உடையர். ஆதலால், விழா நடத்து வோருக்கு விழா நடத்தும் பருவம், காலம், நேரம், பந்தலிடும் அமைப்பு, நிகழ்ச்சி அச்சிடும் முறை, அழைப்பனுப்பப்படும் முறை, தலைவருக்கும், சொற்பொழிவாளர்களுக்கும் தங்குவதற் கான வசதியான இடம், உணவு முதலியவை பற்றி முன்கூட்டியே எழுதுவார்.

பின், விழாவுக்கு ஓரிரு நாட்கள் முன்னதாகவே அது நடக்கும் ஊர்க்குச் சென்று விழா நடக்கும் இடம், மேடை, பந்தல்களைப் பார்ப்பர். அவைகளில் செய்ய வேண்டிய திருத்தங்களைக் கூறுவர், முற்பகல் விழாவினை யாவர்க்கும் வசதியாக இருக்கும் பொருட்டு முற்பகல் 9.30 க்குத் தொடங்கவும் பகல் 1 மணிக்குள் முடிக்கவும்; ஏற்பாடு செய்வார்.

பிற்பகல் விழா நிகழ்ச்சியை ஏற்கார். மாலை 5 மணி முதல் 6½ வரை ஓர் நிகழ்ச்சியும் பின் அரை மணி இடை நேரமும் தருவர். பின் 7 முதல் 10 வரையிலும், இன்றியமையாதாயின் அதற்கு மேலும் 12 வரையிலும் நிகழ்ச்சிகள் நடைபெற இசைவர். நிகழ்ச்சியின் தொடக்கத்துக்கும் பேச்சுகட்கு இடையிடையேயும் தேவாரத் திருமுறைகளைப் பண்ணுடன் இன்னிசையுடன் இசைக் கருவிகளுடன் ஓதுவார்களை அமைத்துப் பாடச் செய்வர், பேச்சாளர்களை காலத்திற் பேச்சினை முடிக்கச் செய்வர்.

## தமது வசதிகள்

அடிகள் தம்மைத் தலைமையாக அழைக்கும் கழகத்தார்க்கு முதலில், தாம் புரிந்து வரும் தமிழ்த் தொண்டு, சிவத்தொண்டு களையும் விரித்துரைப்பர். தாம் வேறு வகையில் வருவாயுடை யரல்லர் என்றும், நற்செயல்கள் நிறைவுற-நாடு பயனுற - ஆராய்ச்சிக்காக நூல்களை வாங்கவும், நூல்கள் எழுதவும், அவற்றை அச்சிடவும் இத்தொண்டுகள் புரியும் தாமும், தம் குடும்பத்தவரும் வாழவும் தாம் தலைமை தாங்கும் முயற்சிக்காக முந்நூறு ரூபாய்கள் முதலில் அனுப்புதல் வேண்டுமென்றும், பயணத்துக்காக இரண்டாம் வகுப்புக் கட்டணமும், பின்பு அனுப்பப்படல் வேண்டுமென்றும் கூறுவர்- எழுதுவர்.

அத்துடன் விழா நாட்கள் மூன்றிலும் அதற்கு முன் பின்னாக நான்கு நாட்களிலும் தாம் தங்குவதற்கு வசதியான தனி மாளிகையும், சமையலாளும், ஊழியரும் தேவை என்றும், இவ்வேழு நாட்களிலும், தமக்கும், தம்மைச் சார்ந்துள்ளார்க்கும், வேண்டிய உயர் வகை அரிசி, நெய், பால், தயிர், கோதுமைப் பருப்பு, துவரம் பருப்பு, உலுத்தம் பருப்பு, காய்கறிகள், பழுப்புச் சர்க்கரை, பிறபண்டங்கள் இவை என்றும் நீண்ட பட்டியல் ஒன்றையும் விடுப்பர். இவ்வேற்பாடுகளில் பேரம் பேச இணங்கார். அப்படிப் பேசுவோர் அழைப்பினை மறுத்து விடுவார். "நாங்கள் ஏழைகள். எங்கள் சிறு காணிக்கைகளை ஏற்றுக் கொண்டு விழாவில் தலைமை தாங்க வேண்டுமென்று" சிலர் நேரில் போந்து அடிகளை இறைஞ்சுவர். அவர்கட்கு அடிகள் "உங்களுக்கு வசதி இல்லாவிடின் என்னை அழைத்துத் தொல்லைப்பட வேண்டாம்," யான் எழுதியுள்ள நூல்களை வாங்கிப் படியுங்கள்; பரப்புங்கள். நான் இங்கிருந்து( பல்லாவரம்) உங்கள் ஊருக்கு வந்து தலைமை

தாங்குவதாயின் ஏழு நாட்களாகும். அதற்கு முன் பின்னாக எனக்குப் பணிகளைத் தொடங்க ஏழு நாட்களாகும். ஆக பதினைந்து நாட்கள் யான் அங்கு வந்தும் போதிய பொருள் வருவாய் பெறாமலிருப்பதைவிட இங்கேயே இருந்து நூலாராய்ச்சி செய்தும், நூல்கள் எழுதியும் நாட்டுக்கு நிலைத்த அறிவுப் பயனைத் தரலாமே! அன்றியும், இருபதாயிரம் ரூபாய்களுக்கு (அப்போது) நூல்கள் வாங்கி ஆராய்ந்து வருகிறேன். எனது நூல்களை அச்சிட ஆயிரக் கணக்கில் செலவிடுகின்றேன். குறைந்த தொகைக்காக உங்கள் விழாவிற்கு வந்தால் என் முயற்சியும் வருவாயும் குறையும். மேற்கொண்டு என் தொண்டுகளுக்கும், என் வாழ்க்கைச் செலவுக்கும் யான் என் செய்வேன்? இந்நாட்டில் என் போன்ற ஆராய்ச்சியாளர்க்கு அரசாங்க உதவி ஒன்றுமில்லை. செல்வர் பலர் பாழ் வழிகளில் - ஆடம்பர ஆரவாரத் தன்னல வழிகளில் பணத்தை வாரி வாரி இறைக்கின்றனர். ஒரு சிலர்- மிகச் சிலர்- விரல்விட்டெண்ணக் கூடிய சிறு செல்வரும், உங்கள் போன்ற ஏழை மெய்யன்பர்கள் சிலருமே என் அறிவுப் பணிக்கு உதவி வருகின்றீர்கள். இவ்வுதவியும் குறைந்தால் என் பணிகள் தமிழகத்திற்கு எவ்வாறு கிடைக்கும்? மேலை நாடுகளில் கற்ற வல்லார்கட்கு ஏராளமாய் உதவுகின்றனர். அவர்கள் எழுதிய நூல்களை ஆயிரக் கணக்கானவர்கள் வாங்கிப் படிக்கின்றனர். அதனால் புலவர்கள் தம் வாழ்க்கையைத் துன்பமின்றிக் கவலையின்றி இனிதே நடத்து கின்றனர். அதனால் அரிய பல நூல்களை எழுதுகின்றனர்.

இப்பாழ்ந்த தமிழ்நாட்டில் அப்படி எல்லாம் உதவிகள் ஒன்றுமில்லையே? ஏழை மக்களும், பயனற்ற பல வழிகளில் பணத்தைப் பாழாக்குகின்றனரே! அவர்கள் சிறிது சிறிது கொடுத்தாலும் என் தொண்டு மேலும் பயன் தருமே.'' என்று கேட்போர் மனங் கரைந்துருகப் பேசுவார். இவ்வுண்மை உரைகளைக் கேட்டவர்கள் எவ்வாறு மறுமொழி கூறுவர். வணங்கிச் செல்வர்.

சென்றவர் அடிகளின் தொண்டின் சிறப்பினால் உந்தப்பட்டுப் பெரு முயற்சி செய்து நிதிதிரட்டி அடிகள் விரும்பியதற்குப் பன் மடங்கு சிறப்பாகவே அவர்கட்கு வசதிகள் செய்து தந்தும், பொருள் கொடுத்தும் விழாக்களைச் சிறப்புடன் நடத்தியும் மகிழ்வர். தமது

வசதிகள் பற்றிக் குறைகூறும் பொறாமையாளர், பணப்பேராசை கொண்ட இழிந்த செல்வர்களை அடிகள் பொருட்படுத்தார். இவர்கள் தாம் எச்செல்வர்களையும் சென்று பார்ப்பதில்லையே? அவர்கள் விரும்பின் தாமே வந்து இவர்களைக் காணல் வேண்டுமே!

**விழாச் சிறப்படைதல்**

அடிகள் ஒரு விழாவிற்குத் தலைமை தாங்க வருகின்றார்கள் என்றால் - விழாவுக்கான நன்கொடைகள் இரட்டிப்பாகக் கிடைக்கும்; ஏராளமாகவும் கிடைக்கும். விழாச் செய்தியும், விளம்பரங்களும், மிகும், கற்றறிந்தார் கூட்டமும், அறிஞர் குழுவும், பல்வகையான அரசியல் கழகத்தவரும், அன்பரும் , பிறரும் அடிகளைக் காணவும், அவர்களின் இனிய சொற்பொழிவைக் கேட்கவும் பேரார்வம் கொள்வர், நாள் எண்ணி நிற்பர். தமிழ்ப் புலவர்களின் உள்ளக் கிளர்ச்சி கூறுதல் வேண்டா. சிவநேயச் செல்வர்களின் ஊக்கம் கரை கடக்கும். ஊரே கிளர்ச்சியா யிருக்கும்.

விழா நாளன்று அடிகட்குச் சிறந்த ஊர்வலம் மேள தாளத்துடன் சிறப்பாக நடைபெறும். வணக்கம் மிகுந்த வரவேற்புகள் நடைபெறும். குறிப்பிட்ட நேரத்திற்கு முன்னதாகவே கூட்டம் நிறைந்து விடும். இனிமையும், புனிதமும் நிறைந்த அடிகளைச் சுற்றிப் பெரும் புலவர்களும், பல நிலைகளில் சிறந்த தலைவர்களும் சூழ்ந்தமர்ந்திருப்பர். கூட்டத்தவர்களின் கண்கள் யாவும் அடிகளின் திருமுகத்தை நோக்கி மகிழ்ந்தவாறே இமையா திருத்தலின் அவர்கள் 'இமையோர்' போன்றிருப்பர்.

சபைக்கான சடங்குகள் யாவும் முடிந்தபின், அடிகள் பேச எழுந்து நின்று அவை முழுவதையும் எப்புறமும் சில கணங்கள் உற்று நோக்குவர். அவ்வளவில் அவை அமைதியின்பத்தில் அடங்கும். எல்லையற்ற தெய்வ அமைதி நிலவும்.

**பேசுந்திறம்**

அவ்வளவில் அடிகள் கருத்தொன்றித் தலையைச் சாய்த்துக் கைகளைக் குவித்துக் கண்களை மூடிக் காம்போதி இசையில் ''சீரார் சண்பைக் கவுணியர்'' என்று திருஞானசம்பந்தர்மீது ராமலிங்க வள்ளல் பாடியுள்ள வணக்கப் பாடலைப் பாடுவர். தேனினும்

இனிய அடிகளின் தீங்குரலால் அப்பாடல் சொற்றெளிவு பெறும், பொருள் விளங்கும், உணர்ச்சி ஓங்கும். கேட்போர் அனைவர் தம் உள்ளங்களும் ஒன்றாகி உருகும்.

அடிகளை அப்பாடலில் ஒன்றி மெய்சிலிர்க்க - நாதழு தழுக்கக் கண்ணீர் பெய்வர். இடையிடையே உருக்க மேலீட்டால் பாடவியலாது தத்தளிப்பர், சிறிது நேரம் நிறுத்திப் பின் பாடுவர். பின் அக்காம்போதியிலேயே ''கற்பனை கடந்த ஜோதி '' என்ற சேக்கிழார் பாடலையும், பின் மத்தியமாவதி இசையில் 'தொடுக்குங் கடவுட் பழம் பாடல்'' என்று அம்மைமீது குருபரர் பாடிய பாடலையும், மோகனத்தில் திருவாசகத்தில் 'பால் நினைந்தூட்டும்' என்ற பாடலையும் முன் போலவே உருகிய நிலையில் பாடி முடிப்பர்.

அடிகள் அடைந்த அதே உணர்ச்சி நிலைகளை அவையோரும் அடைவதில் வியப்பென்ன? இவ்வணக்கப் பாடல்கள் முடிய மணிநேரத்திற்குக் குறையாது. சில நேரங்களில் அடிகளின் உருக்கம் எல்லை கடந்துவிடும். அப்போது அவர்கள் பேச முடியாமல் விம்மி விம்மிக் குழந்தைபோல் அழுதழுது அமர்ந்து விடுவர். பின்பவர் தம்மைத் தேற்றிக்கொண்டு பேச மேலும் நேரமாகும். அடிகளின் இந்நிலையில் அவையிலுள்ளோர் பலர், தாம் இதுவரையில் அடைந்திராத - உணர்ந்திராத பத்திமை மிகுந்த நிலையையடைவர். அடிகளின் அரிய உணர்வுகளில் இவ்வன்புநிலை ஒன்றைக் காணலும், பெறலுமே கேட்போருக்குக் கிடைத்தற்கரிய அரும் பொருளாம் என்பதனை அறிந்தார் அறிவர்.

ஒருவாறாக வணக்கப் பாடல்களை முடித்துக் கொண்டு சிறிது பாலருந்தியப்பின் கனைத்துத் தொண்டையைச் சீர் செய்து கொண்டு அடிகள் தமது நடுவான குரலிலே, ''அன்பர்களே!'' என்று உறுதியாகக் கணீர் என்று பேசத் தொடங்குவர்.

முன்னுரையில் விழாக்களின் தலைவர்கள் பின் வருமாறு பேசுவார்கள். அது ''அறிஞர் பெருமக்களே! இவ்விழாவுக்குத் தலைமை தாங்கத் தக்கப் பேரறிஞர்கள் பலரிருக்கத் தங்களன்பின் மிகுதியால் தகுதி சிறிதுமில்லாத அடியேனைத் தலைவராகத் தேர்ந்தெடுத்து இச்சிறியேனைச் சிறப்பித்தீர்கள் தங்கள் அன்பினுக்கு என்றுங்குன்றா நன்றியும், வணக்கமுமுரை...யோம்'' என்பதாம்.

ஏனைய தலைவர்கள் இவ்வாறுதான் பேசல் வேண்டும். அதுவே முறை ஆனால் அடிகளோ, "அன்பர்களே! எம்மை இவ் விழாவுக்குத் தலைவராகத் தேர்ந்தமைக்கு உங்கள் எல்லார்க்கும் அம்பலவாணர் அம்மையின் அருள் பெருகுக! என வாழ்த்து கின்றோம்" என்பர். அடிகள் இவ்வாறு தம்மைத் தாழ்த்தாது உயர்த்திப் பேசும் பேற்றியினை இயல்பாகவே பெற்றிருந்தார். அவர்க்கது தகும். நிமிர்ந்த நடை அரிமாவுக்கு (சிங்கம்) இயல்பேயன்றோ? இனி அடிகளின் பேச்சின் சிறப்பைக் காண்போம்.

**நாவன்மை**

அடிகள் தாம் பேச எடுத்துக் கொண்ட பொருளைப் படிப்படியே விளக்கிச் செல்வர். செய்திகளை அவற்றிற்கேற்ற சுவைகளுடன், மெய்ப்பாடுகளுடன் குரலை உயர்த்தியும், தாழ்த்தியும், சமன் செய்தும் பேசுவர். தகுதியான இடங்களில் மேற்கோள் பாடல்களை இன்னிசையுடன் பாடுவர். உலகியல் மேற்கோள்களையும், உவமைகளையும் உருவகங்களையும் இனிமை படக் கூறுவர். எளியோர்களின் அறியாமையான உரையாடல்களை அவர்களைப் போலவே பேசி நடிப்பர். அவையோர் அதுகேட்டுக் குறுநகையும், பெரு நகையும் கொள்வர். அடிகள் அடையும் உணர்ச்சி நிலைகளைக் கேட்போரும் அடைவர். அவர் பின் செல்வர்; பள்ளங்கள் கண்டவிடத்து நீர் ஓடுவது போல.

அடிகள் திருஞான சம்பந்தரைப் பற்றிப் பேசுங்கால் அவையோரைச் சீர்காழிக்கே அழைத்துச் சென்று விடுவர். உலகில் உலவும் இள ஞாயிறு போன்ற ஞானசம்பந்தர், ஞானப்பாலுண்டு கடைவாயில் பால் ஒழுக நிற்பதைக் காட்டுவர். மக்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அடிகள், சிவபாத இருதயர், தம் கையால் சிறு கோலோச்சிச் சம்பந்தரை நோக்கி அதட்டியபடி "எச்சிலாம்படி உனக்குப் பால் தந்தாரைக்காட்டு" என்று கேட்பதையும், அதற்கு விடையாகச் சின்னஞ்சிறிய ஞானசம்பந்தக் குழந்தை தன் தாமரையனைய கண்களிலிருந்து நீர்த்துளிகளை முத்துப் போற் சிந்தியும், இடக்கையில் பால் கிண்ணத்துடன், செந்தாமரை போலச் சிவந்த சிறிய தன் வலக்கையைத் தன் உச்சிக்கு மேலே உயர்த்தியும்

சுட்டு விரலால்- சுட்டறிவுக் கெட்டாத பெரும் பொருளாம் ஒரு பொருளைச் சுட்டிக் காட்டியும் எனக்குப் பால் தந்தான் இவனே'' என்று மழலை மொழியாலே- இன்னிசையும் இன்புறும் இசையாலே ''தோடுடைய செவியன்'' என்று பாடுவதையும் தம் மெய்ப்பாடுகளால் விளக்கிக் காட்டி விடுவர்.

ஞானசம்பந்தப் பெருமான் இடக்கையில் பால் கிண்ணத் துடன் உச்சியின் மேல் வலக் கையை உயர்த்திச் சுட்டு விரலால் சிவபெருமானைச் சுட்டிக் காட்டினார், என்று கூறுமிடத்தில் அடிகளும் அவ்வாறே தம் இடக்கையினைப் பாற் கிண்ணம் உள்ளது போல அமைத்துக் கொண்டு வலக் கையை மேலே உயர்த்தித் தம் சுட்டு விரலால் வானத்தைச் சுட்டிக் காட்டிக் கொண்டிருப்பர்.

அப்போது அவையோர். ''மீண்டும் அத்திருஞான சம்பந்தப் பிள்ளையாரே தக்க வயதுற்று அழகுருவங் கொண்டு கல்லாடை பூண்டு அதே இனிய குரலுடன் இறைவனை உலகுக்குக் காட்ட வந்தாரோ என்னுமாறு அடிகள் தோற்றமிருக்கும் இந்நிலையைக் கண்டு அளவிலா மகிழ்ச்சியில் திளைத்திருப்பர்.

சிவபாத இருதயராகவும், சம்பந்தராகவும் அடிகளாரே நடித்துவிடுவர். குரலுங்கூடச் சிவபாதர் போலவும், குழந்தை சம்பந்தரது போலவும் விறைந்தும் குழைந்தும் இருக்கும். ''இது சொற்பொழிவு, அடிகள் பேசுகிறார்.'' என்பதையும் மறந்த அவை யோர், அடிகள் தாம் கடவுளை வானத்திற் காட்டுகின்றாரோ என்று அவர் சுட்டு விரலையும், வெறும் வானத்தையும் பார்த்திருப்பர். அடிகள் ''தோடுடைய செவியனை'' பேச முடியாமல் விம்மி நிற்பர். அவையினர் அனைவரும் அந் நிலைடைவர்.

அடிகள் பாடும் இன்னிசை அவை முழுதும் நிறைந்து - அன்பர்களின் உள்ளங்களிலும் நிறைந்து விம்மி அவையைக் கடந்து எங்கும் பரவி மேலெழுந்து வானத்தையும் நிறைத்து அதன் அப்பாலும் சென்று அம்பலத்தாடும் ஐயன் செவியில் நிறைந்து அவனைச் சபையிலே அழைத்துக் கொண்டு வந்துவிடும் . ஆனாய நாயனார் தீங்குழல் இசைப் பெருமை கூறும் தெய்வச் சேக்கிழாரின்,

"மெய்யன்பர் மனத்தன்பின் விளைத்த இசைக் குழலோசை
வையந்தன்னையும் நிறைத்து வானந்தன் வயமாக்கிப்
பொய்யன் புக்கெட்டாத பொற்பொதுவில் நடம்புரியும்
ஐயன்தன் திருச்செவியில் அருகணையப் பெருகியதால்"

என்ற அழகிய பாடலின்படி அடிகளின் இசை அவையோரையும், ஆண்டவனையும் அங்கே ஒன்று சேர்த்துவிடும். மயக்குவானால் இன்பவர் போல் அவையோர் தம்மை மறந்து இன்ப உணர்வில் மூழ்கியிருப்பர். அந்நிலையில் அடிகளிருக்கையில் (நாற்காலி) அமர்வர். சர்க்கரை கலந்த பாலைச் சிறிது சிறிதாகச் சிறிதே அருந்துவர். அவையோரும் உணர்வு நிலையிலிருந்து மீண்டு பெரு மூச்சு விட்டுப் பேச்சின் இனிமை பற்றிப் பக்கத்திலுள்ளாரோடு பாராட்டிக் கொண்டிருப்பர். அவ்வொலியால் சபை விழித்திருப்பது தெரியும். தேவரா இன்னிசை முழங்கும். இப்படிச் சில கணங்கள் கழியும். பின், ஓதுவார்கள்.

"தென்னாடுடைய சிவனே போற்றி
எந் நாட்டவர்க்கும் இறைவா போற்றி

என்றும்,

நமப் பார்வதீபதயே அரகர மகாதேவா என்றும் முழங்குவர்.

அவையினரும், அதையொட்டி எதிரொலித்து முழங்குவர். இரண்டாம் காட்சி தொடங்கும் அடிகள் எழுந்து நிற்பர். ஆரவாரமெல்லாம் மின்னல் விரைவிலடங்கும். எல்லையிலா அமைதி நிலவும். விளக்குகள் ஒளி வீசிக் கொண்டிருக்கும். அங்கு நூற்றுக்கணக்கானவர் அமர்ந்திருக்கும் நிலை வெளியிலுள்ளார்க்குத் தெரியாது. இஃதறியா ஒருவர் வெளியில் நின்று பார்த்தால் பந்தரின் - மேடையில் அழகான ஒருத்தியோ அல்லது ஒருவரோ நின்று கீச்சுக் குரலில் பேசுவதும், நடிப்பதுவுந் தான் தெரியும்.

சமயப் பேச்சுகளில் அடிகளின் உள்ளம் ஈடுபட்டு அதன் வயமாய் நிற்பது போலவே, தமிழர் நாகரிகம், சங்ககால மக்கள் வாழ்க்கை, மக்கள் முன்னேற்றம் இன்ன பிறபொருள்களைப் பற்றிப் பேசும்போதெல்லாம் அவற்றிற்கேற்ற உணர்ச்சிகளும், மெய்ப் பாடுகளும் தம்பால் தோன்ற விளங்குவர். அவையோரும், "அடிகள் எவ்வழி அவ்வழி அவையோரும்" என்று புதிய பழமொழி தோன்றுமாறு விளங்குவர்.

அடிகள் தம் ஆய்வுரைகளில் மேலை நாட்டுப் புலவர்களின் பெயர்களையும், அவர்கள் யாத்த நூல்களையும், அவர்கள் நுவலும் சிறந்த பகுதிகளையும் குறிப்பிடுங்கால் அவற்றையெல்லாம் ஆங்கில ஒசை நயம்பட மொழிவர். அப்போது ஆங்கிலர்தான் பேசுகிறாரோ என்ற எண்ணம் கேட்பவருக்குத் தோன்றும்.

வட மொழி மேற்கோட் பாடல்களையும் அம்மொழியின் ஓசை நயம்பட எடுப்பாக மொழிவர். அடிகளின் ஆய்வுரைகளைக் கேட்கும் அவையோர், அடிகளின் அறிவின் திறத்தையும், ஆராய்ச்சி வன்மையையும், அரிய கருத்துக்களை எளிதாக விளக்கும் திறந்தையுங் கண்டு பெரிதும் வியப்பர், திகைப்பர், போற்றுவர்.

அரைமணி நேரத்திற்கோர் முறை அடிகள் தம் பேச்சினை நிறுத்திப் பாலருந்துவர். வழக்கப்படி தேவார முழக்கமும், திருப்பேர் முழக்கங்களும் நடைபெறும். மூன்றாம் காட்சி தொடங்கும். இவ்வாறு தலைமைப் பேருரையாயின் 1½ அல்லது இரண்டு மணி நேரம் பேசுவர். தனிச் சொற்பொழிவாயின் 2½அல்லது 3 மணி நேரம் பேசுவர்.

தனிச் சொற்பொழிவில், அடிகள், தாம் பேசவேண்டிய பொருள்களின் செய்திகளை விரித்துக் கூறிவிட்டுக் கடைசியில் ¼ மணி நேரத்தில் தாம் பேசிய ஒவ்வொரு கருத்தினையும் என்றும், என்னும் இடைச் சொல் பிணைத்துக் கடைசியில் என்றும் கூறினோம், என்று முற்றுப் புள்ளி வைத்து முடிவுரை முடிவதையும் ஒரே தொடராக (வாக்கியம்) முடிப்பர். அடிகளின் இக்காணரிய திறத்தைக் காணும் அவையோர் வியப்பு எல்லை கடக்கும்.

## தலைமைத் திறன்

அடிகளின் தலைமைப் பேருரைகளோ மிகச் சிறந்தனவாக அமையும். அவர்கள் தாம் பேசப் போகும் பொருள் குறித்து விழாவுக்குச் சில நாட்களுக்கு முன்பே ஆராய்ந்து ஒழுங்கு செய்து வைத்திருப்பர். இதனால் அடிகளின் பேச்சு கால ஒழுங்கில் கட்டுண்டு நிகழும். பிற பேச்சாளர்களின் பேசுங்காலத்திற்கு இடைஞ்சலின்றிமையும். அவர்கள் தலைமை உரை, முடிவுரைகளை ஓர் அருங்கலை என்றே கூறிவிடலாம்.

அவையோர் அடிகளின் பேருரைகளைக் கேட்பதிலேயே ஆர்வம் கொண்டிருப்பர். அதனால், அவர்கள் சிறந்த பேச்சாளர்கள்

யாவரேயாயினும் அவர்கள் சொற்பொழிவுகளை, அடிகளின் பேச்சினைக் கேளாமைக்கான தடைகள் என்றே கருதி வருந்துவர் சொற்பொழிவாளர்களிடம் சிலர் சென்று'' சுருக்கமாகப் பேசுங்கள், அடிகள் பேச்சை நாங்கள் கேட்க வேண்டும்'' என்று' வேண்டிக் கொள்வர். அடிகளை நிரம்பப் பேச வேண்டுமென்று இறைஞ்சுவர்.

அடிகள் தம் தலைமையின் கீழ்ப் பேசும் சொற்பொழி வாளர்களின் அரும் பொருள்களில் சிறந்தனவற்றை எடுத்து விளக்குவர். அத்துடன் அவர்கள் பேசாதுவிட்ட நற்பொருள்களை எல்லாம் எடுத்து விளக்குவர். அப்படி விளக்குவங்கால் பேசியோர்க்குச் சிறிதும் மதிப்புக் குறைவு நேராதபடி பார்த்துக் கொள்வர். பேச்சாளர்களின் சிறப்புகளையும், அவர்தம் கருத்துக் களையும் நன்கு பாராட்டுவர். அடிகளின் முடிவுரைகளால் சொற்பொழிவாளர்களின் தகுதி அவர்களுக்கு உள்ளதைவிட உயர்ந்து தோன்றும் அடிகளின் திருவுள்ளம் எப்போதும் கற்றார் பால் இரக்கங் கொண்டதாகவே இருக்கும். கற்றார்க்குத் தாமே கற்றார் அருமை தெரியும்! பேச்சாளர்களின் சிறு சிறு மாறுபட்டக் கருத்துக் களை அடிகள் மறுப்பதில்லை. கண்டு கொள்வதுமில்லை.

அடிப்படையான கருத்துக்களில் வேறுபாடு கண்டால் ''பேசியோர் கருத்து அது, இது என் கருத்து'' என்பர். பிறர் கருத்துக்களை எளிதாக மறுக்க மாட்டார். அவற்றிற்கு உரிய மதிப்பை வழங்குவர். கருத்து வேற்றுமைக்காக ஒருவரை ஒருவர் இகழ்வதை அடிகள் ஏற்பதில்லை. இகழக் கேட்டால் வருந்துவர். அவ்வாறு 'இகழலாகாது' எனக் காரணங்களுடன் விளக்குவர். மனத்தொடுபட்ட - நேர்மையான கருத்து வேற்றுமைகட்கு மதிப்புக் கொடுக்கும் பான்மை உயர்ந்த சான்றோரிடமே காணல்கூடும். அப்பான்மை அடிகளுக்கு மிக உண்டு, என்பதனை உரிய விடத்தில் விளக்குவேன்.

முடிவுரையின், முடிவுரையில் அடிகள், விழாவினை நடத்திய யாவர்க்கும் சிறந்த பாராட்டுகளும், வாழ்த்துரைகளும் வழங்குவர். இறுதியில் இவற்றையெல்லாம் இயக்குவிக்கும் இறைவன் திருவருளைப்பாடி இன்பக் கண்ணீர் சொரிவர். பண்பு முறைப்படி நடக்கும் நன்றி கூறல், மாலையிடல், கடவுள் வாழ்த்து, திருப்பேர் முழக்கம் முதலியவை முடிந்து அவையோர் கலைந்து

புறப்படுவர். அப்போது அவர்கள் எல்லோரும் ''இனி எப்போது அடிகளைக் காண்போம்; அவர் உரைகளைக் கேட்போம்'' என்று இன்பத்தில் துன்பம் காண்பர்.

இவ்வாறாக விழாக்கள் முடிந்தபின் அடிகள் மறுநாளும் அங்குத் (விழா நடக்கும் ஊரில்) தங்கியிருப்பர்பலர் வந்து கண்டு அளவளாவிச் செல்வர். அதில் அடிகட்கு மிக மகிழ்வுண்டு அதற்கடுத்த நாட்களில் விழா நடந்த நகரிலும், வழிபடுவதற்காக அடிகள் புறப்படுவர். சிலநாட்களில் திருக்கோயில் வழி பாட்டு யாத்திரையை முடித்துத் தம்மூர் திரும்புவர்.

**பத்தாண்டுப்பணி ( 1911 முதல் 1920)**

அடிகள் துறவுபூண்ட சின்னாட்களில் ஜெ. எம். நல்லசாமி பிள்ளையவர்களால் சைவ சித்தாந்த மகா சமாசப்* பேச்சாளராக அமர்த்தப்பட்டார். அவ்வாண்டின் சமாசச் செயலாளராகிய இறுக்கம் ஆதிமூல முதலியார் அவர்களின் ஏற்பாட்டின்படி அவருடன் அடிகள் தலயாத்திரையாகப் புறப்பட்டுத் திருச்சி, மதுரை முதலிய தலங்களை வழிபட்டு ராமநாதபுரத்தை அடைந்தனர் மன்னரின் அரண்மனையில் தங்கினர்.

**ராமநாதபுர அரசர் செய்த விருந்து**

அங்குள்ளதோர் பள்ளியில் ராமநாதபுரம் மன்னர்-பாண்டித்துரைத் தேவர் முதலிய பெருமக்கள் முன்னிலையில் அடிகள் 'சைவ சித்தாந்தம்' பற்றிப் பேசினர். அவையோர்க்கு அடிகளை அறிமுகம் செய்து வைத்து, அடிகளைப் பெரிதும் பாராட்டிப் பேசியவர், பாண்டித்துரையேயாவர். அடிகட்கு அரசர் தம்மரண்மனையில் சிறந்த விருந்தளித்துப் போற்றினார். முகவையிலிருந்த சில நாட்களில் அடிகள் ஒரு நாள் திரு உத்தரகோச மங்கை சென்று வழிபட்டார்.

ராமநாதபுரத்திலிருந்து மீளுங்கால் அடிகள் பரமக்குடியில் 'அன்பு' என்பது பற்றியும், மதுரை திருஞானசம்பந்தர் திருமடத்தில், 'திருஞானசம்பந்தர் வரலாறு' என்பது பற்றியும் பேசினர். திருமடத்தின் தலைவர் மிக மெல்லிய சரிகைக் கரையிட்ட இரண்டு 'மஸ்லின் ஆடைகளை அடிகட்குப் போர்த்திச் சிறப்பித்தார்.

* இப்பணி,அடிகளால் சில திங்கள் மட்டுமே செய்யப்பட்டன.

பின், மதுரையினின்றும் புறப்பட்டு அடிகள் நாகை வெளிப்பாளையம் போந்து 'கடவுளியல்' என்று பேசி மஞ்சகுப்பம் அடைந்து ''மாணவர் இலக்கிய மன்றம்' நிறுவி அதில், 'கல்வி இயல்'' என்று உரையாற்றிப் பல்லாவரம் மீண்டனர்.

## திருவண்ணாமலை தொழல்

துறவு நெறியின் தலைமை இருப்பிடமாயமைந்தது திருவண்ணாமலை. அது, ஞான தபோதனரை வா வா என்றழைக்குமா'' ம் அதனால் துறவிகள் திருவண்ணாமலையைத் தமது தாயகமாக நினைந்து போற்றுவர். திருவண்ணாமலையைத் தொழார் துறவியாகார்'' என்பது அவர் துணிபு. ''நினைக்க முத்திதரும் திருவண்ணாமலை'' யின் சிறப்பை உரைகளால் உரைக்க ஒண்ணுமா? ஆதலின், துறவியாகிய மறைமலை அடிகள் திருவண்ணாமலைக்குப் புறப்பட்டார். ஒளிமலையைத் தொழுதின்புற்றார். கோயிலினுட் சென்று ஒளி உருவின்வெளி வடிவாய் விளங்கும் அண்ணாமலையானை (அருணாசலன்) வழிபட்டு மகிழ்ந்தார்.

ஒரு நாள் அனல் மலையின் உச்சியை அடைந்தார். அங்கே அமர்ந்து பிராணாயமம், அடயோகங்களைச் செய்தார். உயிருக்குயிராய் ஒளிரும் அறிவின்ப வடிவான அம்பலவனை நெஞ்சகத்திற் கண்டு உள்ளம் நெகிழ்ந்தார். அன்று 6-12-1911-வது நாளாகும். ஒரு நாள் அங்குள்ள சத்திவிலாசமண்டபத்தில்' 'சமரச சன்மார்க்கம் என்று பேசினார். திருவண்ணாமலையில் ஒரு கிழமை தங்கியிருந்த அடிகள் இடையே ஒரு நாள் வடார்க் காட்டுச் சீர்மையின் தலைநகரான வேலூர் சென்று, 'தோபாசாமி மடத்தில்', 'வேதாந்தமும் சித்தாந்தமும்' என்று 2½ மணியளவு பேருரை நிகழ்த்தினர்.

கோவில்பட்டி பத்தி வினை கழகம் அடிகளை நாடியது அங்குச் சென்று அடிகள் 15- 12- 1911-ல் சைவ சித்தாந்தின் முடிவு'' என்று பேசினர்.

## தூத்துக்குடியில் தலைமை

அங்கிருந்து அடிகள் தூத்துக்குடியடைந்தனர். சித்தாந்த சபையினர் மதியங்கண்ட மலர்போல் மகிழ்ந்தனர். அச்சபையின்

விழா 17, 18, 19-11-1911-ல் அடிகள் தலைமையில் வழக்கம்போல் மிகச்சிறப்பாக நடைபெற்றது. அடிகளின் தலைமைப் பேருரையின் பொருள்:- உலக மதமும் சமரச சன்மார்க்கமும்!

இவ்விழாவில் அடிகளின் சொற்பொழிவினைக் கேட்டு மகிழ்ந்த கடம்பூர் சைவசித்தாந்த சபையினர் அடிகளைத் தம்மூர்க் கழைத்துச் சென்று அரிய விருந்தளித்துப் போற்றினர் . பின்னர் மணியாச்சிப் புகைவண்டி நிலையத்தில் ஐரோப்பிய பாதிரியார்கள் அடிகளுடன் சமயவாதஞ் செய்தனர். அடிகளின் அறிவின் திறமறிந்து வியந்து சென்றனர். அடிகள் பல்லாவரம் திரும்பினர்.

## வடலூர்ச் செலவு

ராமலிங்க வள்ளல் தம் இறுதிக் காலத்தில் வடலூரில் அமைத்த ஞானசபை, சத்திய தருமச்சாலை முதலிய நிலையங்களைக் காண விரும்பி அடிகள் பல்லாவரத்தினின்றும் புறப்பட்டனர். 21-1- 1912-ல் வேலூரை அடைந்தனர். மறுநாள் அந் நகரில் 'திருஞானசம்பந்தர்' என்று பேசித் தம் மாணவர் பாலசுப்பிரமணியம் என்பாருக்குப் 'பிராணாயாமம்' கற்பித்தனர். ஒரு சைவ சித்தாந்த சபையும் நிறுவினர். அடுத்ததோர் நாளில் 'ஊன் விலக்கு' என உளங்குழைந்து- உருக்கம் மிக 2½ மணியளவு பேசினர். அப்பேச்சு சிங்கத்தையும் சைவ உணவு கொள்ளச்செய்யும் ஆற்றலுடையதாய் அமைந்தது. அதனால், பலர் ஊனுணவைக் கைவிட்டதில் வியப்பேது?

பின்னர் அடிகள் வேலூரை விடுத்து 1-2- 1912-ல் வடலூரை அடைந்தனர். வெட்ட வெளியில் அமைதிச் சூழ்நிலையில் தெய்வ உணர்வூட்டும் அத்தூயவெளியில் ஞான சபையைக் கண்டு வழிபட்டனர். வள்ளலார் தங்கிருந்த சத்திய தருமச் சாலையில் தங்கினர். அதனை அடுத்துள்ள மாஞ் சோலையில் உலாவினர். தூய தென்றலை நுகர்ந்தனர். இளநீரன்ன நன்னீரை உண்டு விழாவில் தலைமை தாங்கிச் சொற் பொழிவாற்றினர். மற்றொருநாள் மேட்டுக்குப்பம் சென்று வள்ளலார் ஒளிரச் செய்த திருவிளக்கினை வழிபட்டார். பின்னர். அப்பிரான் மறைந்தருளிய சித்தவளாகத் திருமாளிகையைக் கண்டு கண்ணீர் மல்கினர். இவ்வாறு சின்னாட்கள் வடலூரில் மகிழ்ந்திருந்த அடிகள் 5-2-1912-ல் மஞ்சகுப்பம் சென்று விக்டோரியா கிளப்பில் 'ஜீவகாருண்யம்'

என்று பேசிச் சிதம்பரஞ் சேர்ந்து அம்பலக் கூத்தனை அகங் குழையப் போற்றிப் பல்லாவரம் அடைந்தனர்.

## நாகையில் நாலவர்

7-3-1912-ல், அடிகள், வெளிப்பாளையம் சைவ சித்தாந்த சபையில், 'சித்தாந்தம்' என்று பேசினர். மறுநாள் நாகப்பட்டினம் சிவன்கோயிலில், கோயிலார் ஏற்பாட்டின்படி 'பிராணாயாமம்' என்ற நுணுக்கங்கள், அரும்பொருள்கள் செறிந்த அரிய உரையாற்றினர். ஏராளமான பேர் கூடிக் கேட்டனர். தாம் பிறந்த நகரிலேயே அடிகள் இவ்வாறு அடிக்கடி அழைக்கப்பட்டு அரிய பல சொற்பொழிவுகளை ஆற்றினார் என்றால் அவர் தம் நாவலத்தின் திறத்தையும், இனிமையையும், அருமையையும் யாவரும் நன்குணரலாம்.

## தஞ்சையின் களிப்பு

தஞ்சை மராட்டிய மன்னர் குடும்பத்தைச் சார்ந்தவர்கள் சாமிநாதராகவும், சோமநாதராகவும் தம்மிளமைக் காலத்தில் நாகையில் வாழ்ந்தவர்கள்; அடிகளின் தோழர்கள். ஆனால் அடிகளின் அறிவாற்றல்களில் ஈடுபட்டு அவரைக் குருவெனப் போற்றிக்கொண்டவர்கள்.

நாகை சென்று அடிகளைத் தஞ்சாவூருக்கு அழைத்துச் சென்றனர். தமிழறிவுடைய அவர்கள் செய்திருந்த சிறந்த ஏற்பாடுகளால் பெரும் கூட்டம் கூடியது. கற்றவர்களும், அறிஞர்களும் அன்பர்களும் நிறைந்தனர். பாற்கடல் இடையில் தோன்றிய திருவெனத் தோன்றி அடிகள் அந்த அவையில் 14, 17-1- 1912-ல் "வேதாந்த சித்தாந்த சமரசம்", "பிரணவம்" என்னும் பெரும் பொருள்கள் பற்றிய பேருரைகள் நிகழ்த்தினர். தஞ்சை நகரினர் அவை கேட்டு ஆர எக்களிப்புடன் அடிகளின் அருந்திறங்களை அளவின்றிப் பாராட்டி மகிழ்ந்தனர்.

## புரவலர் ராஜாளியார்

இவர் சோணாட்டிலுள்ள பாவநாசத்தினை அடுத்து விளங்கும் அரித்துவார மங்கலம் என்னும் ஊரினர். பெருநிலக் கிழவர், கள்ளர் மரபினர், திரு. வா. கோபாலசாமி ரகுநாத ராஜாளியார் அவர்தம் முழுப் பெயராகும். வீர வைணவர், செந்தமிழ்ப் புலமையுடையார்.

அடிகளின் அருமை பெருமைகளையும், புலமைச் சிறப்பையும் நன்கறிந்தவர்.

ஆதலால், அடிகளைத் தம்மூருக்குப் பேரன்புடன் 18-1-1912-ல் வரவேற்றுப் பெருங்களிகூர்ந்தார். பெரு விருந்திட்டு அடிகளைச் சிறப்பித்தார். ''பிரணவம்'' என்னும் -அரிய நுணுகிய சொற்பொழிவு ஒன்றை அடிகள் அவர் விரும்பியாங்கு அங்கு நிகழ்த்தினார். புலமை போற்றும் புரவலராகிய ராஜாளியார் அடிகளை வற்புறுத்தி அவர்களிடம் இருபத்தைந்து ரூபாய்களைச் சேர்ப்பித்தார்.

அடிகள் பிறர் தந்த அன்புக் காணிக்கையை ஏற்றது இதுவே இவர்தம் வாழ்நாளில் முதன் முறையாகும். ஆம்! அடிகட்கு இப்போது கல்லூரிப் பணியில்லை, வேறு வகையிலும் தாம் எழுதிய நூல்களின் விற்பனை வாயிலாகவும், ''அறிவுக்கடல்'' கையொப்பத்தாலும் வரும் சிறு வருவாய் அவர்தம் பெரிய அடியவர் கூட்டத்தார்க்கு (குடும்பம்) எப்படி போதுமானதாகும்? வேறு வருவாயில்லாமையாற்றான் அடிகள் இக்காணிக்கையை ஏற்க வேண்டியதாயிற்று. அது அவர்கட்கு அப்போது மிக்க வருத்தத்தினைத் தந்திருக்குமென்பது அவர்தம் நாட்குறிப்பாலறியக் கிடக்கின்றது.

ஆயின், இவ்வாறு தம்மறிவுப் பணியால் பயன் பெற்றவர், மகிழ்ந்தளிக்கும் பொருளை அடிகள் ஏற்றது குறையாகாது, பொருந்தியதேயாகும். தொண்டுகள் புரிவார் அவைபுரிய உலகிடை நன்னர் வாழ்தல் வேண்டும். வாழ்விற்குப் பொருள் வேண்டு மன்றோ?

உலகவர் தாம்தேடும் பொருளைப் பயன் தராத பல பாழ்வழிகளிலும், வீணாகச் செலவு செய்கின்றனர். நல்ல வழிகளில் சிறிது செலவிடுதலும் அவர்க்கு மகி நல்லது; பயன் தருவதுமாகும். அதுவும் அறிவுத்தொண்டு புரியும் ஆன்ற புலவர்களை - ஞானி களைப் பாதுகாத்தல் நாட்டிற்கே பெரும் பயன் தருவதன்றோ? அதனால் மக்கள் அடையும் நலங்கள் அளவிறந்தவையாகும்.

இஃதுணர்ந்தே பண்டைக்கால மன்னரும் வள்ளல்களும், பிறரும் புலவர்களைப் பெரிதும் போற்றினர் என்பதைத் தமிழ் நூல்கள் தெரிவிக்கின்றன.

"உறக்குந் துணையதோர் ஆலம் வித்தீண்டி
இறப்பநிழற் பயந்தாங்கு- அறப்பயனும்
தான் சிறிதாயினும் தக்கார் கை பட்டக்கால்
வான் சிறிதாப் போர்த்துவிடும்"

என்று நாலடியாருங் கூறிற்று. ராசாளியார் மனப்பான்மை நாட்டில் வளர்க! அவர் புகழ் வாழ்க.

## இளங்காடு நற்றமிழ்ச் சங்க விழா

தஞ்சைச் சீர்மையில் நஞ்சை வளம் கொழிக்கும் இளங்காடு என்னும் அழகிய ஊர் காவிரியால் எழில் மிகுவது. ★ அவ்வூரினர், தொன்றுதொட்டு வந்த வீர மரபினராய கள்ளர் குலத்தவராவர். தமிழ்ப் பயிற்சியில் சிறந்து - சமயப்பற்றில் உயர்ந்து அன்பில் நிறைத்தவர். தமிழ்ப் புலவர் பலரும், தமிழ்ப் புரவலர் சிலரும், அவ்வூர்ப் பெருமைக்கு இலக்காய் இலங்கினர். நற்றமிழ்ச் சங்கம் ஒன்றை நாட்டியிருந்தனர். ஆண்டு விழாக்களை ஆர்வமுடன் நடத்தினர். புலவர் பலரை வருவித்துப் போற்றி அவர் தம் விரிவுரைகளைக் கேட்டு ஆரா மகிழ்வடைந்தனர்.

14-4-1912-ல் தம் சங்கத்தின் பெருவிழாவைக் கூட்டினர். அடிகள் விழாவில் பேசுகிறார்கள் என அறிந்தார். பல ஊர்களின்றும் வந்து குழுமினர். அரசன் சண்முகனார், வேங்கடசாமி நாட்டார் பண்டிதமணி கதிரேசன் செட்டியார் உள்ளிட்ட புலத்துறை முற்றிய பெருமக்கள் பெரும் சொற்பொழிவுகளாற்றினர்.

மற்றும் புலவர் சிலர் பேச வேண்டியிருந்தது. அவையினரோ அடிகள் பேச்சை எதிர்பார்த்து ஏங்கியிருந்தனர். அவர்கள் ஆர்வவெள்ளம் நிகழ்ச்சி நிரலின் வரம்பையும் கடந்தது. புலவர்கள் பேச்சை நிறுத்தினர். புலவர் தலைவராகிய அடிகளைப் பேசவேண்டினர் அடிகள் தமக்கே உரிய சிறப்புச் சொற்பொழிவான "சம்பந்தர் வரலாற்றுண்மை" பற்றி இனிமை ததும்ப - அவையோர் ஆனந்த வெள்ளத்திடை மூழ்க மூன்று மணி அரிய பேருரை யாற்றினர்.

அதுகேட்டு இளங்காட்டு அன்பர்கள் அடிகளைப் பலபடப் பாராட்டி மகிழ்ந்தனர். அடிகள் உள்ளங்குழைந்தனர். கல்வியிலார்வ

1. அறிவுக்கடல் (ஞான சாகரம்) அடிகள் நடத்திய தமிழ்த்திங்கள் வெளியீடு.

முடைய அவ்வூரினர், அடிகட்கு மனமுவந்து ரூ. 25 காணிக்கை தந்தனர். தனிப்பட்டவராகிய ராஜாளியார் அளித்த அன்புக் காணிக்கையை முதன்முறையாக ஏற்றதை மேலே கண்டோம். இங்குச் சொற்பொழிவு காணிக்கையாக முதன் முதலில் அடிகள் ஏற்றுக்கொண்டதை அறிகின்றோம்.

''அருளில்லார்க்கு அவ்வுலகமில்லை பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லா கியாங்கு'' என்பது பொய்யா மொழி அன்றோ? இன்றும் இளங்காட்டினர் அடிகளின் புகழையும், அழகையும், புலமையையுந் தம்மை மறந்து மகிழ்ந்து பேசுகின்றனர்.

## திருக்காட்டுப்பள்ளி மறையோர் போற்றல்

மறுநாள் இளங்காட்டுக்கு மூன்றுகல் தொலைவிலுள்ள திருக்காட்டுப் பள்ளிச் சிவபிரான் கோயிலில், அடிகள், 'சிவலிங்கம்' என்று கருத்து நிறைந்த விரிவுரையாற்றினர். அதில், சைவ சித்தாந்தக் கருத்துகளும், வேதம் - ஆகம்- உபநிடத வடமொழி மேற்கோள்களும், விஞ்ஞானச் சான்றுகளும் விம்மின. அவ்வூரின் வடமொழியில் வல்லவேதப் பிராமணர்களின் கூட்டம் அடிகளின் இச்சொற்பொழிவைப் பெரிதும் வியந்து பாராட்டி மகிழ்ந்தது, அடிகளை வணக்கமுடன் சூழ்ந்து நின்று போற்றியது. அடிகள் தம் குடும்பத்தாருடன் அவ்வூரினின்றும் நீங்கிப் போத்தனுரை அடைந்தனர்.

## போத்தனூரில் குகப்படலம்

அடிகளின் முதல் மகள் சிந்தாமணியின் கணவர் பாலசுந்தரம் அடிகளை வரவேற்றார். சிறந்த விருந்துகள் அளித்து அடிகளை மகிழ்வித்தார். மகள் கொண்ட மகிழ்ச்சிக்களவில்லை. மறுநாள் அடிகள் தம் குடும்பத்தவருடன் பேரூர் சென்று வழிபட்டார். 21, 23, 28-4-1912-ல் அடிகள் போத்துனூர் அன்பர்களின் வேண்டு கோட்கிணங்கி அவ்வூரிலிருந்த 'பக்தி மார்க்க சபை'யில் ''ஆத்மவிசாரம்'', ''குகப்படலம்'' முதலியன பற்றிச் சொற்பொழிவு களாற்றினர்.

பேச்சில் பெரிதும் மகிழ்ந்த ரயில்வே ஊழியர்கள் அடிகள் குடும்பத்தார்க்குப் பல்லாவரம் செல்லத் தம் பொருளில் ரயில் சீட்டு

* இன்றும் இளங்காட்டில் தமிழ்ப்புலமை சான்றவர் பலருளர்.

வாங்கியளித்து வழியனுப்பினர். அடிகள் அவர்கள் அன்பைப் பெரிதும் போற்றினார். அவ் ஊழியர்களில் அடிகளின் மருமகனும் ஒருவராவர். அவர்ச் சீட்டு வழங்கியாக (புக்கிங் கிளார்க்) பணியாற்றியவர்.

## ராணி அம்மணியம்மாள் மாணவியாதல்

கோயம்புத்தூர்ச் சீர்மையில் பொள்ளாச்சி என்னும் பொருளாட்சி நகருக்கு எட்டுக்கல் தொலைவில் புரவிபாளையம் என்னும் ஓர் உண்டு. அவ்வூர்ச் ஜமீன்தார் வழி வந்த குறுநில மன்னர் மரபைச் சேர்ந்தவர். அவர் மாளிகையை 'அரண்மனை' என்றழைப்பர். அவர் பெயர்: ஜெகமண்டலாதிபதி கோப்பண்ண மன்றாடியார். குறுநில மன்னர்க்கான எல்லா வசதிகளும் உடையவர். அவர் மனைவியார் தாம் ராணி அம்மணி அம்மாள்.

இருவரும் தமிழறிவும், சிவநேசமும், புலவர்களிடம் பேரன்பும் உடையவர்கள் அம்மணியம்மாள் தமிழ்ப்பயிற்சியில் கணவரை விஞ்சி நின்றார். நற்பண்புமிக்க நல்லோர்களாகிய மன்னரும் - அரசியாரும், அடிகளின் அருமை பெருமைகளை அறிந்து தமது அரண்மனையில் அவர்களை 29-4-1912-ல் பேரன்புடன் வரவேற்றுப் போற்றினர். அரசியார் அடிகளைக் குருவாக ஏற்று அவரடிகளில் வீழ்ந்து வணங்கினார்.

அடிகள், அம்மணியார்க்கும்- மன்றாடியார்க்கும் சிவஞான போதத்தின் முதல் நுண்பாவின் கருத்தை விளக்கி உரைத்தார். அவர்கள் தம் அன்பான ஒப்புரவிலும், விருந்தாட்களிலும் மகிழ்ந்த அடிகள், அவர்கள் விரும்பியவாறு இருபது நாட்கள் அங்குத் தங்கியிருந்தனர்.

அந்நாட்களில் அடிகளின் தலைமையில் ஒரு நாள் அம்மணி அம்மையார், 'உருத்திர பசுபதி நாயனார்' என்பது பற்றிப் பேசினார். அடிகள் பாராட்டைப் பெற்றார். அரசரும் - அரசியும் உடன்வர அவர்கள் விரும்பியாங்கு அடிகள் பொருளாட்சி நகர்சென்று ஆங்குள்ள 'தியாசொபிகல்' மண்டபத்தில் 'திருஞான சம்பந்தர் வாழ்க்கைச் சிறப்பு' என்பது பற்றிப் பேசினர்.

மற்றோரு நாள் அடிகள் பழநி சென்று முருகனை வழிபட்டு மகிழ்ந்தார். வேறோரு நாள் அரண்மனை மாதர்க்குப்

'பக்தி' என்பது பற்றிப் பேசினார். பின்போரு நாள் அவ்வூர் வேதப் பிராம்மணர் களுடன் வேதங்கள் பற்றிப் பேசி அவர்கள் பாராட்டைப் பெற்றார், ஏனைய நாட்களில், மன்றாடியார்க்கும் அவர் மனைவியார்க்கும் அரிய கருத்துரைகளை வழங்கிக் கொண்டிருந்தார் இருவரும் அடிகள் கொண்ட பேரன்பிற்கு எல்லையில்லை. அடிகளை தம் அருட் குருவாகக் கொண்டு பணிந்து போற்றினர்.

## பாளைவிழா. சேதுப்பிள்ளை உருவாதல்

பாளையங்கோட்டையில் இன்னும் சைவ சபை ஒன்று நற்பணியாற்றி வருகின்றது. அதன் விழாவொன்று அன்று. 7, 8, 9-6-1962-ல் அடிகள் தலைமையில் பெருஞ்சிறப்போடு நடைபெற்றது. அடிகள் தலைமை தாங்கினால் விழாச் சிறப்பிற்குக் கேட்கவா வேண்டும்? ''தமிழ்'' என்று அடிகள் தலைமைப் பேருரை யாற்றினார்.

விழாவின் தொண்டர் படையில் 4-ம் படிவத்தில் படிக்கும் ஓரிளைஞன் மிடுக்காகத் தொண்டாற்றினான். அவன் மிடுக்குத் தொண்டில் மட்டும் நின்று விடவில்லை. அறிவிலும் தாண்டவமாடினான். அவன் விழாவின் பலபணிகளிலும் ஈடுபட்டிருந்தானாயினும் தடிபிடித்துச் சாரணர் கோலங் கொண்டிருந்த அவனுள்ளம் அடிகளின் 'தமிழ்' 'தமிழ்' என்று அவன் உயிர் உணர்ச்சியுற்றது.

அன்றே, அவன், நானும் இவ்வடிகளைப் போற் செந்தமிழ்ப் பெரும் புலமையைப் பெற முடியுமா? தமிழ் வளர இவ்வளவு அழகாகப் பேசுவேனா?'' என்றார்வங்கொண்டான். செந்தமிழ்ப் புலமை பெற உறுதி கொண்டான். அதற்கான ஆக்கமும், ஊக்கமும் அவனுக்கியல்பாக உண்டு. மறைமலையடிகளின் குரலுந்தோற்ற மும், உருவும், அறிவும் அவன் நெஞ்சைவிட்டகலவில்லை. அடிகளே அவன் குறிக்கோள்.

பிற்காலத்தில் அவனே இச்செய்தியை மறை திருநாவுக்கரசுக்கு ஆர்வம் ததும்பப் பன்முறை கூறியுள்ளான். அவனார்? உயர் திருவாளர் சொல்லின் செல்வர். டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளையாவர் என்று சொல்லவும் வேண்டுமா?

## நெல்லையில் சிவமானார்

திருநெல்வேலிச் சைவர்களைப் பாளை விழா பெரிதும் கவர்ந்து விட்டது. அவ்வளவில் அவர்கள் , மிக்க ஊக்கங்கொண்டு அடிகளைத் தம் நகருக்கு அழைத்துச் சென்றனர்.

திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலில் வசந்த மண்டபம் ஒன்றுண்டு. அதைச் சொற்பொழிவு மண்டபம் என்றே கூறி விடலாம். பெருங்கூட்டம் கூடியிருந்து அமைதியாய்க் கேட்பதற்கான வாய்ப்பான இடம் 6-9-1912-ல் அடிகள் அங்கு' அத்வைத சித்தாந்தம் ' என்று பேசினர். அவையோர் அது கேட்டுப் பேரின்பம் பெற்றார் போல் மகிழ்ந்தனர். 'ஆம்' உண்மைதானே! அடிகளின் பேச்சினிமை- அறிவு நலம் பேரின்பத்திற்கும் மேற் பட்டவையன்றோ? மேலும் அடிகள் ஆற்றலும் தோற்றமும் பெற்று விளங்கிய பொற்காலம் இக்காலமேயாகும். இப்போதவர்கள். அகவை 36.

இக்காணரிய காட்சி, கேட்பரிய பேச்சுகளைக் கண்ட திருநெல்வேலிச் சைவர் திரண்டெழுந்தனர். வசந்த மண்டபம் நிறைந்தது. இரண்டாயிரம் பேருக்கு மேலும் குழுமினர். அடிகளின் தனித்திறங்காட்டும் 'திருஞான சம்பந்தர்' சொற்பொழிவு கூட்டத்தவரை மாறிலா மகிழ்ச்சியால் மலரச் செய்து விட்டது.

நெல்லைப் பெருமக்கள் உணர்ச்சியால் நிறைந்தனர் ''ஆ! இவ்வடிகளைப் போலப் பேச்சாளரைக் கண்டோமில்லை'' என்பாரும், ''உருவிற்றான் இவரைவிடச் சிறந்தவரைப் பார்த்த தில்லை'' என்பாரும், ''அறிவிற்றான் இவருக்கிணையான வரைக் காட்டமுடியமா'' என்பாரும் குரலினிமையைப் புகழ்வாரும், இசை இனிமையை இயம்புவாரும், சொற்பெருக்கின் சொற்பொருள் நயங்களை வியப்பாரும், உவமை உருவங்களை உயர்த்துவாரும், ஆராய்ச்சித் திறத்தை வியப்பாரும், சொற்பொழிவின் கட்டுக்கோப்பைப் போற்றுவாரும், பெரும் பேச்சின் இறுதியில் தரும் தொகுப்புரையின் அருமை உரைப்பாரும் ஆக இப்படி எங்கு நோக்கினும் அடிகளின் புகழையே பரவும் அன்பர்களே நிறைந்திருந்தனர். நெல்லை மாநகரே அன்று அடிகள் புகழ்பாடும் அரங்கமாய் விட்டது. அவர்கள் உணர்ச்சிப் பெருகியது. சைவ

சித்தாந்தமே உருக்கொண்டது போல இலங்கும் அடிகளுக்குச் சிறந்த நகர் வலஞ்செய்து மகிழ்ந்தனர்.

அடுத்தச் சின்னாட்கள் அடிகள் அம்பாசமுத்திரத்தில் 'பக்தி' என்று பேசிப் பாவநாசம் சென்று அருவியாடியும் தாமிபரபரணி யாற்றில் ஆடியும், அம்மையப்பரை வழிபட்டும் இன்புற்றனர்.

நெல்லை அன்பர்கள் அடிகளை விடவில்லை. அதனால் அடிகள் திருநெல்வேலிக்குத் திரும்பினர். சிவலிங்கம்', 'உமாகேசுவரர்,' என்னும் ஆய்வுமிக்க பேருரைகள் ஆற்றினர். அவ்வுரைகளால் பெரிதும் மகிழ்ந்த நகரினர், மீண்டும் அடிகட்கோர் சிறந்த நகர்வலச்சிறப்புச் செய்து தம் மகிழ்வை ஒருவாறு அமைதி செய்து கொண்டனர். சம்பந்த மூர்த்தி கோயிலிலும் அடிகள், 'பக்தி' என்று பேசினர். அக்கோயிலைச் சாந்துள்ள தெருவினர், அடிகள்பால் கொண்ட பேரன்பின் பெருக்கே அடிகளை இச்சொற்பொழிவை நிகழ்த்துமாறுச் செய்துவிட்டது. இவ்வாறு நெல்லை மக்கள் தம் இணையில்லாப் பேரன்பால் அடிகளைச் சிவமாக்கி உளங்குளிர்ந்து பேரின்பமெய்தினர்.

## குற்றாலத்தில் குலவுதல்

எட்டயாபுரம் திவான் சண்முகம் பிள்ளை என்பார் அடிகளின் அறிவாற்றல்களில் பெரிதும் ஈடுபட்டுத் தம் நகருக்கு அடிகளை வருவித்து நண்பு பாராட்டிப் பெருவிருந்தளித்து மகிழ்ந்தார். சண்முகம் பிள்ளையின் மகனாரும் அடிகள்பால் பேரன்பு கொண்டவர். அவர்கள் ஏற்பாட்டின்படி அடிகள் 4-7-1912-ல் குற்றாலம் சென்று திவான் அவர்களின் பொழில் மாளிகை யிற்றங்கினர். வசதிகள் யாவும் அடிகளை மகிழ்வித்தன.

குற்றாலத்தின் இயற்கை எழில் இன்பத்தை எல்லாம் திருஞான சம்பந்தர் தம் தேவாரத்தில்,

"வம்பார் குன்றம் நீடுயர் சாரல் வளர் வேங்கை
கொம்பார் சோலை கோல வண்டு யாழ் செய் குற்றாலம்"

"போதும் பொன்னும் உந்தி அருவி புடை
சூழக்கூதன் மாரி நுன்துளி தூங்குங் குற்றாலம்"

என்றும் மற்றும் பலவாறும் மிக அழகாகப் பாட்டோவியம் தீட்டி யுள்ளார். குற்றாலக் காட்சிகள் யாவருள்ளத்தையும் கொள்ளை

கொள்ளுமியல்பின. அதுவும் கலைவல்லார் உணர்வை அப்படியே ஆட்கொள்ளுமல்லவா? பொதியமாமலை யாகிய குற்றாலம் மட்டுமா? அதனைத் தொடர்ந்துள்ள மலைக்காட்சிகளும் அங்ஙனமே கண்டார். உள்ளங்களை எல்லாம் தம் அழகுணர்ச்சியால் மெய்மறக்கச் செய்துவிடும் பேரழகுந் தெய்வத் தன்மையும் உடையனவாகும். உடலையும், உள்ளத்தையும் ஒருங்கே குளிர்விக்கும் அங்குள்ள அருவியலாடினார், அடிகள் இன்பநிலை பெற்றார். அடுத்துள்ள திருக்கோயிலையுற்றார். ஆங்கெழுந்தருளியுள்ள கூத்தனைக் கும்பிட்டார்.

அருவியிலாடி இன்பநிலை பெற்ற அடிகள், இப்போது அன்பு நிறைவாம், இறைநிலையில் திளைத்து அமரரும் அடைய வொண்ணாப் பேரின்ப நிலை பெற்றார்.

ஒரு நாள் அடிகள் பசும்பொழில் போர்த்தியமலை மீதேறிச் செண்பகாதேவியடைந்து ஆங்கொழுகும் அருவியிலாடித் தேவியை வழிபட்டார். பின்னும், வானுற வளர்ந்த மரங்கள் அடர்ந்த மலைமீதேறிச் சென்று தேனருவியில் திளைத்தாடினார். பின்னர் கீழிறங்கி மற்றொர் நாள் ஐந்தலை அருவி சென்றாடினார். ஆராமகிழ்வடைந்தனர்.

ஐந்தலை அருவி செல்லும் வழி எங்கும் மலையடிவாரம், பூம்பொழில்கள்- நெல்விளை கழனிகள், எப்புறமும் பசுமை போர்த்தமலைச்சூழல்கள்-நீர் நிலைகள், இருகரை எங்கும் தென்னஞ்சோலைகள்-

வண்டுகளின் தேனிசை - தண்ணிய தென்னங்காற்று - இவைகளால் இன்பவடிவாய் விட்ட அடிகள் இவ்வழகு நிலையத்தை அமைத்து ஆராவின்பந்தரும் குற்றாலநாதன் அருளை நினைந்து நினைந்து மனமுருகி நின்றார். சித்ரகலையையும் கண்டு வணங்கினார்.

அடிகள் அருள்வடிவான அருவியாம் கங்கையைத் தன் முடியிலிருந்து தரும் பொதியமாம் சிவபெருமானைக் கண்டு கழிபேருவகை கொண்டு வழிபட்டார். தாயன்பு பாலாகின்றது. இறைவனருள் அருவியாகின்றது. தாயும் பாலும் வேறா? இறைவனும் அருவியும் வேறா? இயற்கையாவும் இறைவன்

வடிவங்களேயானால் அவை தரும் இன்பங்களும், அவனருளும் இன்பங்கள் தாமே! அதனாலன்றோ, மாணிக்கவாசகர் தாமருளிய திருவாசகத்தில்.

"பார். பதம், அண்டம் அனைத்துமாய் முளைத்துப்
பார்த்தோர் படரொளி பரப்பே..........."

என்று இயற்கை எழிலின்பத்தையே இறைவனாகப் போற்றினார்! ஆதலின், அடிகளும் இயற்கை அழகின்பத்தில் ஈர்ப்புண்டு அதன் வாயிலாகச் சிவபிரானருளைப் பணிந்து மகிழ்ந்தது இயல்புதானே!

அம்மகிழ்ச்சி உருவாய் இலங்கும் 'அன்பு' என்பது பற்றி அடிகள் குற்றாலத்திலுள்ள திருநாவுக்கரசு மடத்தில் ஒரு நாள் பேசினர். மற்றோருநாள் ஓரன்பர் இல்லத்தில் 'சிவலிங்கம்' என்றுரையாற்றினார். வேறொரு நாள் அடிகள் ரயில் ஏறிக் குற்றாலக்குலவரையின் தொடர்ச்சியிலமர்ந்து - இயற்கையாம் எழிலரசின் இன்பப்பூங்கா என இலங்கும் பச்சை வயல்களையும், பைம்பொழில்களையும் பாதமாகக் கொண்ட இனிய மலைக் காட்சிகளைக் கண்டுகொண்டே புனலூர் வரை சென்று மகிழ்ந்து மீண்டார். இவ்வாறு பத்து நாட்கள் அடிகள் குற்றாலத்தில் குலவி இன்புற்றுப் பல்லாவரம் திரும்பினர்.

## திரிசூலம்

பல்லாவர ஊரின் கீழ்பால், தென் வடலாக அரைக்கால் அளவு நீண்டும் 900 அடி உயர்ந்தும் உள்ள குன்று ஒன்று உண்டு. அக்குன்றின் வடபாலும் கீழ் பாலும் தென்பாலும் 200 முதல் 600 அடி உயரமுள்ள குன்றுகள் உள்ளன. இந்நான்கு குன்றுகளின் இடையில் சிற்றூர் ஒன்றுண்டு. இதுவே, திருச்சுரம் என்னும் பெயருடைய ஊராகும். இக்காலத்தவர் அத்திருப் பெயரை அறியாது திரித்துத் 'திரிசூலம்'' என்றே வழங்குகின்றனர்.

ஊரின் நடுவில், அழகியதோர் சிவபிரான் திருக்கோயிலுண்டு. 13-ம் நூற்றாண்டில் அரசு புரிந்த விக்கிரம சோழன் என்னும் மன்னன் இக்கோயிலைக் கற்றளியாக அமைத்தான். கோயிலோ சற்றுப் பெரியது, மிகவும் அழகானது. மூலத்தானம், மேடை மீது அமைந்துள்ளதும், அருட்குறி (சிவலிங்கம்) பெரியதாய் அமைந்திருப்பதாலும், திருச்சுற்று மாளிகையிலுள்ள திருவுருவங்களின்

அழகாலும், அம்மையின் அழகார்ந்த திருவுருவச் சிறப்பாலும் கோயில் மிகவும் கவர்ச்சி தருவதாயுள்ளது.

கோயிலின் திருமுன் வீதியும், அடுத்த இரண்டு மூன்று சிறிய தெருக்களும், திருக்குளமும் அதனை அடுத்துள்ள சிற்றேரியும், ஊரின் தென்பாலுள்ள தெருவும், அதற்குக் கூப்பிடு தொலைவில் தென்குன்றின் சரிவில் பொழிலிடையில் அமைந்துள்ள ஊர்த்தெய்வக் கோயிலும், அதன் வாயிற்புறத்தில் காண்பார்க்கு அச்ச மூட்டும் வடக்கு நோக்கி அமர்த்தப்பட்ட சுதை வேலை யாலாகிய பெரியதோர் ஆண்காவற்பூதமும், எப்புறமும் குன்றுகளும் கொண்டு 'திரிசூலம்' மிகவும் அழகாய் காட்சியளிக்கும்.

குன்றுகளில் மரஞ்செடி கொடிகள் கிடையா. எனினும் அழகுக்கு குறைவில்லை. இவ்வூரில் சுரக்கும் கிணற்று நீர் மிகவும் சுவையானது. எல்லையற்ற அமைதியிற்குலவும் இச்சிற்றூரின் சிவபிரான் திருக்கோயிலே அடிகளின் பெருவிருப்பத்திற்குரியது. ஆண்டில் மும்முறை, நான்குமுறை அடிகள் தம் குடும்பத்தாருடன் இக்கோயிலில் வழிபாட்டிற்காகச் செல்வார். நாள் முழுதும் கோயிலிலேயே தங்குவர்.

அன்று முற்பகல் முழுவதும் அடிகள் செலவில் கோயில் பெருமானுக்கும், ஏனைய திருவுருவங்கட்கும் சிறந்த திருமுழுக்குகள் (அபிஷேகங்கள்) செய்யப்படும். சிறப்பான பூசனைகள் நடைபெறும். அந்நேரமெல்லாம் அடிகள் தம் குடும்பத்த வருடன் கோயில் மகாமண்டபத்தில் அமர்ந்து தேவாரத்திரு முறைகளைப் பாடுவர். உருகுவர். இன்பக்கண்ணீர் மல்குவர். கோயில் குருக்கள் சிவபக்தி மிகுந்தவர். திருமுறைகளில் மிகவும் பற்றுடையவர். அதனால் அடிகள் வழிபாட்டிற்கு வந்துவிட்டால் சிறந்த முறையில் பூசனை புரிவர். அடிகள் உதவியும் செய்வர்.

பிற்பகல் 2 மணிக்குத்தான் பூசனைகள் நிறைவெய்தும். உடனே, கோயில் வெளி மண்டபத்திலே சிறந்த விருந்தாட்டு நடைபெறும். அடிகளின் திருமனையார் உணவுகளை எல்லாம் 12-க்குள் செய்து வைத்துவிட்டுத் தாமும் வழிபாட்டினிடையில் கலந்து கொள்வர். 3 முதல் 5 வரை ஓய்வு.

மாலை கோயிலினின்றும் அடிகள் தம் குடும்பத் தலைவருடன் ஆடிப்பாடிக்கொண்டும், இயற்கைக் காட்சிகளைக் கண்டு கொண்டும் குன்றுகளிடையே ஒன்றரைக்கல் நடந்து தம் மாளிகையை அடைவர்.

சிறப்புநாட்கள் தவிர ஏனைய நாட்களில் இக்கோயிலுக்கு எவரும் வரமாட்டார். குருக்கள் மட்டுமே சென்று வழிபாடு செய்வார். அதனால், அமைதி மிகுந்த இக்கோயில் வழிபாட்டை அடிகள் பெரிதும் விரும்பினார்.

## வடநாட்டு யாத்திரை இந்துசமய மகாசபை

பாரதநாட்டின் மாபெரும்சமயம், இந்து சமயமாகும். இச்சமயத்தில் சில பிரிவுகளும், அச்சில பிரிவுகளில் பல உட்பிரிவுகளும் உண்டு. எனினும் இச்சமயத்தின் இருபெரும் கண்களெனத் திகழும் முதன்மையான சமயங்கள் இரண்டே. அவை சைவம், வைணவம் எனப்படும்.

நடைமுறையிலுள்ளனவும் இவ்விரு பெரும் சமயங்களே யாகும். இந்து சமயத்தின் தத்துவக் கோட்பாடுகளில் நேர்மாறான வேற்றுமைப் பகுதிகளும் அதே சமயத்தில் அவற்றுள் 100 -க்கு 99 பங்கு ஒற்றுமைப் பகுதிகளும் உள்ளன. ஆம், எல்லாம் ஒரே பிண்டமாக இருந்தால் மனிதனாக முடியுமா? ஐம்பெரும் பொருள்களும் (மண், விண், காற்று, தீ, நீர்) ஒரே பொருளாக இருந்தால் உலகமேது? நல்ல வேற்றுமையால் பயனுண்டு அப்படி தான் இருக்கவேண்டும், இருக்கின்றது வேறுபட்ட உறுப்புக்களில் ஓடும் குருதி ஒன்றே வேறுபட்ட பொருள்களின் ஊடே உலக இயக்கம் நடைபெறுகிறது. வேற்றுமையில் ஒற்றுமையே இன்பம் பயப்பது. இவ்வுண்மைக்கேற்பவே இந்து சமயமும், அதன் கோட்பாடுகளும், வேறுபட்டனவாயினும் அவற்றின் ஊடே ஒற்றுமைப் பண்பாடு நிறைந்து இன்பம் பயக்கின்றது. அது நன்மனம் நல்லறிவு கொண்டு காண்பாருக்குப் பெருநலந்தரும் பேரின்பக்கனி யாகும்.

## இந்து சமயங்களின் ஒருமைப்பாடு

இவ்வுண்மையினை உணர்ந்து மகிழ்ந்த அடிகள், 'சைவ சித்தாந்த ஞான போதம்' என்னும் தமது நூலிலும், பிறநூல்களிலும்

விரிவாக எழுதியுள்ளனர். இந்து சமயங்களின் சுருக்க வரலாறு' என்ற தமது நூலில், கா. சுப்பிரமணியப்பிள்ளை அவர்களும் இவ்வுண்மை களை நன்கு விளக்கியுள்ளார். இதனாலன்றோ 1929 இல் திருப்பாதிரிப்புலியூரில் ஞானியார் முன்னிலையில் அடிகள் தலைமையில் நிகழ்ந்த சைவர் மாநாட்டில், "சைவ சமயத்திற்கு உயிர் நூல்கள், பன்னிரு திருமுறைகளும், பதினான்கு சாத்திரங் களும் இவற்றின் கருத்துக்களுக்கு வேறுபடாத வேதசிகாமப் பகுதிகளுமாம்" என்னும் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

அம்மாநாட்டில் கலந்து கொண்டவர்கள் அன்றைய தமிழ்நாட்டின் சிவநெறின் தலைவர்களில் முதன்மையானவர்க ளாகவர்:- கா. சுப்பிரமணியபிள்ளை, ந. மு.வேங்கடசாமி நாட்டார், திரு.வி.க சச்சிதானந்தம் பிள்ளை, தெ. பொ. மீனாட்சி சுந்தரம் பிள்ளை, குளித்தலை அரங்கசாமி ஐயர், நெல்லை சிவானந்தா, வரவாய்ப்பில்லாதவர்களில் குறிப்பிடத்தக்கவர் பண்டிதமணி கதிரேசச் செட்டியார் ஆவர். கூறிய செய்திகளால் இந்து சமயம் பற்றித் தமிழகத்தின் தனிப்பெரும் சமயத் தலைவர்களின் ஆர்வம் நன்கு விளங்கும்.

இந்தியா ஒரு நாடு என்பதற்கு இந்து மதந்தானே ஒரே ஒப்பற்ற காரணம். ஆதலில், இந்து சமய ஆர்வத்தில் அடிகள் தலை நின்றார் என்பதில் வியப்புக்கிடமேது? ஆகவேதான் 20-3- 1913-ல் பூரிஜகந் நாதத்தில் கூட இருந்த "இந்து சமய மகாசபைக்கு" தூத்துக்குடி சைவ சித்தாந்த சபையின் சார்பாளராகப் (பிரதிநிதி) பணியாற்ற அடிகள் இணங்கினர். அப்பெரும் சபையில் 'சைவமும் சாங்கியமும்' என்பதுபற்றி ஆங்கிலத்தில் விரிவுரையாற்ற ஆராய்ச்சிமிக்க ஒரு கட்டுரையை எழுதி முடித்தார்.

## புறப்பாடு, பல தல வணக்கம்

21-3-1913-ல் அடிகள், சைவ சமய சொற்பொழிவாளராகச் சென்னையினின்றும் வடநாட்டுக்குப் புறப்பட்டார். 23-ல் விஜயவாடாவில் இறங்கி ஆங்கு மலைமீதமர்ந்துள்ள சிவபரம் பொருளை வழிபட்டுப் பின் ராஜமந்திரியில்,

**''புவியினுக்கணியாய் ஆன்றபொருள்தந்து புலத்திற்றாகி**
**அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறி அளாவி**
**சவியுறத்தெளித்து தண்ணென்றொழுக்கமும் தழுவிச்**
**கவி எனக் கிடந்த கோதாவரி'' (கம்பர்) சான்றோர்**

*நீராடி மகிழ்ந்து நண்பர் உலகநாத முதலியார் என்பார் வீட்டில் சில நாட்கள் தங்கினர்; 27-ல் தவளேஸ்வரம் சென்று சிவன், மால் கோயில்களைத் தொழுது 30-ல் பூரி சென்று சேர்ந்தார். ராமசந்திர பண்டாரியின் அன்பான வரவேற்பைப் பெற்றார். ஏதோ காரணத்தால் மகாசபை நடைபெறவில்லை. அடிகள் பூரிப் பெருமானை - உலகநாதனாம் ஜெகந்நாதனை வழிபட்டு மகிழ்ந்தார். அவரை அங்கும் ஆராய்ச்சி விடவில்லை. பூரிக்கோயில்கள் '' ஒருகாலத்தில் புத்தர்களுடையதாக இருந்திருக்கலாம். பின்னர். இந்துக்கள் அவற்றைக் கைப்பற்றியிருக்கலாம்'' என்று தம் நாட்குறிப்பில் குறித்துள்ளனர். 1-4-1913-ல் புவனேஸ்வரம் அடைந்தார். ''300 கோயில்கள் அங்குள்ளனவாம் என்றும், வடநாட்டில் தென்னாட்டார் மகிழும் வண்ணம் விளங்கும் அவ்வழகிய பெருங்கோயில்களைத் தமிழ்நாட்ட ார் தரிசித்து மகிழவேண்டும்'' என்றும் அடிகள் தம் நாட்குறிப்பில் குறிப்பிட்டுள்ளார். அவ்வழகு நகரும், ஆங்குள்ள பெரிதான நன்னீர்க் குளமும் அவரைப் பெரிதும் இன்புறுத்தின. புவனேஸ்வரம் என்றால் அடிகள் உள்ளங் குளிர்வர். அங்கு மூன்று நாட்கள் தங்கிப் பாலா சூரையடைந்து சிவபிரான் கோயிலை உற்றார். நல்ல அழகிய சிவலிங்கம் அடிகள் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. ஆம்! சிவபக்தியால் நிறைந்துள்ள அவருள்ளத்தில் அந்த நல்ல அழகிய சிவலிங்கம் இடம்பெற்று மகிழ்விக்குந்தானே! பின்னர் இந்திய நாட்டின் மாபெரும் முதல் நகரான கல்கத்தாவை 4-4-1913-ல் அடைந்தார் அன்பர் கோவிந்தராச முதலியாரின் விருந்தினராய் அவரில்லத்தே தங்கினர்.*

### கல்கத்தாவில்

*7-4-1913 இல் அடிகள், ராமகிருஷ்ண மடத்தின் தலைமையிடமான பேலூர் மடத்தையும், தட்சணேஸ்வரத்தையும் வழிபட்டார். ராமகிருஷ்ணர் வாழ்ந்து வழிபட்ட அவ்விடம் அவர்க்கு மிகுந்த இறையுணர்ச்சி ஊட்டியது. அப்பெருமானிடத்தும் விவேகானந்தரிடத்தும் அடிகட்கு ஆழ்ந்த அன்பும் பக்தியுமுண்டு.*

இவ்விருவர் பாலுங்கொண்ட பேரன்பே அடிகளை கல்கத்தாவுக்கு ஈர்த்தது. 13-ல் பி. கே. ஆச்சார்யா, பி. ஏ., எல். பி. என்பார். தலைமையில் அடிகள் 'திருஞானசம்பந்தர்' என்பது பற்றித் தமிழில் பேசினர். 16-ல் ஹரீந்ரநாத் டட்டா,எம். ஏ,. பி. எல் தலைமையில் ஆங்கிலத்தில் ''சாங்கியமும் சைவ சித்தாந்தமும்'' என்பது பற்றி நன்றாகப் பேசினர்.

அடிகளின் கருத்து சங்கரர் கொள்கைக்கு மாறுபட்டிருப் பினும் நன்றாக இருக்கின்றது'' என்று தலைவர் பாராட்டிப் பேசினார். இதன்பின்பு அடிகள் கல்கத்தாவில் சமய உணர்வைப் பரப்பச் 'சமரச சன்மார்க்க சபை' ஒன்றை அமைக்க அன்பர்களைக் கூட்டி எண்ணமிட்டார். அதன்படி 4-5-1913-ல் அடிகள் தலைமையில் அச்சபையின் கூட்டம் நடந்தது. அடிகளின் பேச்சு மிக நன்றாயமைந்தது. அனைவருக்கும் பெருமகிழ்வளித்தது. அன்பர்களின் பாராட்டும், வணக்கமும் எல்லை கடந்தன. அடிகட்கு உயர்ந்த பட்டாடை போர்த்தி மகிழ்ந்தனர். ஒவ்வொருவரும் அடிகட்கு ஒப்புரவாற்றுதலிலும், பணிவிடை புரிவதிலும் ஆர்வங்கொண்டு முந்தினர். பலர் அடிகளை வந்து கண்டும், அவர்கள் வாய்மொழியைக் கேட்டும் மகிழ்ந்தனர்.

### தார்ஜிலிங்கில் தோன்றாத் துணை

இவ்வாறு கல்கத்தாவில் அடிகள் அறிவுப் பணிகள் ஆற்றிய நாட்களில் ஒரு நாள் கல்கத்தாவின் உயிராய் ஒளிரும் காளி தேவியைத் தரிசித்தார். காளியின் கோர வடிவு அவருள்ளத்தில் அன்பையும், மகிழ்ச்சியையும் அளிக்கவில்லை. மற்றொரு நாள் இமயங்காணும் ஆர்வத்தால் ரயிலேறி தார்ஜிலிங் அடைந்தனர். அது இமயத்தைச் சார்ந்த மலைநிலம்; கடல் மட்டத்துக்கு மேல் 6400 அடி உயரத்தில் அமைந்தது. அடிகள் தார்ஜிலிங்கை அடைந்தது மாலைநேரம். இருள் சூழ்ந்து படரலாயிற்று. புகைவண்டி நிலையத்தவர் யாவரும் போய்விட்டனர். அதுவோ பனிமலை, குளிர்தாங்க முடியவில்லை. அடிகள் உடல் குளிரால் நடுங்கியது. எதிர்பார்த்தவர் வரவில்லை. புதிய ஊர். அடுத்து வீடுகளுமில்லை. இன்னும் சில நிமிடங்களில் குளிரால் அடிகள் உடல் விறைத்துப் போகும் நிலை நேர்ந்தது. எங்குப் போவது என்று தெரியவில்லை. சரி இன்றொடு நம் வாழ்நாள் முடிவுறும் போலும்' என்று அடிகள்

எண்ணத் தொடங்கினார். அவருக்கென்ன செய்வதென்று தோன்றவில்லை. கபிலைநாதனை எண்ணினார். அந்நேரத்தில் பின்னே யாரை எண்ணுவது? தனித்தமிழும், ஆரிய நூல்களும் தமிழ்கத்திற்குக் கிடைக்க வேண்டுமென்று சிவபெருமான் திருவுளங்கொண்டார் போலும்! திருநாவுக்கரசு நாயனார் தமது தேவாரத்தில்

**"ஈன்றாளுமாய் எனக் கெந்தையுமாய்**
**உடன் தோன்றினராய் மூன்றாயுலகம்**
**படைத்து கந்தான் மனத்துள்ளிருக்க"**
**என்றான் இமையவர்க்கன்பன் திருப்**
**பாதிரிப்புலியூர்த் தோன்றாத் துணையாய்**
**இருந்தனன் தன்னடி யோங்களுக்கே"**

என்று அருளியபடி அம்பலவர் அடியாராய் அடிகட்கு அப்பெருமான் தோன்றாத் துணையாய் நின்றான். அதனால், அந்நேரத்தில் அங்கு உலாவ வந்ததார் இருவர் அடிகளைக் கண்டு திகைத்து நிகழ்ந்ததறிந்து வருந்தி "சுவாமிஜி! நிரம்பவும் நெருக்கடியான நிலையில் இருக்கின்றீர்கள்! எங்களுடன் வாருங்கள்" என்று தம்மிருப்பிடம் அழைத்துச் சென்றனர். அஃதோர் பெரிய மாளிகை, எல்லா வசதிகளும் மிக நன்றாயமைந்தது. கோடைக் காலத்தில் இந்தியக் குறுநில மன்னர்கள் தங்குதற்கான இன்ப உறையுள், அடிகள் சிவபிரான் தண்ணருளை வியந்து மகிழ்ந்து நன்றியுடன் போற்றினார். நல்ல உணவும், ஒய்வும் பெற்றார். அச்செல்வ மன்னர்கள் அடிகட்கு நல்ல ஒப்புரவாற்றிப் போற்றினர். அடிகள் தோற்றப் பொலிவில் முதலில் ஈர்க்கப்பட்ட அவர்கள் - பின் அவர் தம் அறிவுப் பொலிவில் ஆழ்ந்து விட்டார்கள். இரவு 9 மணியாயிற்று. பெரிய அறை, கணப்பின் அலை, அறையிலுள்ளார் உடலுக்கு இன்பமளிக்கிறது. யாவரும் அடிகளைச் சூழ்ந்து அமர்ந்து அவர் தாமரை முகத்தை நோக்கியபடி உள்ளனர். சிலர் அடிகள் வரலாற்றைக் கேட்கின்றனர் . அது முடிந்தவுடன் சிலர் வேதம், வேதாந்தம், இந்து மதம், தத்துவம், இலக்கியம்பற்றி வினவுகின்றார்கள்.

## அரசர் போற்றல்

யாரையும் விஞ்சும் தம் இனிய குரலால் அடிகள் யாவரும் மகிழ ஆங்கிலத்தில் தகுந்த விடையளிக்கின்றார்கள். வேத, ஆகம,

உபநிடத, தத்துவங்களை யெல்லாம். வடமொழி மேற்கோள் களுடன் முழங்குகின்றார்கள், அடிகளின் அறிவின்ப வெள்ளத்தில் மூழ்கித் திளைத்த அவர்கள் அடிகளின் தாமரையன்ன திருவடிகளைத் தொட்டுத் தொட்டுக் கும்பிட்டனர். வட நாட்டில், ஆண்டி முதல் அரசன் வரையிலுள்ளார் யாவரும் துறவிகள் எவராயினும் அவர் தகுதி நோக்காது அவர் தம் திருவடிகளைத் தொட்டு வழிபடுவராம். அங்குத் தங்கியிருந்த அரசர்களெல்லாரும் அடிகளைத் தம்மினும் மேம்பட்டவராகக் கருதி அடிகட்கு எல்லா வகையான தொண்டுகளையும் ஆர்வமுடன் செய்தனர். வடவரின் இந்நற்பண்புகள் அடிகளை மிகவும் மகிழ்வித்தது.

**கயிலாயக் காட்சி**

இன்பத்திற்கு மேல் இன்பமாக அன்றிரா தண்ணிலவை எங்கும் பொழிந்தது. அமைதி எங்கும் நிறைந்தது. இரவுத்தாய் ஆழ்ந்த துயிலில் மூச்சு விடாது அசையாது கிடக்கின்றாள். அடிகள் மனம் ஆழங் காணா இன்பநிலை கண்டது. வந்த செயலை அவர் மறப்பாரா? கண்ணாடிச் சாளரம் வழியாக நோக்கினார். நெடுந்தொலைவில் வெண்பனி மூடிய கயிலாயக் காட்சியைக் கண்டார். நிலா ஒளியில் - அமைதி இன்பத்தில் திகழும் அக்காட்சி பேரின்ப வீட்டின் கனவுலகத்தில் வைரமென மின்னும் உடுக்கள் பதித்த நீல வானமாம் பரந்த - எல்லையற்ற மேற்கட்டி (விமானம்) யின் கீழ் வெண்பொடியை உடலெல்லாம் பூசி, வெள்ளிய கங்கைச் சடையினின்றும் வீழ, வெள்ளிய திங்கள் தலையில் ஒளிரப் புன்முறுவல் பூக்கும் திருமுகத்துடன் யோகிக்கும் நீலகண்டனைச் சிவபரம் பொருளை அடிகட்கு நினைவூட்டியது.

**அடிகள் பெற்ற பேரின்பம்**

அக்காட்சி இன்பம் அடிகளின் இன்னுயிரை ஆரா இன்பத்தில் ஆழ்த்தியது. அடிகள் மாலை பட்ட துன்பம், இவ்வின்ப நிலையில் மேலும் இன்பத்தை உணர வைத்தது. சிவபெருமான் தந்த இப் பேரின்பத்தினை அடிகள் நினைத்து,

**"தந்தது உன் தன்னைக் கொண்டது என் தன்னைச்**
**சங்கரா யார் கொலோ சதுரர்? -**
**அந்தம் ஒன்றில்லா ஆனந்தம் பெற்றேன்,**
**யாதுநீ பெற்றது ஒன்றென்பால்-**

சிந்தையே கோயில்கொண்ட எம்பெருமான்
திருப்பெருந்துறையுறை சிவனே!-
எந்தையே ஈசா! உடலிடங்கொண்டாய்!
யான் இதற்கு இலன் ஓர்கைம்மாறே''

என்ற இத்திருவாசகப் பாடலை நன்றியுணர்வால் கசிந்துருகிப் பாடியிருப்பர். இன்பமயமான அவ்விரவு விடிந்தது. காடு விழித்ததைப் புள்ளினங்களின் இசைகள் தெரிவித்தன. வண்டுகள் சங்கூதின. கதிரவன் ஒளி வீசினான். மலையும் சோலையும் அடிகளை மகிழ்வித்தன. ஆங்குள்ள துர்க்கலிங்காவை அடிகள் ஓரன்பருடன் சென்று தரிசித்து மீண்டார். மலைக்காட்சி அவருள்ளத்தில் ஆரா மகிழ்வைத் தந்தது அன்பர்களின் ஒப்புரவு அம்மகிழ்ச்சிக்கு விருந்திட்டது.

அடிகள் தார்ஜிலிங்கில் நான்கு நாட்கள் தங்கி மகிழ்ந்தனர். குறுநில மன்னர்களின் ஒப்புரவினை வியந்தனர். அடிகள் அவர்களிடம் பிரியா விடை கொண்டார். அவர்கள் பொன்னாலும் அடிகளைப் போற்றினர். அவர்கள் அன்பு தொடர அடிகள் கல்கத்தா மீண்டும் சின்னாட்கள் அங்கிருந்து பின் புறப்பட்டனர்.

**காசியைக் காணல்**

பாரத நாட்டின் பலகோடி மக்களின் உள்ளக் கோயில் காசி . அக்கோயிலின் உள்ளே ஒளியாய் ஒளிரும் விசுவநாதனே இந்து மக்களின் உயிர் அறிவாம். ஆதலின் இந்துக்கள் தெய்வ கங்கையில் திளைத்தாடிக் காசிநாதனை அன்புருகத் தரிசிப்பர். அம்மையி லென்ன இம்மையிலேயே மோட்சமாம் இன்பப் பேறடைவர் என்பதில் ஐயமேது? இந்நம்பிக்கை இந்நாட்டின் பொதுமக்களுக்கு மட்டுமல்ல - அறிஞர்கட்கு மட்டுமல்ல - மெய் ஞானியர்க்கும் உண்டு. அதனாலன்றோ 1400 ஆண்டுகட்கு முன்பும் அப்பர் பெருமானும் 300 ஆண்டுகட்கு முன்பு குமரகுருபரரும் வாரணாசியாம் இக்காசியை உற்றுக் கங்கையில் படிந்து விசுவனை (பெரியவன்) தரிசித்தது வாழ்நாளில் ஒரு நாளாவது காசி சென்றேயாகல் வேண்டும் என்பதும், அங்குக் கங்கையிலாடி விசுவனைத் தரிசியார்க்கு, இன்ப வீடு இல்லை என்பதும் இந்துக்களின் நம்பிக்கை. வெறும் நம்பிக்கையல்ல ஆர்வந்ததும்பிய குறிக்கோளும் ஆகும். இதுபோன்றே வடவர்க்கு ராமேசுவரம்.

இரண்டும் காண்டலே இந்துவின் மன அமைதிக்கு வழி. இது பெற்றார் வேறொன்றும் விரும்புவதில்லை. முன்பே அடிகள் ராமேசுவரத்தை இரு முறை பணிந்துள்ளார். இப்போது காசிக் காட்சியும் அவர்க்குக் கிடைத்துவிட்டது. குறைவென்ன? 9-5- 1913 முதல் 15-5- 1913 வரை அப்புண்ணிய நகரில் அடிகள் தங்கி இன்புற்றார். முதல் நாள் குளிர்ந்த கங்கையிலாடிக்குவியும் அன்பால் மெய்மறந்து கண்களில்! அருவிசோரத் தமிழ் மறைகள் பாடி விசுவநாதனைத் தாமே நீராட்டி மலர்சூட்டி நறுமணம் புகைத்து பழம் படைத்து ஒளிகாட்டி வழிபட்டுப் பேரின்பநிலை எய்தினார். ஒருநாளல்ல, சிலநாளிவ்வாறு அழகிய விசாலாட்சியுடனமர் அண்ணலைப் போற்றி மகிழ்ந்தார்.

### கங்கைக் கரையில் கணபதி வழிபாடு

அடிகள் நாள்தோறும் பிள்ளையார் வழிபாடாற்றுவதுண்டு. அடிகட்கு அவர் ஆர்வநாயகர். அதனால் ஒரு நாள், கவின் நிலவு கங்கையில் படிந்து அதன் கரையில் பிள்ளையார் வழிபாட்டைச் செய்தார். கங்கையிலாடி அதன் கரையில் பிள்ளையாரை வழிபடும் தம்மார்வத்தை இவ்வாறு அடிகள் முடித்து மகிழ்ந்தார். பின் விசுவநாயகனை வணங்கி விசாலாட்சி திருமுன்பு உற்றார். விசாலாட்சியின் வடிவம் வெள்ளியால் மிகவும் அழகாக அமைக்கப்பட்டிருப்பது கண்டு மிக மகிழ்ந்து போற்றினார். ஒருநாள் தியாசாபிகல் சொசைடி, என்னும் 'திவ்ய ஞான சங்கம்' சென்று அன்னிபெசன்ட் அம்மையாரின் சொற்பொழிவைக் கேட்டார். அது இந்தியக் கல்வி பற்றியது. ஒரு பிற்பகல் சாரநாத் சென்று அடிகள் புத்தமதச் சின்னங்களைப் பார்த்தார். மற்றொருநாள் மணிரணிகையும், விநாயகர் கோயிலையும் பார்த்தார்; வணங்கினார். இவ்வாறு காசியில் களித்தார் அடிகள்.

### பிற தலங்களைப் போற்றல்

16-ல், பிரயாகை வந்தடைந்தார். சுந்தர சாஸ்திரிகளின் சிவமடத்தில் தங்கினார். மறுநாள் மாலை கங்கை, யமுனை, சரசுவதியாம் மூன்றாறுகள் ஒன்று கூடும் புனித இடத்தில் நீராடி இன்பநிறை எய்தினார். மறுநாள் பார்த்து வாசர் ஆசிரமம் முதலியதாய இடங்களைப் பார்த்து மகிழ்ந்தார். சிவபெருமான் திருச்சடையாம் இமயமால் வரையினின்றும் புறபட்ட கங்கை

அன்னை நிலமகளை வாழ்த்த வந்த நிலப்பகுதியின் முதலிடம் அரித்துவாரம். இதனை 19-ல், சேர்ந்த அடிகளை இரயில் நிலையத் தலைவர் எஸ். வி. 'நாயுடு காரு கண்டார். அவர் நல்ல மனிதர். வேண்டிய உதவிகளைச் செய்தார். அவருடைய ஆங்கிலப் பேச்சு வன்மையாகவும் சிறந்ததாம். நாயுடுவின் பேரன்பால் பன்னிரண்டு நாட்கள் அடிகள் அவ்வின்ப நகரில் தங்கியிருந்தார். அந்நாட்களில் அடிகள் புனித கங்கை ஆடினார். நாயுடுகாரு அன்புடன் அழைத்துச் சென்று காட்ட வில்வாரண்யத்திலுள்ள - குகைக்கோயிலில் எழுந்தருளியுள்ள சிவபெருமானைத் தரித்தார். ரிஷிமூலம், ராமகிருஷ்ணா மிஷன், பிரகுண்டம் முதலிய பல இடங்களையும் கண்டார், நிகழ்ந்தார்.

கங்கையின் அடியிலுள்ள கற்கள் சிவலிங்கங்கள் போல் காட்சியளிப்பதை கண்டு வியப்புற்றார். கங்கையின் மேல் கட்டப்படும் அணையைப் பார்த்தார். இக்காட்சிகளுக் கிடையில் அடிகளின் படிப்பும், ஆராய்ச்சியும், எழுத்தும் நிற்கவில்லை. எப்பணியைச் செய்தாலும் உணவை மனிதன் மறக்க முடியுமா? அதுபோல் அறிஞராம் அடிக்ட்குப் படிப்பும். ஆராய்ச்சியும், எழுத்துந்தானே உணவு! ஆதலின் இடைநேரங்களில் 'உலகமதம்' என்னும் ஆங்கிலச் சொற்பொழிவைச் சமைத்துக் கொண்டிருக்கின்றார். இன்பமயமான இந்த யாத்திரை நிகழ்ச்சியில் மேலும் இன்பமான ஒரு நலம் அடிகட்கு வாய்த்தது.

### டேராடூன் பல்தேவ் சிங்

இவர் இரக்கப்பண்பு மிக்கவர். பெருஞ்செல்வர். 28-ல் அடிகளைக் காணவந்தார். அடிகளின் அறிவு மாட்சியில் ஈடுபட்டார். அடிகளிடம் பக்தி பூண்டார். அன்பு அவருள்ளத்தில் பெருகியது. அன்பு உடன் உறைவை விரும்புமன்றோ. தம் மாளிகையில் வந்து தங்கியிருக்குமாறு அடிகளை வேண்டிக் கொண்டார். அவ்வன்பு உளங்கனிந்திருந்த படியால் மறுநாள் அடிகள் இமயமலையில் இன்பபூங்காவென இலங்கும் டேராடூன் சென்று அவர் தம் வசதியான பெரிய மாளிகையில் சென்று தங்கினார் "டேராடூன் தெய்வமலையாம்," அது இமயத்தின் ஒருசார் உள்ளமலை நகரமாகும். மாண்பினிய அம்மலைநாட்டின் வாழ்வு துறவிகளுக்கேற்ற நல்லிடமாகும். இமயம் தெய்வத் திருவருள் பொழியும் வெண்முகிலாகும். மன மடங்க- உயிர் ஒடுங்க -

யோகியார் தவமிருக்கும் தலைநிலமாகும். தூய்மையும், அழகும், அமைதியும் குடிகொண்டது இமயமன்றோ? அதனால் மெய்யுணரும் மேலோர், தவச்சாலையார் இமயமலையை இறைவன் திருமேனியாகவே கொண்டு வழிபட்டு நிற்பர். அத்தகைய இமயத்து டேராடூன், அடிகளை ஆட்கொண்டது சரியானதே! இத்துடன் பல்தேவ் சிங்கின் பாராட்டும், பணிவும், ஒப்புரவும் அடிகள் உள்ளத்தை மேலும் மகிழ்வித்தன. ஊர்பகுதிகளைக் காரில் சுற்றிக் காண்பித்தார். பலதேவ் சிங், இந்நகரில் அடிகள் 'உலகமதம்' என்னும் சொற்பொழிவை ஆக்கி முடித்தார். பதினைந்து நாட்கள் இமயத்தில் இன்புற்ற அடிகள் அதனைவிட்டுப் புறப்படலானார். அவ்வளவில் பல்தேவ் சிங் இரண்டு சவரன்களை அடிகளின் அன்பும், பணிவும் ததும்பவைத்து மகிழ்ந்தார். அவரன்பு அடிகளை உருக்கியது. பல்தேவ் சிங் வாழ்க! என்று அடிகள் உள்ளம் வாழ்த்தியிருக்கும்.

## டில்லியைச் சேர்தல் - பஞ்சாபி நண்பர்

13- 6 -1913 காலை அடிகள் இந்திய நாட்டின் இணையிலாத தலைநகரான டில்லியையடைந்தார். அவ்வளவுதான்.

> ''யாதானும் நாடாமல் ஊராமால் என்னொருவன்
> சாந்துணையும் கல்லாத வாறு''

என்றார் திருவள்ளுவர். தென்னாட்டின் தென்னாடாகிய தமிழ் நாட்டின் நல்லிசைப் புலவரும், தவஞானச் செல்வரும் ஆய அடிகட்கு எவ்வாறோ வடநாடாகிய பஞ்சாபைச் சேர்ந்த பஞ்சாபி ராமச்சந்திரவர்மா என்ற - இளைஞர் நண்பரானார். அவர் ஆங்கிலம் தெரிந்தவர். அடிகளின் கல்வி மாட்சியிருக்கட்டும் தோற்றப் பொலிவே அவரை ஆட்கொண்டிராதா? அதனால் அடிகட்கு எல்லா பணிவிடைகளையும் தாமே அன்புடன் செய்யலானார். டில்லியில் காணவேண்டிய காட்சிப் பொருள்களையும், இடங்களையும் அழைத்துச் சென்றுக் காட்டினார். செலவெல்லாம் அவருடையதே. அடிகட்காக ஏராளமாய்ச் செலவிட்டார். அடிகள் அந்த அன்பு இளைஞரைத் தம்முடன் ஆக்ரா வரையில் வருமாறு அழைத்தார். அன்பான நண்பர் அதனை மகிழ்வுடன் ஏற்றார். இருவருமாகப் புறப்பட்டனர். டில்லியை விட்டனர். 17-ந்தேதி காலை முட்ராவை அடைந்தனர். அங்கிருந்து அடிகள் தாம்

விரும்பும் ஆரிய சமரச குருகுல நிலையத்தை அடைந்தார். தயாளந்தரிடத்தில் (ஆரிய சமாஜம் கண்டவர்) அடிகட்கு அன்பும், மதிப்பும் உண்டு. காரணம் அவர் வகுத்த கோட்பாடுகள் (சத்தியார்த்த பிரகாச நூல்)சைவ சித்தாந்த நெறியின் அடியொற்றி அமைந்திருப்பனாலேயாம். குருகுலத் தலைவர் பால் முகுந்தா பி.ஏ. அடிகளை அன்புடன் வரவேற்று மகிழ்ந்தார். இருவரும் நீண்ட உரையாட்டில் பொழுது போக்கினர்.

அடிகளின் கல்வி மாட்சியை அவர் பெரிதும் பாராட்டினார்.

குருகுலம் அமைந்துள்ள அப்பிருந்தாமன் நகரில் சலவைக் கல்லாலும் சிவப்புக் கல்லாலும் அழகாகக் கட்டப்பட்டிருந்த கிருஷ்ணன் கோயிலுக்கும், ஏனைய கோயில்களுக்கும் அடிகள் சென்று சேர்ந்தனர். உலகின் அழகு மாளிகையாம் தாஜ்மகாலை சலவைக் கற்கட்டடத்தை அழகான வேலைப்பாட்டினை- அதிசய மாளிகையை அடிகள் கண்டு ஆராவின்படைந்தார்.

இன்பத்திற்கு நடுவே துன்பமும் வேண்டுமல்லவா? அப்போதுதானே இன்பம் சுவைக்கும்! இன்ப துன்பம் கலந்தது தானே வாழ்க்கை! இறையின்பம் ஒன்றுதானே நிலைத்தது. அதனாற்றானே அறிவின் ஆன்றோர் இன்பமாம் இறைவனை அடையத் தவிக்கின்றனர். உலக இன்பம் எல்லாம் நிலையற்றவை அன்றோ! அதுவும் யாத்திரைக் காலத்தில் வெளிநாட்டில் கிடைக்கும் நட்பின்பம் தொடர்ந்து கிடைக்க வாய்ப்பேது?

பஞ்சாபி ராமச்சந்திர வர்மாவும் தமிழ் நாட்டு அடிகளும் பிரியும் நேரம் வந்தது. இருவராலும் பேசமுடியவில்லை. அன்புருக்கத்தால் விம்மினர். இருவரும் ஒருவரை ஒருவர் இறுகத்தழுவிக் கொண்டனர். என்றாவது ஒரு நாள் இறைவன் நம்மைக் கூட்டுவார் என்று ஒருவருக்கொருவர் தழுதழுத்த குரலில் கூறிக்கொண்டு பிரிந்தனர். அவ்வளவில் அவர்கட்குத் தாஜ்மகாலும் துன்பக்காட்சியே தந்திருக்கும்.

## பம்பாய் சேர்தல்

20-6-1913-ல் அடிகள் நாசிக்கை அடைந்தார். மறுநாள் புனித கோதாவரியில் மூழ்கி அன்றிரவே பம்பாய் சேர்ந்தார். ரயில் நிலையத்தில் ''தேசோத்தரரக'' நாகேஸ்வரராவ் பந்துவின்

எழுத்தாளர், தம் தலைவரின் ஆணைப்படி அடிகளை வரவேற்றுப் பந்துலுவின் தொழிலகத்தில் அடிகளைத் தங்கச் செய்தார். ஆந்திரத் தலைவரான நாகேஸ்வரராவ் அடிகளினாற்றலறிந்து அவர்பால் அன்பும் மதிப்பும் கொண்டவர் புலவர்களையும், நாட்டுத் தொண்டர்களையும். பொருள் தந்து போற்று புரவலர். வியாபாரி, பெருஞ்செல்வர், கொடையாளி, கல்விமானுங்கூட. அடிகள் பம்பாய் சேர்ந்தபோது அவர் சென்னைக்குச் சென்றிருந்தார். ஆயினும் பம்பாயில் அடிகட்கு வேண்டிய வசதிகள் யாவும் செய்து தரவேண்டுமெனத் தம் தொழிலக ஊழியர்களுக்குக் கட்டளை யிட்டிருந்தார். அவர்களும் அடிகள் பால் பேரன்பு கொண்டு பம்பாய் நகரில் அடிகள் பார்க்க வேண்டிய முதன்மையான இடங்களை எல்லாம் ஒருவரை உடன் - அனுப்பிக் காணுமாறு செய்தார்கள். கல்கத்தாபோல் பம்பாய்க் கட்டடங்கள் அடிகட்கு மிக அழகாய் விளங்கின. நான்கு நாட்கள் பம்பாயிலிருந்தபின் அடிகள் 24-6-1913 மாலை செகந்தரபாத்தை அடைந்தனர். புகைவண்டி நியத்தில் அன்பர்கள் அடிகளை வரவேற்றனர். அந்நகரில் அடிகள் அரிய பல சொற்பொழிவுகளாற்றினர். பின்பு, அளவளாவி மகிழ்ந்தனர்.

## சென்னை திரும்புதல்

11-7-1913 காலை சென்னையை அடிகள் அடைந்தார். சென்ட்ரல் ரயிலடியில், சென்னை, ராயப்பேட்டை பாலசுப்பிரமணிய பக்த ஜன சபையார் தாய் வரவு கண்ட சேய்போல் மகிழ்ந்து மலர் சூட்டி அடிகளை அன்புடன் வரவேற்றனர். மாலை அடிகள் பல்லாவரம் அடைந்தார். குடும்பத்தார் அடைந்த மகிழ்ச்சியைக் கூறவும் வேண்டுமோ?.

## பாராட்டு விழா

19-காலை ராயப்பேட்டை, சபையின் உறுப்பினர்கள் சச்சிதானந்தம் பிள்ளை, திரு. வி. கலியாணசுந்தர முதலியார், அவர் தமையனார் திரு. வி. உலகநாத முதலியார், முதலிய அன்பர் பலர் பல்லாவரம் போந்து அன்புடன் அடிகளை வணங்கி அவர் தம் வடநாட்டுப் பயணத்தைப் பாராட்டிச் சிறப்பித்தார்கள். அடிகள் வடநாட்டிலாற்றிய சைவப் பணியைப் பெரிதும் புகழ்ந்து

* இவர் இந்திய தேசீய காங்கிரசின் நாட்டு விடுதலை போரில் பெரு வீரராய் விளங்கியவர்.

போற்றினர். அடிகள் அவர்கள் எல்லோரையும் திரிசூலம் அழைத்துச் சென்று தம் உரிமைநாயகரான சிவபெருமானை வணங்கினர். தம்மை அவர்கள் கொண்டாட அடிகள் இப்பயண வெற்றிக்குக் காரணமான சிவபிரானைக் கும்பிட்டுப் போற்றினர். "எல்லாம் சிவன் செயல்" என்று மகிழ்ந்தனர். அன்பர்கட்குத் தகுந்த விருந்தும் அளித்தாரடிகள். அடிகளைச் சைவ சித்தாந்த சொற் பொழிவுகளாற்ற அனுப்பியவர்களில் தூத்துக்குடி சைவ சித்தாந்த சபையாரும், ராயப்பேட்டை சபையாரும் முதன்மையானவர் களாவர். ராயப்பேட்டைச் சபையாரால் மயிலாப்பூர் ரானடே மண்டபத்தில் 20-7-1913-ல், ஏற்பாடு செய்யப்பட்ட கூட்டத்தில் அடிகள் தம் வடநாட்டுக் காட்சியையும், எண்ணங்களையும், தொண்டுகளையும் பற்றி மிக அருமையாக - இனிமையாக 3 மணி நேரம் பேசினார். யாவரும் மகிழ்ந்தனர், அன்றிரவு "அன்பரான சைவர், திரு. வி. க." தமது இல்லத்தில் அடிகளை வைத்துப் போற்றி நல்விருந்தளித்தார். இனி அடிகளின் வடநாட்டு அசைவுகளைப் (அனுபவம்) பற்றி அவர் கூற அறிந்தபடி சிறிதுரைப்பேன்.

அவை:-

**வடவர் பண்பு**

"வடவர்கள் தெய்வ பக்திமிக்கவர்கள். அடியார்களிடத்துப் பேரன்பும், வணக்கமும் கொண்டவர்கள், மனமுவந்து பலவகை உதவிகளையும் பிறருக்காற்றும் நல்லியல்பினர். நல்லறச்சாலைகள் பல நாட்டி யாத்திரையாளர்க்கு உதவுபவர். அவர்களில் சிலர் பலர் முரடராயினும் நல்லவர்: தென்னவர் என்பதற்காக என்னை (தம்மை) எட்டுணையும் காவுளைக் கண்டதுபோல் மகிழ்ந்து வணங்குவர். கற்றாரைப் போற்றுவர். வடநாட்டில் - சிறந்த கோயில்கள் - கலைச் சிலைகளில்லை. வட வர்க்கு ஆறுகள் தாம் தெய்வங்கள். கோயில்கள் சிறியன. எங்கும் சிறிய கோயில்களும், அவற்றில் சிவலிங்கமும் உள. அன்பு கனிய வழிபடுவர். இந்து சமயத்தில் அழுத்தமான அன்புடையவர். நாகரிகம் தமிழ் நாட்டைவிட மேலானதல்ல. அன்பில் உதவியில் தமிழரைவிட வடவர் மேலானவர்கள்" என்பனவாம்.

நாயன்மார்கள் அருமை பெருமைகளை அவர்கள் அறியார். திருமுறைகளின் மாண்பை உணர்ந்திலர். இவைகளை எல்லாம்

அவர்கள் அறியுமாறு தமிழ் மக்களாகிய நாம் அங்குச் சென்று சொற்பொழிவுகளாற்றின் நூல்கள் வரைந்து பரப்பின் நற்பயன் உண்டாம்'' என்று கூறுவதுண்டு.

## இடுக்கண் அழியாமை

வடநாட்டு யாத்திரை முடிந்தது. இனி, அடிகள் தம்பெரிய குடும்பத்தினரைப் பாதுகாத்தற்குரிய வருவாய்க்கு என்ன செய்வார்? கல்லூரி வேலையுமில்லை. கையில் காசுமில்லை. துறவியுமாய் விட்டார். இந்நிலையிலும் மனந்தளராது - துன்பவாழ்வை எண்ணிச் சோர்வடையாமல் எல்லாம் சிவன் செயல் அவன் நம்மைக் கை விடான்'' என்ற உறுதியோடு தமது நூலாராய்ச்சி, நூலெழுதல், ''அறிவுக் கடல்'' வெளியிடல் முதலிய பணிகளில் முனைந்திருந்தார்.

## கொழும்பில் சொன்மாரி

இந்நிலையில், திருநெல்வேலியைச் சேர்ந்தவரான திருவரங்கர் என்பார் அடிகளின் நூல்களைக்கற்று அதன் அருமை பெருமைகளில் ஆழ்ந்து அவருடன் கடிதத் தொடர்பு கொண்டு அவர்தம் பேரன்பிற்குரிய மாணவராய் விட்டார். அடிகளைக் கொழும்பிற்கழைத்தார். அந்நிலையின் அடிகளை ஈன்ற தவ அன்னையார் 8-12-1913-ல் மறைந்தார். அன்னைக்கான கடன்களை முடித்து அடிகள் புறப்பட்டார். திருவரங்கரால் உணர்ச்சி பெற்ற கொழும்பு தமிழ்ச் செல்வர்கள் அடிகளை வரவேற்றனர்.

1914 ஜனவரியில் அடிகள் கொழும்பையடைந்து இரண்டு திங்கட்குமேல் அந்நகரிற்றங்கியிருந்து அரிய பெரிய சொற்பொழிவுகள் பலவற்றைப் பலவிடங்களிலும் நிகழ்த்தினர். பல்லாயிரவர் கேட்டு ''இவர் போல் பெருமானையும், பெரும் புலவரையும், பெரும் பேச்சாளரையும் இவ்வுலம் கண்டதில்லை'' என்று தம்மை மறந்து பாராட்டி மகிழ்ந்தனர்.

அடிகளைத் தெய்வமெனப் போற்றி வணங்கினர். பெருவிருந்தளித்து வழிபட்டனர். பொன்னை அவர் திருவடிகளில் பொழிந்தனர். இந்தியத் தமிழரும், இலங்கைத் தமிழரும் அன்று அடிகளைத் தம் சமய குரவரெனப் போற்றிக் கொண்டாடினர்.

அடிகளுக்கு இச்சிறப்புக்கள் எல்லாம் எய்துமாறு அரும்பணி யாற்றிய திருவரங்கர் கொழும்புத் தலைவர்களில் ஒருவராகி விட்டார்; கல்வியறிவிலும் மேம்பட்டார். அடிகள், ''தம்மை வாழ்விக்கச் சிவபெருமானால் அனுப்பப்பட்ட திருத்தொண்டரே திருவரங்கர் என்று எண்ணி மகிழ்ந்தார். அவரை 64-வது நாயனார் என்று கூறி மகிழ்ந்தனர்.

## மாளிகை, அச்சகம், நூல்நிலையம் அமைத்தல்

பெரும் புகழோடும் செல்வத்தொடும் கொழும்பிலிருந்து திரும்பிய அடிகள், பல்லாவரத்தில் சாவடித் தெருவில் தாம் வாடகைக்குக் குடியிருந்த வீட்டினை அடுத்து மதிலுந்தோட்டமும் சூழ்ந்த அழகியதும் பெரியதுமான மாளிகை ஒன்றைமைத்து 19-5-1915-ல் அதில் குடியேறிச் சிறப்பொடு வாழலாயினர். 1916-ல் அம்மாளிகையின் ஓர் பகுதியில் திருமுருகன் அச்சுக்கூடம் ஒன்றைமைத்தார். அன் திறப்பு விழாவை திரு. வி.க அவர்களைக் கொண்டு நடத்திக் கொண்டனர். அம்பலவாணர் நூல் நிலையமும் அமைத்தனர்.

இவற்றிற்கெல்லாம், கொழும்புச் செல்வர்களிடம் திரட்டி உதவியவர் திருவரங்கரேயாவர். அச்செல்வர்களில், திருநெல்வேலிச் சீர்மையாளர்களான குலசேகரன் பட்டினம் ராம. ப. செந்திலாறுமுகம் பிள்ளை, சாத்தான்குளம் சி. சு. வைரவ நாதபிள்ளை. அப்பாத்து நாராயண பிள்ளை முதலியோரும், இலங்கை மாத்தளை ப்ராக்டர் (வழக்குரைப்பர்) அரியநாயகமும், தேவகோட்டை, ஏ. ஆர். எல். என். எல். நாராயணன் செட்டியாரும். கோவைச் சீர்மை, புரவிபாளையம் குறுநிலமன்னர் ஜெக மண்டலாதிபதி கோப்பண்ண மன்றாடியாரும், அவர் மனைவியார் அம்மணி அம்மையாரும் குறிப்பிடத்தக்கோராவர்.

அடிகளின் திருத்தொண்டுகள் யாவும் இச்சீரிய-தன்னலமற்ற-அறிவின்ப நலமுடைய புரவலர்களின் போற்றுதலாற்றான் முட்டின்றி இனிது நடைபெற்றன. சுடர் விளக்காயினும் நன்றாய் விளங்கிட தூண்டுகோல் ஒன்று வேண்டுமன்றோ? அடிகளைப் பாராட்டிந் தமிழுலகம் இப்புரவலர்களையும் போற்றி மகிழும் கட்டுபாடுடையதாகும்.

**நூற்பதிப்பு**

*1916 முதல் அடிகள் தொடர்ந்து இரண்டாண்டுகள் தம் மாளிகையிலேயே அமர்ந்து நூற்பதிப்புப் பணியில் முனையலானார். வெளியூர்ச் செலவையும், சொற்பொழிவு களாற்றலையும் நிறுத்தினர். சொற்பொழிவுகள் கேட்போர்க்கும் அப்போதும், பின்னர்ச் சிலகாலமும் பயன்படும்; நூல்களை எழுதிப் பதிப்பிட்டு வெளிப்படுத்தினாலோ அது வருங்காலத்தும், பன்னூறாண்டும் மக்கட்குப் பெரும் பயன் தந்து நிற்குன்றோ? ஆதலால் அடிகள் இதனை எண்ணித்தாம் எழுதி வைத்திருந்த நூல்களையும், ஆங்கிலத் தமிழ்த்திங்கள் வெளியீடுகளையும் வெளியிடும் பணியில் பெரிதும் ஈடுபட்டு அத்துறையில் வெற்றி பெற்றார்.*

*அதற்கான வகையில், நூலராய்தல், எழுதல் முதலிய பணிகளிலும் முனைந்து நின்றார். பல நூல்கள் வெளியாயின. ‘ஞானசாகரம் என்னும் திங்கள் வெளியீட்டை சிறப்புற நடத்தினர். நூல் விற்பனையும் கூடுதலாயிற்று .*

**நீலாம்பிகையார்,**

*அடிகட்கு அக்காலத்தில் , 1 சிந்தாமணி 2. நீலாம்பிகை, 3. திருஞான சம்பந்தம், 4. மாணிக்க வாசகம் 5. திருநாவுக்கரசு, 6. சுந்தரமூர்த்தி, 7. திரிபுரிசுந்தரி என்னும் மக்கள் எழுவர் இருந்தனர். இவர்களில் 6-8- 1903-ல் நாகப்பட்டினத்தில் பிறந்தவர் *நீலாம்பிகையாவர். சிறு பருவத்திலேயே இவர் அறிவாற்றலைக் கண்ட அடிகள் இவருக்குத் தாமே தமிழிலக்கண இலக்கியங்களைக் கற்பித்தார். வடமொழியும் கற்பித்தார். ஆங்கிலமும் அறிவித்தார்.*

*நீலாம்பிகையைச் சொற்பொழிவாற்றவும் பழக்கினார். அதனால் 11, 12, 13, -ம் அகவைகளில் நீலாம்பிகை சென்னையில் ஆண்டு விழாக்களில் நன்றாகப் பேசினார். பேச்சுக்களை அடிகள் கற்பித்தபடி விரிவுரையாற்றிச் சிறந்தார். அடிகட்கு அவர்பால் அளவிறந்த அன்புண்டு. பிற்காலத்தில் அம்பிகையார் 13 நூல்கள்*

---

* இவர் வரலாற்றை "நீலாம்பிகையம்மையார் வரலாறு" என்னும் நூலாக மறை திருநாவுக்கரசு 1945-லேயே எழுதியுள்ளார். கழகத்தில் அது கிடைக்கும் விலை. ரூ. 1.

எழுதினார். வித்யோதயா மகளிர் கல்லூரி, நார்த்விக் மகளிர் கல்லூரி (இப்போது உயர்நிலைப் பள்ளிகள்)களில் எட்டாண்டுகள் தமிழாசிரியையாகப் பணியாற்றினார்.

தம் தொண்டுகளுக்கு உயிராய் நின்றுதவிய திருவரங்கர்க்கு அடிகள் தம் செய்நன்றியறிதலின் அடையாளமாக நீலாம்பிகையை 1927-ல் திருமணம் செய்து கொடுத்தார்.

## தனித்தமிழ்த் தோற்றம்

1916. இப்போது நீலாம்பிகைக்கு ஆண்டு 13. ஒருநாள் மாலையில் தந்தையும், மகளும் தம் தோட்டத்தில் உலவிக் கொண்டிருக்கும்போது அடிகள் ராமலிங்க வள்ளலார் அருளிச்செய்த திருவருட்பா என்ற திருமுறையிலுள்ள

"பெற்ற தாய்தனை மகமறந்தாலும் பிள்ளையைப்
பெற்ற தாய் மறந்தாலும்
உற்றதேகத்தை உயிர் மறந்தாலும் உயிரை
மேவிய உடல் மறந்தாலும்
கற்ற நெஞ்சங்கலை மறந்தாலுங் கண்கள்நின்
றிமைப்பது மறந்தாலும்
நற்றவத் தவர் உள்ளிருந்தோங்கும் நமச்
சிவாயத்தை நான் மறவேனே"

என்ற பாட்டைப் பாடினர். அவ்வளவில் அடிகள் "நீலா! இப்பாட்டில் தேகம் என்ற வடசொல்லை நீக்கி அவ்விடத்தில் அதற்கு விடையாக 'யாக்கை' தமிழ்ச் சொல்லிருக்குமானால் செய்யுள் ஓசையின்பம் பின்னும் அழகாக இருக்கும்' பிறமொழிச் சொற்கள் கலப்பதால் தமிழ் தம் இனிமை குன்றுகின்றது. அத்துடன் நாளடைவில் தமிழில் கலந்த பிறமொழிச் சொற்கள் நிலைபெற்று அப்பிறமொழிச் சொற்களுக்கு நேரே வழங்கி வந்த நம்மருமைத் தமிழ்ச் சொற்கள் மறைந்துவிடுகின்றன. இவ்வாறே அயல்மொழிச் சொற்களை ஏராளமாக நம் மொழியில் கலந்து ஆண்டதால், நூற்றுக்கணக்கான வடசொற்களும், அயன்மொழிச் சொற்களும் தமிழில் கலந்தன. அதனால் நூற்றக்கணக்கான தமிழ்ச் சொற்கள் மறைந்தே போயின" என்று கூறினார்கள். அதுகேட்ட மகள்

1. சிந்தாமணி, 1918 இல் காலமானார். நீலாம்பிகை இவர் 5. 11-1945 -இல் காலமானார்.

தந்தையாரைப் பார்த்து "அப்படியானால் நாம் அயன்மொழிச் சொற்களை நீக்கித் தனித்தமிழிலேயே பேசுதல் வேண்டும். அதற்கான முயற்சினைக் கைவிடாது செய்தல் வேண்டும்" என்று ஆர்வமுடன் கூறினார். மகளின் அன்பும் அறிவுங்கலந்த வேண்டுகோளை ஏற்றுத் தந்தையார் சுவாமி வேதாசலம் என்ற தம் வடமொழிப் பெயரைத் தனித் தமிழில், மறைமலையடிகள் என்று மாற்றி வைத்துக் கொண்டார்.

## மறைமலையடிகள் ஆதல்

"ஞானசாகரம்" என்ற தம் திங்கள் வெளியீட்டிற்கு 'அறிவுக்கடல்' என்றும், 'சமரச சன்மார்க்க நிலையத்தைப் 'பொதுநிலைக் கழகம்' என்றும் பெயர் மாற்றம் செய்தார். தனித் தமிழார்வங்கொண்ட நீலாம்பிகையார் வாளா இருப்பாரோ? தம் தம்பியார் நால்வரில் திருநாவுக்கரசு தவிர வடமொழிப் பெயரமைந்த மூவருக்கு தனித்தமிழில் பெயரமைத்தார். திருஞான சம்பந்தத்திற்கு, 'அறிவுத் தொடர்பு' என்றும், தங்கை திரிபுர சுந்தரி'க்கு முந்நகரழகி என்றும் மொழி பெயர்த்துத் தனித்தமிழ்ப் பெயர் சூட்டினார். அப்பெயராலேயே உடன் பிறந்தாரை எப்போதும் அழைத்து வந்தார். எல்லாச் சொற்களையும் இவை தமிழா? அயன் மொழியா என்று தந்தையாரோடு சீர்தூக்கிப் பார்த்துச் சற்றும் வழுவாது தனித்தமிழ்ச் சொற்களாலேயே எப்போதும் பேசியும் எழுதியும் வந்தார். இதுவே இவர்க்கு ஆர்வமிகும் ஆராய்ச்சியாயிற்று. அதன் பயனாக இவர் முற்றிலும் தனித்தமிழ்ச் சொற்களாலாய 'தனித் தமிழ்க் கட்டுரை' என்ற நூலை 1925-ல் எழுதினார். தம் வாழ்க்கையின் இடைக்காலத்தும் இறுதிக் காலத்தும் தனித்தமிழில் பதின்மூன்று நூற்கள் எழுதியுள்ளார்.

## தனித்தமிழ் தோன்றியதேன்?

ஒரு மொழியில் பிறமொழிகள் எவ்வாறு கலக்கின்றன என்று பார்த்தால், பிறமொழியாளர்களுடன் பழகுவதனாலும், பிறமொழிகளைப் பயில்வதாலும் ஒரு மொழியில் பிறமொழிச் சொற்கள் கலக்கின்றன என்பதையறியலாம். இவ்வாறே கலத்தல் கடலில் காயம் கரைத்ததுபோல் எம்மொழிக்குத் தீங்கு செய்வதில்லை. தமிழில் நம்மையடுத்துள்ள தெலுங்கு,

மலையாளம். கன்னடம் ஆயமொழிச் சொற்கள் எவ்வளவு கலந்துள்ளன, மிகமிகக் குறைவே. இல்லை என்றுகூடச் சொல்லி விடலாம். அவ்வளவு குறைவு. ஆனால் அரசியல் பொது மொழியாக அல்லது ஆணைமொழியாக ஒரு மொழி பிறமொழிகளில் கலந்தால் அம்மொழி சொற்கள் ஏராளமாய் தாய்மொழிகளில் கலந்து விடுகின்றன. சான்றாகச் சில நூற்றாண்டுகட்கு முன் முகம்மதியர் ஆட்சியின் போது, அவர்கள் தம் தாய்மொழியாகத் தெய்வ மொழியாகப் போற்றிய அரபுச் சொற்களும், உருது இந்திச் சொற்களும் தமிழில் ஏராளமாய்க் கலந்தன. இது ஜமீன்தார், மிராசுதார், தாலுக்கா, ஜில்லா, முன்சீப் , ஜட்ஜ், கச்சேரி, அயன், ரயத்து, ஜமாபந்தி, அலமார், மேசை, .காடிகானா, நாஸ்த்தா, சலாம், அமீனா, ஜபர் தஸ்து, படே முதலிய ஏராளமான அரசியல் சொற்களும், ஏனைய சொற்களும் தமிழில் கலந்தன.

**பிறமொழிக் கலப்பால் தமிழ் கெடும்**

ஒரு மொழியிலுள்ள சிறந்த கருத்துக்களை நூல்களை ஏனைய மொழிகளாக்கிக் கொள்ளுதல் நல்லதும், தேவையுமாகும். அதற்காகத் தமிழில் சொற்களிருக்க அயல்மொழிச் சொற்களை மேற்காட்டியவாறு ஏற்பது - கலப்பது தமிழை அழிக்கவே செய்யும். தமிழ் ஒன்றே வடமொழிச் சொற்கலப்பால் மலையாளம், தெலுங்கு, கன்னடம், துளு என்றின்ன மொழிகளாய் வழங்கு கின்றன'' என்ற அறிஞர் அறிந்து கூறுகின்றனர். அதனை இந்நூலுள் சான்றுகளுடன் விளக்க இடமில்லை. வடமொழிக்கலப்பால் தமிழ்நாடும், மலையாள நாடு, ஆந்திர நாடு, கன்னட நாடெனப் பிரிந்து சுருங்கியது. அதுமட்டுமல்ல, மொழிபற்றிய இனவேற்றுமையும் பரவியது.

அரிய தமிழிலக்கியங்களைப் படித்துப் பயன்பெறத் தெலுங்கர் முதலியோரால் இயலாது போயிற்று. ஒற்றுமை உணர்வும் குறைந்தது. நாட்டாற்றலும் நலிந்தது. வேறு பிற துன்பங்களும் நேர்ந்துள்ளன. மலையாளம் முதலிய மொழிகளைப் போல் நாமும் தமிழில் மேற்காட்டியவாறு வரை துறையின்றிப் பிறமொழிகளைச் சேர்த்துப் பேசியும், எழுதியும் வந்தால் தமிழும் ஒரு நூற்றாண்டிற்குள் வேறு மொழியாய் விடுமே! பிறகு நாம்

யாவரும் தமிழிலக்கிய இன்பங்களை நுகர்ந்து இன்புற முடியுமா? நாட்டைப் பாதுகாக்கச் சட்ட திட்டங்கள் வேண்டும். இல்லாவிட்டால் நாட்டு மக்கள் துன்புற்று அழிவர் அதற்காகவே அரசியல் சட்டங்கள் அமைந்துள்ளன.

இது போலவே, மொழிவளரவும் பாதுகாப்பான சட்ட திட்டங்கள் வேண்டும். அதற்காகவே மொழி இலக்கணங்கள் தோன்றின நாகரிகமென்பதே பெற்ற அறிவாற்றல்களைப் பேணிப் பாதுகாக்கும் பழக்க வழக்கங்கள் தாமே. அவ்வாறின்றி, அன்று மொழிகளைத் தம் போக்கில் விட்டுவிட்டால் மொழியும், நாகரிகமும் ஏது? ஒரு மொழியில் சில ஆயிரம் சொற்கள் தாம் உள. அவற்றை விட்டு வேற்றுமொழிகளின் சொற்களில் ஓரிரு ஆயிரங்களைச் சேர்த்தால் அம்மொழியழித்தானே செய்யும்? மொழியழிவால் இனம், கலை, நாகரிகம், நாடு, ஒற்றுமையாவும் அழியும் என்பதனை சிறிது மேலே விளக்கினோம்.

தமிழில் மொழி பெயர்க்க வேண்டாது உலகம் முழுவதற்கும் பொதுச் சொற்களாயுள்ளவற்றை எம்மொழிகளும் ஏற்கலாம் தமிழும் ஏற்கலாம். இதனால் எம்மொழியும் அழியாது. ஆனால் வடமொழி கற்றார், திருமணம், சோறு, நீர், உறவினர், மூத்தவன் இளையவன் முதலிய தமிழ்ச் சொற்களை ஒதுக்கி விவாகம், சாதம் , ஜலம், பந்து ஜேஷ்டன், ரைஸ், வாட்டர், ரிலேஷன், எல்டஸ்ட்பாய், எங்கர்பாய் என்று ஆங்கிலச் சொற்களையும் நூற்றுக்கணக்கில், ஆயிரக்கணக்கில் தமிழில் கலந்து பேசுகின்றனர். இதனால் தமிழின் மொழித் தூய்மை கெடுமன்றோ! ''மொழியுமழியும் அன்றோ! இஃதுணர்ந்தே பாரதியார்,

''மேன்மைக்கலைகள்- தமிழிலில்லை
சொல்லவும் கூடுவதில்லை அதைச்
சொல்லுந்திறமை தமிழ் மொழிக்கில்லை-
மெல்லத் தமிழினிச் சாகும்- அந்த
மேற்கு மொழிகள் புவிமிசை ஓங்கும்
என்றந்தப் பேதை உரைத்தான்- ஆ!
இந்தவசை எனக்கெய்திடலாமோ
சென்றிடுவீர் எட்டுத் திக்குங் கலைச்
செல்வங்கள் யாவுங் கொணர்ந்திங்குச்
சேர்ப்பீர்.''

என்று அறிவுரை கூறியுள்ளார்.

## எதிர்ப்பும் வெற்றியும்

அடிகளும் அவர் மகளாரும் இவ்வாறு தனித்தமிழ் இயக்கக் கண்டது மட்டுமின்றி, அதனை வளர்க்கும் பணியிலும் முனையலானார்கள். அதன் விளைவாக அடிகள் தம் பெயரைத் தனித்தமிழில் மாற்றியமைத்துக் கொண்டதை முன்பே அறிந்தோம். நீலாம்பிகையால் ''தனித் தமிழ்க் கட்டுரைகள்'' என்ற நூல் இயற்றியதையும் அறிந்தோம்.

இம்முயற்சியினால் அடிகள் தாம் முன்பே எழுதி வெளியிட்ட நூல்களில் கலந்திருந்த ஏராளமான வடசொற்களை அவற்றிலிருந்து நீக்கி, அச்சொற்கள் இருந்த இடங்களில் அவற்றிற்கு நேரான இனிய பொருத்தமான தூய தனிச் தமிழ்ச் சொற்களை அமைத்தனர். அவைகளைத் தாங்கி மறுபதிப்பில் அந்நூல்கள் யாவும் தூய தனித்தமிழ் நூல்களாக வெளிவந்தன. அதன்பின் அடிகள் ஆக்கிய நூல்கள் யாவும் தனித்தமிழில் வெளிவந்தன.

அடிகளின் இத்தனித்தமிழ் அன்பினால்- முயற்சியினால், ''வடசொற்கள் கலவாத ஒரு நூல்தானும் தமிழில் உண்டா? எழுத முடியுமா? ''தனித்தமிழ் என்றால், தனித்து அமிழ், தனித்தமிழ் என்ற 'இரட்டுற மொழிதல் ' என்னும் 'சிலேடை' முறையால் தனித் தமிழை இகழ்ந்தார். கூற்றுகள் எல்லாம் தவிடு பொடியாயின. பிறமொழிச் சொற்கள் கலவாத தமிழ் இறந்துவிடும் . தனித் தமிழில் ஒரு நூலும் எழுத முடியாது என்பார் நையாண்டிகள் யாவும் மறைந்தன. வடமொழி கலவாத நூல் ஒன்றேயாயினும் தனித் தமிழுண்டோ என்று கூறிய 'இலக்கண விளக்கம்' ஆசிரியர் சாமிநாத தேசிகர் காலந்தொட்டு - முந்நூறு நானூறு. ஆண்டுகளாகத் தமிழ் மொழிக்கு இழுக்காக வழங்கி வந்த பழமொழியும் மாய்ந்தது; இன்றோ( 1956) தனித்தமிழில் நூற்றுக்கணக்கான நூல்கள் வெளி வந்துவிட்டன.

பிறமொழிக் கருத்துக்களை - நூல்களைத் தமிழில் கொண்டு வருவதனால் - மொழி பெயர்ப்பதனால் தமிழ் மேலும் வளமுடை. ய மொழியாகும் என்பதில் ஐயமில்லை. அதனை விடுத்து ஆயிரக்கணக்கான பிறமொழிச் சொற்களை மட்டும் புகுத்துவதனால் தமிழ் எங்ஙனம் வளர்ச்சியடையும்? அவ்வாறு புகுத்தப்படும் பிறமொழிச் சொற்களுக்கு நேராக வழங்கி வந்த செந்தமிழ்ச்

சொற்களான்றோ வழக்கில் இருக்கும்? தமிழ்ச் சொற்களாம் உறுப்புக்கள் யாவும் ஒழிந்து விட்டால் தமிழ் என்ற உடல் ஏது? உயிரேது? 100க்கு 50 பிறமொழிச் சொற்கள் கலந்தால் கூடத் தமிழ் தன்னிலை கெட்டழியுமே! கைப்புண்ணுக்குக் கண்ணாடியா? என்னும் பொன்மொழி பொய்யாதல்லவா? தனித் தமிழை எதிர்த்தவர்கள் இன்று, அதன் வளர்ச்சியையும், அதன்பால் தமிழ்ப் பெருமக்கள் கொண்டுள்ள உணர்ச்சியுடன் கூடிய ஆர்வத்தையும் கண்டு தம் எதிர்ப்பைக் கைவிட்டுள்ளனர்.

தனித்தமிழ்ச் சுவையானது, தன்னைக் கற்றயாரது உள்ளத்தைக் கவர்ந்து விடுவதனால் அதனை எதிர்ப்பவர்களும் தம்மையும் அறியாமலே இன்று; நல்ல தமிழ்' என்னும் தனித் தமிழிலேயே பெரும்பாலும் எழுதியும், 'பேசியும் வருவது யாவரும் அறிந்த செய்தியாகும். அரசியல் மேடைகளிலும், அரசியல் தாள்களிலும், பேசும்படங்களிலும், நாடகங்களிலும் 100க்கு 90 தனித்தமிழ்ச் சொற்களை கையாளப்படுகின்றன, ஆட்சி புரிகின்றன. ஆட்சி மொழியிலும் சிறிது எட்டிப் பார்க்கின்றது. தனித் தமிழ் ஆர்வமானது. வீழ்ந்து பட்டதும், புதியதுமான ஆண்டு. திங்கள், திருமணம், அழைப்பு, விழா, பதிப்பகம், அரசியல், நாடு, எழுத்தாளர், ஆணையாளர், நகராட்சி, ஊராட்சி முதலிய நூற்றுக்கணக்கானத் தனித்தமிழ்ச் சொற்களை மீண்டும் வழக்கில் கொண்டு வந்துவிட்டது. பல தனித் தமிழ்ச் சொற்கள் உண்டு பண்ணவும் படுகின்றன. இன்றைக்குப் புலவர்களில் 100க்கு 99 பேர் தனித்தமிழையே ஆர்வமுடன் போற்றுகின்றனர். தனித் தமிழ் வாழ்க! வெல்க! அதனைத் தோற்றுவித்து நாட்டி வளர்த்த மறைமலை அடிகள் குறிக்கோள் வாழ்க! நீலாம்பிகையார் ஆர்வமுயற்சி வாழ்க!

## காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத் குருவின் பாராட்டு

காஞ்சி காமகோடி பீடாதிபதியாய் விளக்கும் தெய்வத் திரு. சங்கராச்சாரிய அடிகள். வடமொழி வேதங்களை யொப்பத் தமிழ் மறைகளைப் போற்றும் தூய மனத்தினர்.

இப் பெருந்தகையார், அடிகள் யாத்த வடமொழிச் சகுந்தல மொழி பெயர்ப்பைச் சுவைத் தின்புற்றார். சிலர் பலர் அந்நூலுக்கு முன்னமேயே மொழி பெயர்ப்புச் செய்துள்ளனர். அவர் தம்

பெயர்ப்புகளைவிட அடிகளுடையதே சிறந்த தாம் எனப் பாராட்டும் ஆச்சாரிய அடிகள், அதனை மாணவர் உலகம் கற்றுப் பயனடைய விரும்பினர். அதனால், அடிகள் யாத்த அம்மொழி பெயர்ப்பினைக் கற்றுச் சிறந்த முறையில் அது பற்றிக் கட்டுரை வரையும் மாணவர்க்கு ஆயிரம் ரூபாய் பரிசமைத்துள்ளார். அப்பரிசு ஆண்டுதோறும் வழங்கப்பட்டு வருகின்றது.

இவ்வேற்பாட்டால், அடிகளின் வடமொழிப் புலமையும், அம்மொழியினைப் போற்றும் ஆர்வமும் விளங்குகின்றதன்றே; ஆதலால், அடிகளின் தமிழ்க்கோட்பாட்டை விரும்பாதவர்கள் அடிகளை 'வடமொழி எதிர்ப்பாளர்' என்றல் அடாது என் பது நன்கு விளங்கும்.

இவ்வாறே, அடிகள் ஆங்கிலத்தினின்றும் ஒரு நூலை (சித்தானக் கட்டுரைகள்) மிக அழகொழுக மொழி பொருள்கள் நிறைந்த அரிய நூல்கள் மூன்றும் ஆக்கியுள்ளார். முப்பதினாயிரம் ரூபா பெறுமான பல்துறை பற்றிய ஆங்கிலப் பெருநூல்களை அடிகள் வாங்கிப் பயின்றவர். ஆங்கிலப் புலமையிலும் விஞ்சியவர். ஆயினும் தனித்தமிழ்க் கோட்பாட்டில் தலை நின்றார்; இதுகொண்டு அடிகளை "ஆங்கில எதிர்ப்பாளர்" என்றால் பொருந்தாதன்றே?

**யாழ்ப்பாண வரவேற்பு**

செந்தமிழ்த்தாய் செம்மாந்து களிநடம் பயிலும் பொழில் யாழ்ப்பாணமாகும். அவள் தனக்குப் புலமை வழிபாடாற்றும் மாபெரும் புலவர்கள் என்றுமுள்ள நாடது அந்நாட்டுப் புலவர்களால் பாராட்டப் பெற்றவரே புலமைத்" தலைக்கோற்" பட்டம் பெறுத் தகுதியுடையவராவர் என்பது தமிழ்ப் புலமை உலகத்தின் கருத்தாகும்.

அத்தேயத்து அறிவான் மிக்க புலவர்கள்- அறிஞர்கள்- சான்றோர்கள் அடிகள் நூல்களைப் பயின்றனர். ஆரா இன்பங் கண்டனர் அவ்வின்பப் பேற்றை வழங்கிய அடிகளைப் பொன்னாற் போற்றி யாழ்ப்பாணத்தார் வருக! வருக! என்றும் பெரிதும் விரும்பி அழைப்பாராயினர்.

அதனால் அடிகள் 1921 மார்கழித் திங்கள் இறுதியில் யாழ்ப்பாணம் சேர்ந்தனர். யானும் உடன் சென்றேன். அப்போதென்

ஆண்டு 14. 'யாழ் நூல்' ஆசிரியர் அருந்தமிழின் பெரும்புலவர் இருவகைத்துறவும் ஒருங்குடன்பூண்ட அந்தணாளர் - பல்கலையும் நிறைவுற்ற தகைசால் ஆசான் சுவாமி விபுலானந்தர், அடிகளை வரவேற்றும், தம்மாளிகையில் அமர்வித்தும் அருமையுடன் போற்றினார்.

அடிகளை அன்று யாழ் நாட்டில் வாழ்ந்த பல துறைகளிலும் பெருந்தலைவர்களாக உள்ளார், அனைவரும், சிவநேயச் செல்வர்களும், செந்தமிழன்பர்களும், புலவர் பெருமக்களும் ஒருங்கு திரண்டு பேரன்புடன் வரவேற்றனர். வீதிகளை மலர்களாலும், தோரணங்களாலும் அணி செய்தனர். மேள தாளங்களுடன் அடிகட்குச் சிறந்த ஊர்வலங்கள் நடத்தினர். வீடுகள்தோறும் நிறைகுடம் தீபம் தூபம் வைத்து வழிபட்டனர். அடிகள் திருவடி படுமிடங்களில் எல்லாம் பட்டை விரித்தனர். கண்டவர்களெல்லாரும் தலைமேற்கை குவித்தும், கீழ்வீழ்ந்தும் வணக்கம் செய்தனர். பலர் பேரன்பால் அடிகள்முன் கண்ணீர் சொரிந்தனர். நாடோறும் இவ்வரிய காட்சிகள் யாழ்ப்பாணத்தின் பல விடங்களிலும் நடைபெற்றன. மன்னர்க்குகூட இத்துணைச் சிறப்புக்களை யாழ்ப்பாணர் செய்வாரோ என்றையுறுமாறு அடிகட்கு அத்துணைச் சிறப்புக்கள் செய்தனர்.

அன்றைய அடிகளின் தோற்றப் பொலிவும், பேச்சின் சிறப்பும் முவுலகிலும் அரியதென்றே அறிந்தார் உறுதி கூறுவர். அடிகளின் தனிப் பேருரைகள் எட்டு இடங்களில் நடைபெற்றன. நூற்றுக் கணக்கானவர்கள் குழுமிக் கேட்டு அமுதுண்ட தேவர்களாயினர். 20 நாட்களுக்கு மேலும் அடிகள் அங்கிருந்தனர். பகலெல்லாம் அவர்களைக் கண்டளவளாவி இன்புற்றனர் யாழ்நாட்டு புலவர்கள், அறிஞர்கள். இக்காணரிய காட்சிகளைக் கண்டு சிறுவனாகிய நான் கொண்ட மகிழ்ச்சி அளவிடலரியது. எந்தையார்க்கு நடக்கும் சிறப்புக்கள் எனக்கும் நடப்பது போற்றானே!

### தமிழர் நாகரிகக் கிளர்ச்சி

யாழ்ப்பாணத்தினின்றும் சீரும் சிறப்புடன் மீண்ட அடிகட்கு வேறோர் அரும்பணி ஆற்றும் வாய்ப்புக் கிட்டியது. 1920-ஐஅடுத்த முன்பின் ஆண்டுகளில், சிலர், ஆங்கிலச் செய்தித்தாள்களிலும், தமது வெளியீடுகளிலும், நூல்களிலும் "ஆரியர் நாகரிகமே சிறந்தது,

தமிழர் நாகரிகம் ஆரியடமிருந்து பெற்றதே'' என்றெல்லாம் எழுதியும் பேசியும் வந்தனர். அதனால் வீறு கொண்ட அடிகள் சென்னையில் பலவிடங்களிலும் பண்டைத் தமிழர் நாகரிகம் பற்றிப் பல சிறந்த சொற்பொழிவுகளை நிகழ்த்தினர். அவற்றில், 'ஆரியர் இவ்விந்திய தேசத்தில் நுழைவதற்கு முன்னரே தமிழ் நன் மக்கள் மிகச் சிறந்த நாகரீகமுடையவர்களாக வாழ்ந்தனர், என்பதற்கு மறுக்கவியலாத வரலாற்றுச் சான்றுகளையும் எடுத்துக் கேளாரும் வேட்ப மொழிந்தார்கள். இதனான் அடிகளின் மான உணர்ச்சி நன்கறியக் கிடக்கின்றதன்றோ?

## ஆங்கிலச் சொற்பொழிவுகள்

1922-ல் சென்னையில், அடிகள், சென்னை மாகாணக் கல்லூரி, திருவல்லிக்கேணி, தியாசபிகல் லாட்ஜ், சச்சிதானந்த சங்கத்தில் நடைபெற்ற உலக மத மகாநாடு முதலிய 6 கூட்டங்களில் ஆங்கிலத்தில் ''சைவ சித்தாந்தத்தின் பகுத்தறிவுக்கான உண்மைக் கொள்கைகள்'', ''சைவ சித்தாந்தமும் கடவுளிலக்கணமும்'', ''சைவ சித்தாந்தம்'' முதலியனபற்றி அரிய பெரிய சொற்பொழிவுகளை நிகழ்த்தினர். அச்சொற்பொழிவுகளில் சில எழுதிப் படிக்கப் பட்டன. அடிகளின் ஆங்கில விரிவுரைகள் ஆங்கிலருடைய பேச்சுப் போன்று ஒலிக்கும். அறிவுடையார் எல்லாம் உடையார்ன்றோ? இப்பேருரைகளால் ஆங்கில அறிஞர் பலர், அடிகள்பால் அன்பும் மதிப்பும்.கொண்டனர். அடிகள் சென்னையிலாற்றிய சொற் பொழிவுகட்குக் காணிக்கை ஒன்றும் பெற விரும்பியதில்லை.

1920-க்குப் பிறகு பல்லாவரத்தில் அடிகள் தம் மாளிகையில் அமர்ந்து அமைதியுடன் நூலாராய்ச்சி, நூலெழுதல், வெளியிடல் முதலிய பணிகளை அச்சகம் அமைத்த நாள் முதலாக மும்முரமாகச் செய்துகொண்டிருந்தராயினும் அண்மையிலுள்ள சென்னை நகரத்துப் பலவகையான கலைக்கழகங்களும் அடிகளை வருந்தி அழைத்து உரையாற்ற வேண்டியபடியே இருக்கும்.

அடிகளும் தாம் நாட்டுக்காற்ற வேண்டிய கடமைகளில் கனிந்த கருத்துடையவர்களாய் அவ்வப்போது சென்னை நகர் சென்று அரிய சொற்பெருக்குகளை நிகழ்த்துவாராயினர். அவ்வகையில் அடிகள் உணர்ச்சியுடன் சென்று தலைவராயிருந்து உரையாற்றிய சங்கங்களில் சில வருமாறு:- ஜீவகாருண்ய சங்கம்,

அன்னதான சமாஜம், சைவ சித்தாந்த மகா சமாஜம், புலால் மறுத்தல் சங்கம், விஜிடேரியன் லீக், மருத்துவர் சங்கம், மாதர்சங்கம், தமிழர்சங்கம், திருக்குறள் கழகம், முதலியனவாகும்; உயர்நிலைப் பள்ளிகளும் கல்லூரிகளுமுண்டு. அடிகள், மாதர் மறுமணத்தைப் போற்றியும், மாதர் கைம்மை மணத்தை ஒப்பியும் தீண்டாமையை மறுத்தும் சாதிவேறுபாடுகளைக் கடிந்தும், எல்லா இனத்தவரும், மதத்தவரும் ஒருங்கிருந்து உணவருந்தலை வரவேற்றும், கலப்பு மணத்தை ஏற்றும் சென்னை, *பரங்கிமலை, *சைதாப்பேட்டை முதலியவிடங்களில் பேசினர்.

தமது நூல்களிலும், வெளியீடுகளிலும் இவற்றின் நலன்களை விளக்கினர். பேச்சிலும், எழுத்திலும், அன்றித் தம் வாழ்க்கையிலும் இவற்றில் நேர்ந்தவற்றை ஆர்வமுடன் செய்தும் காட்டினர். இவற்றால் அடிகளின் அருள் உள்ளம் கவைக்குதவாத வெறும் வறட்டுப் புலமையாக மட்டும் இருக்கவில்லை என்பதும், தன்னலம் கருதியதன்றென்பதும், பொது நலன்களுக்காகக் காலத்தை ஒட்டிய சீர்திருத்தங்களில் தமது கடமையாற்றும் நடைமுறைக்கொத்தது என்பதும் நன்கு விளங்காநிற்கும். ஒல்லும் வகையான் இங்ஙனம் ஓவாதே அறவினைகளை யாற்றிய அடிகளின் அரிய பண்பின் திறம் யாவரும் கடைபிடித்தற்குரியதாகும். அதனால் நாடு நலமடையும்.

## நாட்டு விடுதலையில் நாட்டம்

1920 முதல் பாரதம் விடுதலை பெற்ற வரையில் (1947) காந்தியடிகளின் உரிமைப் போராட்டம் காட்டுத்தீயென நாடெங்கும் பரவிநின்றது எங்கும் "சுதந்தரம்" என்பதே பேச்சும், போராட்டமும் வெள்ளையராட்சியை எதிர்த்துச் சுதந்திர உணர்வு முறுகிநின்ற அக்காலத்தின் தொடக்க நாட்களில் அடிகள் நாட்டு விடுதலையில் அளவிலா ஆர்வம் கொண்டு ஒத்துழையாமை இயக்கத்தை வாழ்த்தினார். "வந்தே மாதரம்" என்று முடியும் செந்தமிழ் பாக்களை யாத்தார். காந்தியடிகளைப் போற்றிப் புகழ்ந்தார். திலகரைக் கொண்டாடினார். இந்திய விடுதலை என்று வருமோ என ஏங்கினார்.

---

*இந்நகர்கள் சென்னையை ஒட்டியுள்ளவை.

இடையில் சில பல நிகழ்ச்சிகளால் நாட்டு விடுதலையில் அவர்கள் ஆர்வம் குறைந்தது. எனினும், உள்ளது சிறக்குமன்றோ? 1947 ல் பாரதம் உரிமை பெற்றபோது உவகையோடு அதனை வாழ்த்திப் பழமைபோல் நாட்டுப்பற்றில் சிறந்தவராய்விட்டார்.

## நாட்டொற்றுமையில் நம்பிக்கை

அடிகள், சிறப்பு முறையில் தமிழ்நாட்டுச் சைவத் துறவியாயினும் பொதுமுறையில் தம்மையவர் ஒரிந்து சமயத் துறவியாகவே கருதியவர். அதனால் அவர் இந்தியாவைத் தெய்வமாகவே வழிபட்டார். அவர்தம் வடநாட்டு யாத்திரை என்ற பகுதியில் இதுபற்றி விளக்கமாகக் கண்டோமல்லவா? இவற்றால் அடிகள், திராவிட நாட்டுப் பிரிவினையையோ தமிழ்நாட்டுப் பிரிவினையையோ ஒப்பவில்லை. எதிர்த்தார்; இந்திய ஒருமையேற்றால் தமிழ்நாட்டு நல்வாழ்வும், சமய, கலை, பண்பாடு, நாகரிகம் பாதுகாக்கப்படும் என்றவர் உறுதியாக இருந்தார். "இந்தியாவே திராவிட நாடு" என்பதுவர் கொள்கை.

## தமிழ் - சைவ சமய விழாக்களின் தலைவர்

1924 முதல் 1950 வரை அடிகள் தமிழகத்தின் தலைநகரிலும், சில்லாக்களின் தலைநகர்களிலும், பேரூர்களிலும் நடைபெற்ற தமிழ்ச் சங்க விழாக்கள் பலவற்றிலும், சைவ சமய விழாக்கள், மாநாடுகள் பலவற்றிலும் வேறு கலைவிழாக்கள் சிலவற்றிலும் தலைமை தாங்கியுள்ளார்கள்.

இப்பெரு விழாக்கள் இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஆறு நாட்களும் நடைபெறுதலுமுண்டு. மக்கள் ஆயிரக்கணக்கில் கூடுவர். அதுவும் அடிகள் தலைமை என்றால், இருபதாம் நூற்றாண்டின் மாபெரும் புலவர்களும், அறிஞர்களும் அடிகள் தலைமையில் பேசி அவர் பாராட்டைப் பெறப்பெரிதும் விரும்புவர். 'ஒரு நகரில் ஒரு விழாவில் அடிகள் தலைமை தாங்குகின்றார்கள்' என்றால் அதனைச் சூழ்ந்துள்ள ஏறத்தாழ மூன்று நான்கு சிற்றூர்களிலிருந்தும் கேள்விச் செல்வர்கள் கூடுவர்.

விழாக்களில் தலைமை தாங்குவதில் சிறப்புடைய தலைவர் பலருளர். ஆனால், அடிகள் தலைமை தாங்குவதாலேயே விழாக்களும், மாநாடுகளும் சிறப்படைந்தன என்பதுமிகையன்று.

அன்றியும் அடிகள் தலைமை என்றால் விழா நடத்துவோர் அடிகட்குக் காணிக்கை 300, 400 என்று முன்பணமாகக் கொடுத்துவிடல் வேண்டும். தவிரவும், அவர்கள் உயர் வகுப்பில் தம் ஊழியர்களுடன் பயணம் செய்யவும் விழா நடக்கும் நகர்களில் அடிகள் தங்கத் தனி மாளிகையும், சிறந்த உணவமைப்புகளும், வசதிகளும் அமைக்கவும் வேண்டும். விழா ஏற்பாடுகள் சிறப்பாக விளங்குதல் வேண்டும்.

ஆனால், விழா நடத்துவோருக்கு இவைகட்காகப் பொருள் கிடைப்பதில் தொல்லையே இராது. அடிகள் தலைவரென்றால் விழாவுக்கான நன்கொடைகள் ஏராளமாக- விரைவில் கிடைத்துவிடும். ஒப்பற்ற தலைவர் வரும்போது பணம் அதற்குத் தொண்டு செய்ய முந்துவது இயல்புதானே'

இவ்வாறு நடைபெற்ற சிறப்புமிக்க விழாக்களில், கோயம்புத்தூரிலுள்ள பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் மடத்துச் சன்மார்க்க சங்கவிழா, தஞ்சாவூர் கரந்தை தமிழ்ச் சங்கவிழா, திருச்சராப்பள்ளி சைவ சித்தாந்த சபை விழா, செலம் வைபந்தமிழ்க்கழக விழா, திருப்பாதிரிப் புலியூர் சைவர் மாநாடு திருநெல்வேலி தமிழ்ப்புலவர் மாநாடு, தென்காசி திருவள்ளுவர் கழக விழா, பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்க விழா, தூத்துக்குடி சைவ சித்தாந்த சங்க விழா, நாகப்பட்டினம் சைவ சித்தாந்த சபை விழா, காஞ்சிபுரம் மெய்கண்டார் கழக விழா, சென்னை திருவள்ளுவர் திருநாள் விழா, பல்லாவரம் பொது நிலைக்கழக விழா முதலியன குறிப்பிடத்தகும் பெருங் கூட்டங்களாகும்.

இக்கூட்டங்களில் பேசிய பெரும் புலவர்த் தலைவர்களில் குறிப்பிடத்தக்கோராவர்:- கா. சுப்பிரமணிய பிள்ளை, பா. வே. மாணிக்கநாயகர், பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார், ந. மு. வேங்கடசாமி நாட்டார், ரா. பி. சேதுப்பிள்ளை, கா. நமச்சிவாய முதலியார், திரு. வி. க., சு. சோமசுந்தர பாரதியார், அ. மு. சரவண முதலியார், பு. எல். கந்தசாமி முதலியார், டி. கே. சுப்பிரமணிய முதலியார், ( சம்பந்த சாமியார் [illegible] தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, க. சச்சிதானந்தம் பிள்ளை, ஔவை துரைசாமி பிள்ளை, முத்து. சு. மாணிக்கவாசக முதலியார், அ. வரதநஞ்சைய பிள்ளை, அ. கந்தசாமிப் பிள்ளை.

க. வச்சிரவேல் முதலியார், டாக்டர். மா. ராஜமாணிக்கம், டாக்டர். அ. சிதம்பரநாதன் செட்டியார், டாக்டர் மு. வரதராசனார்.

பேசப்பட்ட பொருள்களோ தமிழிலக்கிய ஆராய்ச்சிகள், சமய நூல்களாராய்ச்சி முதலிய வாழ்விற்கான பல்துறைப் பொருள்களாம். அடிகளின் தலைமைப் பேருரைகள், முன்னுரைகள், முடிவுரைகள், தனிச் சொற்பொழிவுகளின் சிறப்புக்களையும், நுண்ணிய ஆய்வுரைகளையும் , பேசும் இனிமை ஆற்றல்களையும் எடுத்தியம்பப் புகின் அஃதோர் தனி நூலாகிவிடும்.

**புரட்சி மாநாடுகள்**

அடிகளின் தலைமைக் காலம் 1924 முதல் அவர்கள் மறைந்த 1959 வரையிலாகுமென்று மேலே கூறினேன். இதே காலத்தில் தமிழகத்தில் பெருங்கருத்துப் புரட்சிகள் நடைபெறலாயின. அவையாவன:- சமயச் சடங்குகளையும் , கோயிற்பூசை முதலிய வழிபாடுகளையும் தமிழ் மக்களின் திருமணம், இழவு முதலிய வாழ்க்கைச்சடங்குகளையும் பிறமொழிகளில் நடத்துவதை விட்டுத் தாய் மொழியாம் தமிழ்மொழியில் அறிவுக்கொத்த முறையில் நடத்தல், தமிழர்கட்கு உரிமையான சமயம் இன்னதென வரையறுத்தல், இச்சடங்குகளை நடத்தி வைக்கக் குருமார்களாகக் குறிப்பிட்ட சாதியினருக்கு மட்டும் உரிமையாயிருந்ததை மறுத்துத் தகுதியுடையார் எவரும் குருமாராகலாம் எனக் கருத்தறிவித்தல், இந்தியை எதிர்த்தல் என்பனவாம். இவைபற்றிய மாபெரும் மாநாடுகள் சென்னையில் நடைபெற்றன. அவற்றிற்கெல்லாம் அடிகள் ஒருவரே தலைவராகத் தலைவர்களாலும் அன்பர்களாலும் ஒரு முகமாகத் தேர்ந்தெடுதக்கபட்டார்.

முதன்மைத் தன்மையான கூட்டங்கட்கு முதன்மைத் தலைமையுடை ய தக்கார் தாமே தலைவராக்கப்படுவர். அத்தகுதி அடிகட்குத் தவிர, அவர் காலத்தில் வேறு யாருக்கும் அமையவில்லை. இக்கருத்துப்புரட்சி கூட்டங்களில் சீர்திருத்த மாநாடுகளில் பேசிய தலைவர்களில் முற்குறித்தார் தவிர ஏனையோராவர். ம. பொ. சி., ஈ. வெ.ரா., அண்ணாத்துரை, கி.ஆ.பெ. விசுவநாதம், ஏ. ராமசாமி முதலியார், ராஜா. சர். முத்தையாச் செட்டியார், ப. ஜீவானந்தம் அ. திருவாசகமணி.

கே. எம். பாலசுப்பிரமணியம். டி. கே. சண்முகம். இங்கும் மேலும், குறிப்பிட்ட அத்துணைத் தலைவர்களும் அடிகள் தலைமையில் பேசியவர்களேயன்றி அடிகள் இவர்களில் எவர் தலைமையிலும் பேசியதில்லை. பேச அழைக்கப்படவுமில்லை.

## தலைவர்க்குத் தலைவர்

மேற்கூறியவற்றால் அடிகள் இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற தலைவர் என்பதைத் தமிழகத்துச் சான்றோர்களே நிறுவியுள்ளனர் என்பதை நன்குணரலாமன்றோ? இதனாற்றான் திரு. வி. க. அவர்கள் "அடிகளே தென்னாடு தென்னாடே அடிகள்" என்று போற்றினர்.

சென்ற அரை நூற்றாண்டில் தமிழ்நாட்டில் நடைபெற்ற மாந்தர்க்கான பல்வகைச் சீர்திருத்தங்கள் பற்றிய முடிவுகட்கும் அடிகளின் உடன்பாடே சட்டமெனக் கொள்ளப்பட்டது எனின், அடிகளின் இணையிலாத் தனித் தலைமைக்கு வேறு சான்று வேண்டாமன்றோ? அடிகளின் ஆழ்ந்த -பரந்த புலமையும், ஆங்கில வடமொழி ஆராய்ச்சிகளும், விழுமிய நூல்களும், ஆன்ற தோற்றமும், இணையற்ற இனிய நாவலமும், உயர்ந்த பண்புகளும், சீரிய குறிக்கோள்களும், அப்படி அவரை ஒப்பிலாத் தலைவராக்கவிட்டன.

## அடிகளின் அருட் பண்புகள்

அடிகள், ஏழை எளியவர்களிடத்தில் மிகவும் கனிந்த உள்ளமுடையவர்கள். அதனால் கூலி ஆட்களுக்கு மற்றவர் நான்கணா தந்தால் இவர்கள் எட்டணா கொடுப்பார்கள் "இவ்வாறு மிகுதியாகக் கொடுப்பது பொருந்தாது" என அருகிருப்பார் உரைத்தால், அடிகள், ஏழை, எளியவர்கட்குச் சற்று மிகுதியாகக் கொடுப்பதால் அவர்கள் சிறிதே நன்மையடைவர். உழைப்பாளிகளாகிய அவர்களைப் போற்றிப் பாதுகாத்தல் நம் கடன் திருமணம் முதலிய ஆரவாரங்கட்கு ஏராளமாகச் செலவழிப்பவர்கள் எளியவர்க்குச் சிறிதுகூடக் கொடுக்காவிட்டால் ஏழையர் துன்பமின்றி எங்ஙனம் வாழ்தல் கூடும்? அன்பும், அருளும் இல்லாது செல்வத்தைக் குவித்துவைப்பதால் யாது பயன்" என்று இடித்துரைப்பார்.

ஐயம் எடுப்பார் எத்துணையவர் வரினும் மனங்கோணாது யாவர்க்கும் ½ ஆழாக்கு அரிசி இடச் செய்வர். அதற்காக அரிசி வாங்கி தனியே மாளிகையின் முன் கூடத்தில் ஒரு பானையில் கொட்டி வைக்கப்பட்டிருக்கும். அடிகள் வீட்டினின்றும் வெளியே புறப்பட்டால் கேட்பவர் அனைவருக்கும் அரையணாவுக்குக் குறையாமல் ஐயமிடுவார்.

1947 முதல் ஏழு அல்லது எட்டு ஆண்டுகள் தமிழ்நாட்டில் மழையின்மையால் நேர்ந்த கறுப்பின் (பஞ்சம்) போது அடிகள் நாடோறும் ஏழைகட்குக் கஞ்சி காய்ச்சி ஊற்றினர். அடிகளைவிடப் பன்மடங்கு செல்வத்தில் சிறந்தாரும் இங்ஙனம் ஈரநெஞ்சங் கொண்டு அறம் புரிந்தாரல்லர். அக்காலத்தில் அடிகட்கு வருவாய்க் குறைவுமிகுதியாயிருந்தது.

உழைப்பாளிகளும் மக்களே ஆதலின் அவர்களை 'அடா' என்றழையாது அன்புடன் பெயர் சொல்லி அழைப்பார். சமத்துவமாகவே - மதிப்பாகவே அவர்களை, நடத்துவர். தம் திருவடிகளின் வீழ்ந்து வணங்குதலை அடிகள் தடுத்தே வந்தார். மனிதனுக்கு மனிதன் அடிமையாய் நடத்தல் கூடாதென்பர். அதனால், இழுவை (ரிக்ஷா) வண்டியில் ஏறுவதில்லை. தம்மைகாண வரவார் அனைவருக்கும் சம இருக்கை தருவார். யாரையும் தரையிலமர விடமாட்டார்.

சிற்றுயிர்களிடத்து அடிகள் மிகவும் பரிவுடையர். கழுதை. ஒன்று ரயிலில் அடிபட்டுக் கிடந்தது. அஃது இறக்கும் வரையில்- (இரண்டு நாட்கள்) அதற்கு நீரும், புல்லும் கொடுக்கச் செய்தார். ஒருமுறை அவர் தம் சிறுவர்கள் ஓர் அணிலின் கழுத்தில் சுருக்கிட்டுப் பிடித்து விட்டனர். அதனால், அணில் உயிர் துறக்கும் வகையில் துடித்துக் கொண்டிருந்தது. அஃதறிந்த அடிகள் அதன் கழுத்திலுள்ள சுருக்கை நீக்கி அதனைக் காக்க வேண்டுமென்று பதறினார். அப்போதவர்கள் ஓர் ஆண்டு விழாவிற்குத் தலைமை தாங்கப் புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள். அழைத்துச் செல்ல அன்பர்கள் கார் வண்டியுடன் காத்திருந்தார்கள். விழாவுக்கான நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது.

ஆனால், அடிகளோ அதைப்பற்றிக் கவலைப்படவில்லை. அவர்கள் ஆர்வமெல்லாம் அணிலைப் பாதுகாப்பது. அதனைக்

காக்காவிடின் விழாவுக்குச் செல்லேன் என்று சிறப்பு ஆடைகளையும் கழற்றத் தொடங்கி விட்டார். உடனே சுருக்கு அவிழ்க்கப்பட்டது. சோர்ந்து கிடந்த அணில் மீது நீர் தெளிக்கப்பட்டது. சில கணங்களில் அது பிழைத்தெழுத்து மரத்திலேறியது. அடிகள் மகிழ்ந்து ஆண்டு விழாவிற்குச் சென்றார். இதனால் அடிகள் சிற்றுயிர்பால் கொண்ட பரிவு இனைத்தென அறியலாகின்றதன்றோ?

குடும்பத்தில் எவர்க்கேனும் நோய் வந்து விட்டால் நோயர் படும் துன்பத்தைக் காட்டிலும் அடிகள்படும் துன்பம் சொல்லி முடியாது. நோயாளியை அடிக்கடி உன்னிப்பார். அவர்க்கான மருந்து, உணவு முதலியவற்றில் கருத்தூன்றியிருப்பார். மருந்தாலும், உணவாலும் நோயாளிக்கு ஏற்படும் நிலைகளை ஆராய்ந்து கொண்டே இருப்பார். நோய் மிகுந்தால் தம் படிப்பு ஆராய்ச்சிகளைக் கைவிட்டு நோயாளியின் பக்கத்திலேயே அமர்ந்து கொண்டும், உலவிக் கொண்டும் நோய் நீக்கத்திற்குரிய ஆராய்ச்சியையும் செயல்களையும் செய்து கொண்டே இருப்பர்.

நோயாளி துன்பத்தால் வருந்தினால் தாம் துறவி - புகழ் மிகு பெரும் புலவர் என்பதையும் மறந்து சிறு பிள்ளை போல் கண்ணீர் பெருக்கி அழுவார்; புலம்புவார். நோயாளியைத் தேற்றுவதைவிட அவரைத் தேற்றல் கடினமானது. அவ்வளவு குழந்தை உள்ள முடையவர்.

## பெருமுயற்சியாளர்

அடிகள் கடிகாரம் போன்று தாம் வகுத்துக் கொண்ட நிகழ்ச்சிகளின் படி தம் செயல்களையாற்றுவர். அவர் விரும்புவது முயற்சி. காலை 8 மணிக்கு எழுவர் இரவு 2 மணிக்கு உறங்கச் செல்வர். பிற்பகல் 3 ½ முதல் 4½ வரை சிறிதே அயர்வர். ஏனைய நேரங்களில் எல்லாம் உடலோம்பல், நூலாராய்தல், எழுதல் , நூலைப் பதிப்பித்தல், விற்றல், குடும்ப வரவு - செலவு குறித்தல், வேண்டும் பொருள்களை வாங்கல், அவற்றைக் காத்தல். செலவிடல் வழிபாடுசெய்தல் வருவாரோடு அளவளாதல், முதலிய கடமைகளை முயற்சியுடன் ஆர்வத்துடன் நிகழ்த்திக் கொண்டிருப்பர்.

நன்னம்பிக்கை மிக உடையராதலாலே தாம் விரும்பும் பணிகளைப் பிறர் செவ்வையாய்ச் செய்வதாயினும் அடிகள் விரும்பார். தாமே கண்ணாடி விளக்குகளைத் துடைத்து - மண்ணெண்ணெயைத் தூய்மைசெய்து விளக்குகளில் வார்ப்பார். திரிகளை கத்தரிக்கோல் கொண்டு அளவாக வெட்டுவார். தாமே முகம் வழித்துக்கொள்வார். கண்ணாடிகளை முன்பின் அமைத்துத் தாமே முடிவெட்டிக் கொள்வார். ஒருநாளைக் கிருபோது வெந்நீராடித் தோய்த்துலர்ந்த ஆடைகளை இருபோதும் புதிதாக அணிவார். ஏனைய துறவிகள் போலன்றிக் காவியாலான உட்சட்டை, மேற்சட்டை, முக்காடிட்ட மேலாடைகளை அணிந்திருப்பர். எப்போதும் தூய்மையாக இருப்பார்.

அடிகளின் உணவு உடை மட்டுமின்றி, இருக்கைகள், படுக்கைகள் யாவும், மெத்தைகள் தைக்கப்பெற்றுச் சிறந்தவையா இருக்கும்.

**பரந்தநோக்கும், பொதுமையும்**

தாம் முற்றறிவின் மூதறிஞராயினும்- பிறரால் போற்றுதற் கென்றே தோன்றியவராயினும் அடிகள் தம்மை ஒரு பொருட்டாகக் கருதாது பிறதுறைகளில் வல்லவர் எவர் வரினும் அவர்பால் தாம் ஒன்றும் அறியாதவர் போன்று அவர் கூறும் கலைகளை - அறிவுரைகளை அமைதியுடன் பொறுமையுடன் கேட்பார். வடமொழிப் புலவர்கள் வந்தால் அவர்கள்பால் வடமொழியே அறியாதார் போன்று பல செய்திகளை ஐயங்களை கேட்டறிவர்.

ஒரு முறை, தமிழ்நாட்டுப் பொதுவுடைமைக் கட்சித் தலைவர்களான- திரு சி. சுப்பிரமணியம், பொன்மலை, எம். கல்யாண சுந்தரம் எம்.எல்.ஏ. ஆகியவர்கள் தம்மைக் காணவந்தபோது அவர்களிடம் பொதுவுடமைபற்றிய நுண் கருத்துக்களை நீண்டநேரம் அமைதியாகக் கேட்டறிந்தார். அவர்களிடம், ''எனக்கு அக்கட்சிக் கோட்பாடுகளில் ஆர்வம் உண்டு. ஆனால் , அவைப்பற்றி நன்றாகத் தெரியாது, அத்துறையில் நான் எளிய மாணவன். ஆதலால் நீங்கள் எனக்கு அக்கொள்கைகள் பற்றி நன்றாகச் சொல்லுங்கள்'' என்றார்.

பொதுவுடைமைக்கட்சி பற்றிய எல்லாக்கோட்பாடுகளையும் அடிகள் ஏற்கவில்லை. ஆயினும், மக்கள் யாவர்க்கும் எல்லா

வாய்ப்புக்களும், வாழ்க்கை நலங்களும் தந்து அவர்களை துன்பத்தினின்றும் நீக்கி இன்ப நிறைவளிக்கும் உள்ள அக்கட்சியின் கோட்பாடுகளை பணிகளை அடிகள் போற்றுவராயினர். அக்கட்சியின் சிறந்த நூல்கள் பலவற்றை வாங்கிப் படித்துமுள்ளார்.

சாதி, சமய வேறுபாடுகள், நிலை உயர்வு தாழ்வு, பால் பாகுபாடுகள் பாராது அடிகள் யாவரையும் தம்மொடு சமமாக வைத்தே பழகினார். எடுத்துக்காட்டாக, அடிகள் தம் வீட்டுச் சிறப்புக்கு மேற்குறித்தார் அனைவரையும் ஒருங்கு வைத்து அளவளாவி உடனுண்பார். அவர்களில் ஐரோப்பியர், வடவர், கிறித்தவர், முகம்மதியர், இந்துக்களில் அரிசனர் எல்லா வகுப்பினருமுண்டு.

தம் சமயத்தில் அடிகள் பேரார்வம் கொண்டவராயினும், ஏனைய சமயங்களையும், சமயப் பெரியார்களையும், திருக்கோயில் களையும் போற்றியும், வாய்க்குங்கால் வணங்கியும் வந்தனர்.

## நூல் நிலையம்

பேரறிவுப் புலவர் கோமானாகிய அடிகளின் நூல் நிலையத்தில் பல துறைகளிலும் சிறந்த 5000 க்கு மேற்பட்ட நூல்களுண்டு. அவற்றில் 90 விழுக்காடு ஆங்கிலமே. தமிழ் 4 பங்கே. வடமொழி 6 பங்கிருக்கும். நூல்களை வாங்கிய அன்றே அடிகள் அவற்றிற்கு பழுப்பு நிற அட்டையிட்டு, அவற்றுள் அவைகளை வாங்கிய நாளைக் குறித்துத் தம் கைச் சாத்தையும் இட்டுக் கண்ணாடிப் பேழைகளில் முறைப்படி அடுக்கி வைப்பர். வேண்டும் நூல்களை எடுத்துப் படித்து அவற்றிற் குறிப்புக்களையும் நுணுகிய தமது அழகிய கையெழுத்துக்களால் பதிந்து வைப்பர். இன்ன நூல் இன்ன பேழையில் இவ்விடத்துள்ளது என நன்கறிவர். தம் நூல் நிலையத்தில் வண்டு மலர்களிற்றேனைச் சேர்ப்பது போலச் சிறந்த நூல்களை அடிகள் தேடித் தொகுத்தார்.

நூல்களை அவர்கள் தொகுத்ததை அரும்பெரும் தன்னல மறுப்பே என்று கூறல் வேண்டும். நம் நாட்டில் செல்வர்கள் வீட்டில் பொன்னணிகளன்றி நூல்களேயிரா. ஆனால் பெரும் செல்வமில்லா அடிகளோ பெரும் செல்வமெனப் பெரும் பொருள் கொடுத்து வாங்கிச் சேர்த்து வைத்தது அரிய நூல்களைத்தான் அவற்றின் விலை ரூ. 30,000

## அம்பலவாணர் கோயில்

அடிகள் தம்மாளிகையின் மாடியில் அழகிய மண்டபம் ஒன்றை நிறுவினார். அதனுள் நாற்புறமும் மேற்கூறிய நூல் நிலையத்தை அமைத்தார். அவற்றினிடையில் மேற்புற நடுச் சுவரையொட்டி எண்கோண் வடிவில் ஓர் கோயில் அமைத்தார். அதுனுள் மரத்தேரில் அம்பலவாணர் அம்மை வடிவங்களையும், வேறொரு மரத்தேரில் நால்வர் வடிவங்களையும், சிவலிங்கம், பிள்ளையார், முருகன் முதலிய சிறிய திருவுருவங்களையும் அமைத்து நாடோறும் முற்பகலிலும் இரவிலும் வழிபட்டு வந்தார்கள்.

## உருகும் அடியார்

அடிகளைப் பக்தியின் வடிவமென்றே சொல்லிவிடலாம். எப்போதும் - எச்செயலிலும் சிவனை மறவாத் திருவுள்ள முடையராவர். அடிகள்பால் மிகுந்து காணப்பட்ட உணர்ச்சி கவர்ந்த வடிவம் அம்பலவாணர் அம்மை வடிவமே! காவியுடையுடன் வழிபாட்டு நேரங்களில் தூய வெண்ணிலு, சந்தனம், குங்குமம் அணிந்து கொண்டு, தேவாரத் திருமுறைகளை இசையும் உருகும் வண்ணம் தாளந் தட்டிக்கொண்டு சிவபிரானை வாயாரப் பாடுவார். முதல் பாட்டிலேயே கண்ணீர் வழியத் தொடங்கிவிடும். மெய்மயிர் சிலிர்க்க - நாத்தழுதழுக்க 'குறுவெயர் பொடிப்ப அடிகள் பத்திமை நிறையாய் வழிபடுவது காண்டற்கரிய காட்சியாகும்.

இறை நம்பிக்கையில் குழந்தை போன்றவர் தம் செயல்கள் அனைவற்றிற்கும் அவரே உறுதுணையாயிருந்து நடத்தி வைக்கின்றார் என்று எப்போதும் சொல்லிக்கொண்டே இருப்பார். இறைவன் புகழையும் அடியவர் பெயரையும் நினைத்தாலும் உள்ளங்குழைந்து கண்ணீர் பொழிவர். அடிகளனைய பத்திமை உள்ளம் உடையாரைக் காண்டல் அரிதரிது.

## மானம் மிக்கவர்

தாம் வாழ்ந்த காலத்திலேயே அடிகள் இணையற்ற புலவர் தலைவராய்த் தமிழகத்துத் தலைமைப் புலவர்களாலும் பெரும் செல்வர்களாலும், பெருநிலையினராலும் போற்றிச் சிறப்பித்துக் கொண்டாடப் பெற்றார். தம் கல்விச் செல்வத்தின் அருமை

பெருமைகளை அறிந்திருந்த அடிகளாரை முற்கூறிய யாவரும் வந்து காண்பர், வணங்குவர். ஆனால், அடிகளாரோ புலமையின் தலைமையாய்ப் போற்றும் மனத்தராய்த் தம்மை வந்து வணங்கிக் கண்டு சென்ற அவர்களில் எவர் வீட்டிற்கும் சென்றவரல்லர் . ஆனால், ஏழையடியார்கள் வீட்டிற்கும், புலவர் சிலர் வீட்டிற்கு மட்டுமே சென்றுள்ளார்.

கல்லூரிகளிலும், பல்கலைக்கழகங்களிலும் அவர்களைப் பேராசிரியராகப் பெரும் சம்பளத்தில் அமர்த்த உரிய தலைவர்கள் மன்றாடி வேண்டினர். அவர்களோ, காவியுடை புனைந்து இறைவனுக்குத் தொண்டாற்றும் யான் எவர்க்கும் அடுத்த நிலையில் அமரேன், என்று உறுதி கூறிவிட்டார். பல்கலைக் கழகங்களின் எந்தக் குழுவிலும் உறுப்பினராயிருக்க அடிகள் இசையவில்லை. தம்நூல்களைப் பாடமாக வைக்கும்படி அவர்கள் யாரையும் கேட்டதே இல்லை. பல்கலைக்கழகங்கள் உட்படப் பல பெருநிலையங்கள் தர விரும்பிய பட்டங்களை அடிகள் மறுத்துவிட்டார்கள்.

எந்நிலையிலும், யாரோடும் சேராமல் பிறர் உதவியை நாடாமல் - எவ்வகையான நிலையான வருமானமுமின்றி அடிகள், தம் நூல் விற்பனைகளாலும் அன்பர்களின் காணிக்கைகளாலும் எப்போதோ கிடைக்கும். சொற்பொழிவு காணிக்கையாலும் தம் நிலைக்குக் குறைந்த ஊதியங்கொண்டே செல்வமான வளமிக்க நிறைவாழ்வு வாழ்ந்தார்கள். ஏறத்தாழ 38 ஆண்டுகள் இவ்வாறு வாழ்ந்தார்கள்.

அழிதன்மாலைத்தான செல்வத்தை நாடிச் செல்வர்களையோ - நிலையினரையோ அடிகள் நாடிச் செல்லவில்லை. அவர் என்ன நினைப்பாரோ- இவர் என்ன செய்வாரோ- என்று அடிகள் சிறிதும் அஞ்சமாலும், வருகின்ற துன்பங்களைப் பொருட்படுத்தாமலும் தமிழினம் வாழ்தற்கான கருத்துக்களைப்ப பேசியும் எழுதியும் வந்தார். தன்னலம் பாராட்டியிருப்பின் - ஏச்சுப் பேச்சுக்கு அஞ்சியிருப்பின் அடிகள் தனித்தமிழ் இயக்கத்தைத் காணக் கனவு கூடக் கண்டிருக்க முடியுமா? தமிழின் நாகரிக, கலை, இன, சமய , முன்னேற்றங்கட்குப் பணியாற்றக் கூடுமா? இன்று தமிழகத்தில் தழைத்தோங்கியுள்ள தமிழ், இன, நாகரிக, இன, கலை, சமய உணர்ச்சிகளுக்கு- எழுச்சிகட்கு முதற் காரணர் அடிகளேயாவர்

என்பதைத் தமிழ் உணர்ச்சியுடையார் ஒவ்வொருவரும் நன்கறிவர். எழுத்துக்களிலும் அவர்கள் அடிகளை அவ்வாறே போற்றியுள்ளனர். தமிழினத்தின் உயிர்- உணர்ச்சி, தலைமை யாவும் அடிகளேயாவர்.

தமிழ்மொழியை வாழவைத்து - தமிழினத்தை உயர்வித்து- தமிழ் மரபைக் காத்துத் தமிழ் வடிவாய்த் திகழ்ந்தவர் நம்மடிகளாரேயாவர். வானத்திற்கோர் ஞாயிறு போன்று முக்காலத் தமிழுலகிலும் அடிகள் ஒருவரே தனித் தலைவர். தமிழ்த் தொண்டர். அடிகளால் தமிழகம் உயர்ந்துவிட்டது. தமிழ் என்றும் அழியாநிலை பெற்றுவிட்டது. சைவ நெறி தலைமை பெற்று விட்டது.

**சாந்தம்மாளின் சால்பு**

இத்தகு தலைமகனாம் அடிகளைத் தமிழகத்துக்குத் தந்தவர், அவர் திரு மனைவியாராகிய சவுந்தர வல்லியம்மையாராகிய சாந்தம்மாளேயாவர். சவுந்தரம்மாள் எழுதப் படிக்கத் தெரியாதவர். அவர் தம் கணவரைத் தெய்வமாகக் கொண்டு போற்றினார். அவரைக் குழந்தைபோல் வளர்த்து வாழ்வித்தார். நெய் இல்லாவிடில் விளக்கு எரியுமா? ஒளி தருமா? அவ்வாறே அம்மையார் இல்லாவிட்டால், அடிகளார் நூல்கள் எழுதியிருக்க மாட்டார், தொண்டுகளாற்றியிருக்கமாட்டார். அன்பு வடிவான சாந்தம்மா தன் உடல், உயிர், வாழ்வு அனைத்தையும் கணவனுக்கே வழங்கிவிட்ட கற்பரசியாவர். அடிகட்காகவே வாழ்ந்தார். அவர் சொல், செயல், நினைவு யாவும் கணவரைப் பற்றியனவே. அம்மையாரைப் பற்றிய இவ்வுண்மை உரைகள் யாவும் அடிகளாருடையனவேயாகும். பொன்னைக் கண்டு மகிழ்கின்றோம். போற்றுகின்றோம். பயன் கொண்டு வாழ்கின்றோம். ஆனால், அதனைப் பேருழைப்பினால் ஆக்கித் தந்தவனை நினைத்துப் போற்று வாருண்டோ? வாழ்க சாந்தம்மையின் வண்மை.

அம்மையார், 'நடராசனை' விரும்பி வேண்டி வந்தவாறே அடிகட்கு முன்பு 24-5-50 ல் பல்லாவரத்தில் காலமானார். அன்றிரவு அவருடல் எரியிற் கலந்தது. அது முடித்து அளவிலாத் துயரை உள்ளடக்கிக்கொண்டு அடிகள் என்னைக் கூப்பிட்டார்கள். சென்று முன்னின்றேன். ''திருநாவு! உன் அம்மா போய்விட்டாள். இனி நானிவ்வுலகில் வாழ்ந்து பயனில்லை. நானும் விரைவில் இறந்து விடுவேன்'' என்றார். அன்றவர்கள் யாதொரு நலக்குறைவுமின்றி

இருந்தார். 15-9-50-ல் அவர் தாம் கூறியாங்கே மறைந்தார். சாவிலும் ஒன்றுபட்ட காதலர்கள் அவர்கள்.

## அடிகள் இறுதிநிலை

தமிழகம் செய்த தவப்பயனாய்த் தோன்றிய அடிகள் "என் கடன்பணி செய்து கிடப்பதே" என்னும் கருத்துடையராய் - "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்ற அருள் உடையராய் சிவநெறியும் செந்தமிழுமே தமிழ் மக்களை வாழ்விக்கும் குறிக்கோள்களாம் என்ற ஆர்வமுடைய ராய்த் தம் ஆராய்ச்சிக் கலப்பை கொண்டு தமிழர் உள்ளமாம் நன்னிலத்தே எழுத்து, சொல், என்னும் காளைகளைப் பூட்டி உழுதார். அரிய கருத்துக்களாம் வித்துக்களிட்டுள்ளார். அயராது பணியாற்றல் என்னும் நீர் பாய்ச்சினார். மூடப்பழக்கவழக்கங்களாம் களைகளைக் களைந்தார். அறிவாம் உரமிட்டார். பிறமொழி ஆதிக்கம் என்னும் மாடுகள் மேய்ந்து தமிழ்ப் பயிரை அழிக்காதவாறு தனித்தமிழ் என்னும் வேலியிட்டுப் பாதுகாத்தார்.அதனால் தமிழ்நெறி என்ற பயிரை வளர்த்துத் தமிழினத்தை வாழ வைத்தார். பிறவி எடுத்த பயனை அடைந்தாராகி நிறை வாழ்வுற்றார்.

இவ்வாறு அறுபது ஆண்டுகள் பணிபுரிந்த அடிகட்குத் சிவபிரானருள் நிலைத்த ஓய்வு தரவிரும்பியபடியால் 1950 -ம் ஆண்டு ஆகஸ்டு 15-ல் அடிகள் உடலம் குறையப் பெற்றார். அப்போதவர்கள் அகவை 75. பதினைந்து நாட்கட்குப் பிறகு படுத்த படுக்கையராய் விட்டார். சென்னை நகரின் தலைசிறந்த மருத்துவர்கள் ஓடோடி வந்து மருத்தூட்டினர். அன்பர்கள் வருத்தமுடன் சூழ்ந்தனர். அடிகளின் குடும்பத்தார் அல்லல் உற்றுச் சூழ்ந்தனர். இவ்வாறு 15நாட்கள் கழிந்தன. அடிகள் அம்பலவாணரின் திருவுருவப் படத்தை வணங்கிக்கொண்டே 15-9-1950 பிற்பகல் 3.30-க்குச் சிவன் சேவடியடைந்தார். தமிழ்நாடு இருண்டது.

மறுநாள் மாலை பன்னூற்றுவர் சூழ அடிகளின் பொன்னுடல் முறைப்படி நீராட்டப்பட்டது. அழகிய மலர் அணையில் அமர்த்தப் பட்டது. மலர் மாலைகளால் அவர்தம் திருமேனி ஒப்பனை செய்யப்பட்டது. திருவாசக ஓதலுடன் அவர்கள் திருமேனி ஊர்வலமாகத் தாங்கிச் செல்லப்பட்டுப் பல்லாவரம் சுடுகாட்டை அடைந்தது.

அடிகளின் பொன்னுடல் தலைமையாய் அமர்ந்திருக்க நடந்த இரங்கற் கூட்டத்தில் டாக்டர், ரா.பி. சேதுப்பிள்ளை, டாக்டர்.மு. வரதராசனார், கி. ஆ. பெ. விசுவநாதம், ஜனாப் ஷாபி முகம்மது முதலியோர் அடிகளின் மாட்சிமைகளைக் கூறி அவர்தம் மறைவிற்கிரங்கினர். அவர்களுள் டாக்டர் மு. வ. பேசியபோது, "தமிழ்நாட்டின் பொதுச் செல்வமன்றோ இத்தமிழுடல்! இதனை அரசினர் அரசாங்க அணிவகுப்பினிடையே கொணர்ந்தன்றோ அடக்கம் செய்ய வேண்டும்? தமிழ்நாட்டுக்கு ஒப்பற்ற இலக்கியங் களைத் தந்த கை செயலற்றதே" என உளமுருகியுரைத்தார்.

இவ்வுருக்க உரை கேட்டார் அனைவரும் "ஆ! ஆ!!" எனக் குமுறினர் பின்னர் அடிகள் உயிர் துறக்கு முன்பே விரும்பியுரைத்த வாறு அவர் தம் புகழுடல் அமர்த்தப்பட்டவாறே எரியூட்டப் பட்டது. தமிழுலகம் கண்ணீர் விட்டது எங்கும் நிலையாமை உணர்வு நிலைபெற்றது.

"தந்தையார் போயினார், தாயாரும் போயினார்
தாமும் போவார்.
கொந்தவேல் கொண்டொரு கூற்றத்தார்
பார்க்கின்றார் கொண்டு போவார்.
எந்தநாள் வாழ்வதற்கே மனம் வைத்தியால்
ஏழை நெஞ்சே!
அந்தண் ஆரூர் தொழுதுய்யலாம் மையல்
கொண்டஞ்சல் நெஞ்சே."

(திருஞானசம்பந்தர் தேவாரம்)

## அறிவுருவம்

அடிகளின் ஊனுடல் மறைந்ததாயினும் அவர் தம் அறிவுருவத்தை அவர்கள் யாத்த ஏறத்தாழ மூன்று ஆங்கில நூல்கள் உட்பட, ஐம்பது அரிய நூல்களில் எக்காலத்தும் தமிழ் நாடு உள்ளவரையும் தமிழ் மக்கள் கண்டு கற்று இன்புறலாம் அன்றோ? அறிஞன்றன் உடலழிகின்றதே அன்றி அவன்றன் உயிராகிய அறிவு என்றும் புகழ்மணம் வீச வீற்றிருக்கின்றதன்றோ? அவன்றன் அறிவுரைகள் தன்றோ? ஆதலால், மன்பதை வாழ அறிஞன் என்றும் வாழ்கின்றான். அறிஞர் கோமானாகிய அடிகள் என்றும் வாழ்கின்றார். வாழ்க! அடிகளின் புகழ்! வளர்க அவர்தம் கொள்கைகள்! ஓங்குக தமிழ் மொழி! உயர்க சிவநெறி!

★★★

